

| தோற்றம் : | மறைவு : |
| --- | --- |
| 25—4—1912 | 10—10—1974 |

தமிழ்நாட்டு வரலாற்றுக் குழுவின் தலைவராகப் பணியாற்றிய

**டாக்டர் மு. வரதராசனார், M.A., B.O.L., Ph.D., D.Litt. (Ulster).**

**அவர்களை நன்றி உணர்வுடன் நினைவுகூர்கிறோம்.**




# தமிழ்நாட்டு வரலாறு

## தொல்பழங்காலம்

அளிப்போர்

தமிழ்நாட்டு வரலாற்றுக் குழுவினர்

தமிழ்நாடு அரசு வெளியீடு

1975

# மதிப்புரை

மாண்புமிகு டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி
முதலமைச்சர், தமிழ்நாடு

*வரலாறு—காலத்தின் கண்ணாடி !*

*வரலாறு—நாட்டுக்கு இன்றியமையாதது !*

*வரலாறு—உடலுக்கு உயிர் போன்றது!*

உலகத்தில் பல நாடுகள் தங்களின் வரலாற்றை வகைப் படுத்தி, நெறிப்படுத்தி வெளியிட்டுவருகின்றன. 'இந்த நூற்றாண்டில் இந்த நாடு இவ்வாறு இருந்தது'. 'அந்த நூற்றாண்டில் அந்த நாடு அவ்வாறு இருந்தது', என்றெல்லாம் படிக்கின்றோம். ஆனால் தமிழக வரலாறு மட்டும் அறுதியிட்டுக் கூறமுடியாதபடி—முரண்பட்ட கருத்துகளுக்கு இருப்பிடமாக —மாறுபட்ட கருத்துகளுக்கு விளைநிலமாக இருந்துவந்திருக் கிறது.

"கம்பர் வாழ்ந்தது 9ஆம் நூற்றாண்டு" — ஒரு சாரார் கூறுகிறார்கள்.

"இல்லை! இல்லை ! அவர் வாழ்ந்தது 12ஆம் நூற்றாண்டு"— மற்றொரு சாரார் இப்படிக் கூறுகிறார்கள்.

"கற்பரசி கண்ணகி கடைசியாகச் சென்ற இடம் திருச் செங்கோடு மலை" —இப்படி ஒரு சாரார் !

"இல்லை ! இல்லை ! அவள் இறுதியாகப் பயணம் செய்த பகுதி மதுரை மாவட்டத்துச் சுருளிமலை"—இப்படி வேறொரு சாரார்.

"திருவள்ளுவர் ஜைன சமயத்தைச் சார்ந்தவர்"—இப்படி ஒரு சிலர்.

"இல்லை! இல்லை! அவர் சைவ சமயத்தைச் சார்ந்தவர்"—இப்படி வேறு சிலர்.

இவ்வாறு, நாடறிந்தவர்களின் வாழ்க்கை வரலாற்றிலேயே குழப்பங்களை நாம் உற்பத்தி செய்து வைத்திருக்கும் போது—நாட்டு வரலாறு குழப்பமின்றி இருந்திருக்க முடியுமா? பல்வேறு கருத்துரைகள்—பல்வேறு ஆய்வுரைகள்—பல்வேறு தெளிவுரைகள் ஆராய்ச்சி என்ற பெயரில் தமிழ்நிலத்தில் பயிராகி இருக்கின்றன. பயிர்களின் ஊடே களைகளும் இருக்குமல்லவா? அவைகளைக் களைந்து—பயிர்களைக் காத்து—தூய நெல்மணிகளை அறுவடை செய்யவேண்டும் என்ற அவா தமிழக அரசுக்குத் தோன்றியது.

தமிழக அரசுக்குத் தோன்றியது என்று சொல்வதைவிட, இன்று தமிழகத்தை ஆளும் கட்சி, எதிர்க் கட்சியாக இருந்த காலத்திலேயே அதற்குத் தோன்றியது என்று குறிப்பிடலாம். "தமிழக வரலாறு தெளிவான முறையில் எழுதப்பட வேண்டும்" என்ற கோரிக்கையைத் தமிழ்நாடு சட்டமன்றத்தில் எதிர்க்கட்சி வரிசையில் இருந்தபோது நாங்கள் தெரிவித்திருக்கிறோம். கோரிக்கையைச் செயல்வடிவம் ஆக்கிட இன்றைய தமிழ்நாடு அரசு முடிவு செய்தது; அதில் முனைந்து நின்றது.

1970ஆம் ஆண்டில் தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றத்தைக் கூட்டி தமிழ்ச் சான்றோர்களை அணுகித் தமிழக வரலாற்றைப் படைத்துத்தரும்படி கேட்டுக்கொண்டது தமிழக அரசு.

> "இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து
> அதனை அவன்கண் விடல்"

என்னும் திருக்குறளுக்கு இணங்க இந்த அரும்பணியை ஆற்றிடும் குழுவுக்கு டாக்டர் மு. வரதராசனார் அவர்களைத் தலைவராக நியமித்தது அரசு.

வரலாற்று அறிவும், இலக்கியச் செறிவும், புதுமை உணர்வும், வாதத் திறனும் கொண்ட டாக்டர் மு. வரதராசனார் அவர்கள் தமது பணியைத் திறம்பட நடத்தித்

'தமிழக வரலாறு' (தொல்பழங்காலம்) முதல் தொகுதியை வழங்கியுள்ளார்கள். இதன் அருமையையும் பெருமையையும் அனைவரும் உணர்ந்து பாராட்டக்கூடிய இந்த நேரத்தில், டாக்டர் மு. வ. அவர்கள் நம்மிடையே இல்லை என்றாலும் அவர் தம் உழைப்பு நூலாக மலர்ந்திருக்கிறது.

'தமிழ்நாட்டு வரலாறு' (தொல்பழங்காலம்) முதல்தொகுதி தற்போது வெளியாகியுள்ளது. இன்னும் ஐந்து தொகுதிகள் வெளிவர இருக்கின்றன.

இந்த முதல்தொகுதியில் நிலப்பரப்பின் தோற்றம், நிலவியல், இனமரபு, பழைய கற்காலம், புதிய கற்காலம், பெருங்கல் காலம் என ஆறு பிரிவுகள் உள்ளன. ஆறு பிரிவுகளின் கீழும் பல செய்திகள்—தெளிவாகத் தொகுத்துத் தரப்பெற்றிருக்கின்றன.

"கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு
முன்தோன்றி மூத்த குடி"

என நமது தமிழ்ப் புலவர்கள் அடிக்கடி எடுத்துச் சொல்லி வருவதை நாம் கேட்டிருக்கின்றோம். ஆனால் அக்காலம் எக்காலம் என்பதை நாம் அறிந்ததில்லை. அதற்குரிய விளக்கம் 'நிலப்பரப்பின் தோற்றம்' என்ற பகுதியில் கீழ்க்கண்டவாறு தெளிவுறுத்தப்பெற்றிருக்கின்றது.

"ஆர்க்கேயன் பேரூழியின் முடிவில் தமிழ்நாட்டுக்கு வட திசையில் கடல் இருந்தது. தெற்கு, கிழக்கு, மேற்குத் திசைகளில் கடல் இல்லை. இன்றைய ஆந்திரம், மத்தியப்பிரதேசம், ஒரிசா, ராஜஸ்தான் ஆகிய மாநிலங்களின் சிற்சில பகுதிகள் கடலுள் மூழ்கிக் கிடந்தன. நிலவுலகை உலுக்கிய ஊழி மாற்றங்களுக்குப் பிறகு தமிழ்நிலத்தில் பேரமைதி நிலவியது. இக்காலத்தில்தான் தமிழ்நாட்டின் நிலப்பகுதி அசைக்க முடியாத உறுதியுடைய அடித்தளத்தைப் பெற்றது. எனினும் காற்று, மழை, வெயில் முதலானவற்றின் சீற்றத்திற்குட்பட்டது. அதன் விளைவால் தொடர்ந்து அரிப்பு நேர்ந்ததன் காரணமாக ஆர்க்கேயன் பாறைகள் நொறுங்கி, மண் தோன்றலாயிற்று.

"கல் தோன்றி மண் தோன்றாக் காலம்" எனத் தமிழ் இலக்கியம் காட்டிடும் தொன்மை, நிலப்பொதியியல்

நிலைநாட்டியுள்ள மேற்கூறிய கால எல்லையேயாகும். இக்காலம் முதற்கொண்டே தமிழ்நாட்டின் நிலப்பரப்பு உறுதிநிறை அமைதியைக் கொண்டதாக நிலைத்துவிட்டது.

நமது சேலத்தின் பெருமை நம்மவர் பலருக்குத் தெரியாது. அதன் பெருமை இந்த நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது. அந்த வரிகளைப் பார்ப்போம்.

"தமிழ்நாட்டின் தொழில் வளத்திற்கு வழிகோலும் கஞ்ச மலைப்பகுதியின் இரும்புக்கனிப் படுகைகளும் ஆர்க்கேயன் தொகுதிப் பாறைகள் எனத் தீர்மானிக்கப்பட்டுள்ளன. சேலம் மாவட்டத்துக் கஞ்சமலைப் பகுதிப் பாறைகள் உலகிலேயே மிகப் பழமையான பாறை வகைகளைச் சேர்ந்தவை. இன்று இதன் வயது ஏறத்தாழ 450 கோடி ஆண்டுகள் எனலாம். இவ்வளவு பழமையான பாறைகள் உலகில் ஒரு சில பகுதி களில் மட்டுமே உள்ளன என்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளன."

இவ்வாறு, 'நிலப்பரப்பின் தோற்றம்' என்ற பகுதியில் மாமல்லபுரம், சேலம், நீலகிரி, பழனிமலை, ஆனைமலை போன்ற பகுதிகளின் சிறப்பு தெளிவாக எடுத்துரைக்கப்பட்டிருக்கிறது.

"இந்தியப் பெருநிலப் பரப்புகளை மிகப் பேரளவில் கடல் விழுங்கியபோதுகூடத் தமிழகத்தை எக்காலத்திலும் கடல் கொள்ளவில்லை; புதுவையை அடுத்த சிறுநிலப் பகுதியிலிருந்து காவிரிப் பள்ளத்தாக்குவரை உள்ள சிறுநிலப்பரப்பைக் கடலெழுச்சி தாக்கியது"—என்னும் செய்திகள் ஜுராசிக் ஊழி, கிரிடேசியஸ் ஊழி ஆகியவற்றில் நடைபெற்றிருப்பதை இந்த நூல் தெளிவுறுத்தியுள்ளது.

இங்கிலாந்து—அயர்லாந்து, இங்கிலாந்து — பிரான்சு, அலாஸ்கா—சைபீரியா, சைபீரியா—ஜப்பான், மலேசியா—சுமத்திரா—ஜாவா—போர்னியோ, ஆஸ்திரேலியா—நியூகினி, ஆஸ்திரேலியா-தாஸ்மேனியா, இந்தியா-இலங்கை ஆகியவை ஒருகாலத்தில் ஒருங்கிணைந்த நாடுகளாக முன்பு இருந்தன என்ற செய்தியைப் (பக்கம் 23, 24) படிக்கும்போது வியப்பு மேலிடுகிறது.

'நிலவியல்' என்னும் பகுதியில் தமிழ்நாட்டின் தொன்மை, நீர்நிலத் தொடர்பு வாய்ப்பு, பெயர்வழக்கு, எல்லை,

தட்பவெப்பநிலை, பருவம், நில அமைப்பு—தெளிவாகக் கூறப் பட்டுள்ளன.

பெயர்வழக்கு என்னும் பகுதியில் தமிழ்நாட்டிற்கு அப்பெயர் எவ்வாறு ஏற்பட்டது என்பதற்குரிய விளக்கத்தை இந்த நூல் கூறுகிறது.

தமிழ்நாட்டை நாவலந்தீவு என்றும், நாவலந் தண்பொழில் என்றும் வழங்கிவந்திருக்கிறார்கள். இது தமிழ்நாட்டை மட்டு மல்லாமல் தமிழ்நாடு இணைக்கப்பெற்றுள்ள இந்திய நிலப்பரப்பு முழுவதையும் உணர்த்தியதோ என்று எண்ணுவதற்கும் வாய்ப்பு உண்டு.

எனவே தமிழ்நாட்டுக்கு, தமிழ்நாடு எனும் இப்பெயர் எவ்வாறு வந்தது என்பது விளக்கப்பட வேண்டியதுதான். அந்த விளக்கத்தை இந்த நூலின் 30, 31-வது பக்கங்களில் காணலாம்.

" சங்ககாலத்தில் தமிழகம் தீவாக விளங்கவில்லை. ஆரியர் இந்தியாவில் நுழைந்த காலத்திலேகூட அது தீவாக விளங்காமல் முந்நீர் நிலமாகவே விளங்கியது. ஏறத்தாழ இரண்டு இலட்சம் ஆண்டுகளுக்கு முற்பட்ட காலப்பகுதியில் நன்னீர்க் கடல்கள் இப்போதுள்ள சிந்து, கங்கை ஆற்றுப் பகுதிகளில் ஒன்றை யொன்று தொட்டுக்கொண்டு, அரபிக்கடலையும், வங்காளக் குடாக்கடலையும் தொடுவதுபோலக் கிடந்தன. இதனால் நேர்ந்த நில அமைப்பினை அக்கால மக்கள் (தமிழர்), தீவு என்று குறிப்பிட்டனர் போலும். இதன் வழியே மரபு வழக் காகச் சிலப்பதிகாரமும் மணிமேகலையும் தீவு என்று குறிப்பிடு கின்றன என்று கொள்ளலாம். எப்படியாயினும் தமிழ்நாட்டிற்கு வழங்கிய மேற்கண்ட பெயர்கள் இயற்கை அமைப்பை ஒட்டி அமைந்தவையே என்பது தெளிவு.

" தமிழ்மொழி பேசும் மக்கள் வாழ்ந்துவந்த நிலப்பகுதி பண்டைக் காலத்தில் 'தமிழ்' என்னும் சொல்லாலேயே குறிக்கப்பட்டுவந்தது. பின் தமிழகம், தமிழ்நாடு, தமிழ் நாட்டகம், தமிழ் நன்னாடு என்னும் சொற்கள் தோன்றி அந்த நிலப்பகுதியை உணர்த்தலாயின. இந்தப் பெயர்கள் மொழியின் அடிப்படையில் தமிழ்நாட்டுக்கு அமைந்தவை

என்னும் உண்மையைத் 'தமிழ்கூறு நல்லுலகம்' என்னும் பழந்தொடர் உணர்த்துகிறது."

'இனமரபு' என்னும் பகுதியில் இனம், மொழிவழி, உயிரியல் வழி, உடற்கூற்று அமைப்பு வழி ஆகியவற்றின் வழியாக இனப் பாகுபாடு விளக்கப்பட்டிருக்கிறது.

"திராவிட இனத்தின் தொன்மை" என்னும் தலைப்பில் உள்ள 'திராவிடர் - சொல்லும் பொருளும்' என்னும் செய்தி ஆய்வு நிறைந்ததாகும்.

திராவிடம் வடசொல் அன்று, தமிழ்ச் சொல்லே என்று ஆணித்தரமாக விளக்கப்பட்டிருக்கிறது.

"தமிழம், தமிளம் என்றாகிப் பின்னர்த் திரமிளம் என்றாகி அது திரமிடம் என்றாகி, பின்னர்த் திராவிடம் என்றாகியுள்ளது" என்று சான்றுகள் காட்டி நிறுவப்பட்டிருக்கிறது.

'பழைய கற்காலம்' முதல்கற்காலம், இடைக்கற்காலம், கடைக்கற்காலம் என முப்பிரிவுகளாகப் பிரிக்கப்பெற்றுள்ளது. முதல்கற்காலக் கருவிகள் தமிழ்நாட்டில் செங்கற்பட்டு, வட ஆர்க்காடு, தஞ்சை, மதுரை, திருச்சிராப்பள்ளி ஆகிய மாவட்டங்களில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள செய்தியை இந்த நூல் தெளிவாகத் தெரிவித்திருக்கிறது.

காலத்துக்குக் காலம் மாறுபட்டுப் புதிய கற்காலத்தில் மக்கள் பேனாக்கத்தி போன்ற கருவிகளைப் பயன்படுத்தும் நிலை எய்தியதையும் 'புதிய கற்காலம்' என்னும் பகுதி தெளிவுறுத்தியுள்ளது.

அடுத்து, 'பெருங்கல் காலம்' என்னும் பகுதியில், "ஈமச் சின்னங்களைப் பயன்படுத்திய மக்கள் வாழ்ந்த காலம் பெருங்கல் காலம்" என்று வரையறுக்கப்பட்டுள்ளது. இவ்வாறு சொல்வதனால், நடுகல்தான் இது என்று கருத முடியாது என்றும், அது வேறு, பெருங்கல் வேறு என்றும் விளக்குகிறது இந்நூல்.

"சாம்போது தமிழ்படித்துச் சாகவேண்டும்—எங்கள்
சாம்பல் தமிழ்மணந்து வேகவேண்டும்"

என்றெல்லாம் தமிழ்ப் பெருமக்களாகிய நாம் சொல்லி வருகின்றோம். உடலுக்கு எரியூட்டல் மிகப் பிற்காலத்தில் தான் ஏற்பட்டிருக்கிறது. மிகப் பழங்காலத்தில், இறந்து போன உடல், திறந்த வெளியில்தான் கிடத்தப்பட்டிருக் கின்றது. பின்னர், படிப்படியாகக் கல்லறையின் உள்ளே வைக்கப்பட்டது என்னும் செய்திகள் தெரிவிக்கப்பட்டுள்ளன.

"முதன்முதலாக ஈமச் சின்னங்களை ஊர் இருக்கைகளி லிருந்து தள்ளித் தனியாக ஓரிடத்தில் புதைக்கும் வழக்கம் தமிழ்நாட்டைப் பொறுத்தவரையில் (தென்னிந்தியாவைப் பொறுத்தவரையில் என்றே சொல்லலாம்) பெருங்கல் காலத்தி லேயே வழக்குக்கு வந்தது" என்று இந்த நூல் (பக்கம் 215) கூறுகிறது.

பழைய கற்காலத்திலும், புதிய கற்காலத்திலும் இறந்தவர் களின் உடல், வீடுகளுக்குள்ளோ மிக அண்மையிலோ புதைக்கப்பட்டன. ஆனால் பெருங்கல் காலத்தில்தான் மாற்றம் ஏற்பட்டிருக்கிறது.

இந்த ஆறுவது பகுதியில் தமிழ் மக்களின் வாழ்க்கை முறை, சமய நம்பிக்கைகள், கால எல்லைகள் ஆகியவை விளக்கப்பட்டுள்ளன.

பெருங்கல் காலத்தில் வேளாண்மை சிறந்திருந்தது என்பதை இந்த வரலாற்று நூல் எடுத்துக் கூறுகிறது.

"புதிய கற்காலத்தில் துவக்க நிலையில் இருந்த வேளாண் மை பெருங்கல் காலத்தில் நன்றாக வேரூன்றிப் பரவியது. நன்செய்ப் பயிரான நெல்லும், புன்செய்ப் பயிர்களான கொள், கேழ்வரகு, சோளம் முதலானவையும் இக்காலத் தில் விளைவிக்கப்பட்டன. இன்று தென்னிந்தியா முழுவதும் பயிரிடப்படும் குறுவைநெல், இந்தப் பெருங்கல் காலத்திலேயே விளைவிக்கப்பட்டது என்பதற்கு ஆதிச்சநல்லூரில் தடயம் உள்ளது."

வேளாண்மை அக்காலத்திலேயே சிறந்திருந்ததை இவ்வாறு இந்நூல் (பக்கம் 227) எடுத்துக்காட்டியுள்ளது.

மொத்தத்தில்—

கடும் உழைப்புக்கு எடுத்துக்காட்டு இந்நூல். உழைப்பு என்றும் வெற்றிபெறும் அல்லவா? எனவே, இந்த வரலாற்று நூலும் பெரும் வெற்றி பெறும் என்பது உறுதி.

தமிழக அரசு, தமிழ் அறிஞர்கள் ஆகியோரின் முயற்சியால் உருவாக்கப்பெற்றுள்ள இந்தத் 'தமிழ்நாட்டு வரலாற்றை'த் தமிழ்கூறு நல்லுலகம் ஏற்றிப் போற்றும் என்பது எனது நம்பிக்கை.

# அணிந்துரை

மாண்புமிகு டாக்டர் நாவலர் இரா. நெடுஞ்செழியன்
கல்வி அமைச்சர், தமிழ்நாடு

ஒரு நாட்டின் அருமையையும் பெருமையையும், நாகரிக வளர்ச்சியையும் பண்பாட்டு மேன்மையையும், இயற்கை வனப்பையும் செயற்கைச் செழிப்பையும், அறிவுச் சிறப்பினையும் ஆற்றல் சிறப்பினையும், பொலிவையும் வலிவையும் அறிந்து கொள்வதற்குப் பயன்படுகிற ஒரு சிறந்த கருவி வரலாறே யாகும்.

தாம் பிறந்த நாடு தனிச் சிறப்புகளைக் கொண்டது, பாரோர் பின்பற்றும் வளர்ச்சியினைத் தழுவியது, உலகோர் போற்றும் பண்பாட்டு உயர்வினைப் பெற்றது, இயற்கை எழில் மிகுந்தது, செயற்கை வளம் செறிந்தது, அறிவுத்திறன் மிக்கது, ஆற்றல் திறன் கொண்டது என்று அறியும்போது நாட்டுப் பற்றுக் கொண்ட ஒவ்வொருவருக்கும் அது தனிப்பெரு மகிழ்வை அளிக்கும் என்பது கண்கூடு. அப்படிப்பட்ட பெருமகிழ்வை அளிக்கத்தக்க ஆற்றல் படைத்தது சிறப்புறத் தொகுக்கப்பட்ட நாட்டு வரலாறேயாகும்.

நம் தாய்த்திரு நாடான தமிழ்நாட்டின் அருமை பெருமைகளை விரிவாகவும் விளக்கமாகவும், தெளிவாகவும் திட்பமாகவும் எடுத்துரைக்கவல்ல வரலாற்று நூல் ஒன்று இதுகாறும் தோன்றப்பெறாமல் இருந்துவந்தது ஒரு பெருங்குறையேயாகும். தமிழ்நாட்டைப்பற்றிச் சிலசில செய்திகளைத் துண்டு துண்டாகக் கூறும் சிறுசிறு வரலாற்று நூல்கள் அவ்வப்போது வெளிவந்தனவே அல்லாமல், தமிழ்நாட்டின் முழு வரலாற்றை, தொடர்பான வரலாற்றைத் தொகுத்துக் கூறும் ஒரே வரலாற்று நூல் வெளியிடப்பெறவில்லை.

தமிழ்நாட்டுக்கும், தமிழ் மக்களுக்கும், தமிழ் மொழிக்கும் பெருமை தரும் புகழ்மிக்க வரலாறுகள் பலப் பலவாக இருந்தும், அவையெல்லாம் நூல் வடிவில் வெளிவராத குறையை நீக்க, தமிழ் வளர்ச்சி மன்றத்தின் தலைவராக விளங்கும் மாண்புமிகு டாக்டர் கலைஞர் கருணாநிதி அவர்களும், அம் மன்றத்தின் துணைத் தலைவராக இருக்கும் நானும் தமிழ்நாட்டு வரலாற்றினை விரிவான முறையில், தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றத்தின் மூலமாக வெளியிட வேண்டும் என்று விரும்பினோம். அந்த விருப்பத்தை மன்றத் தீர்மானத்தின்மூலம் செயல் படுத்த முனைந்தோம். அதன் விளைவாகத்தான், டாக்டர் மு. வரதராசனார் அவர்களைத் தலைவராகவும் எட்டு அறிஞர்களை உறுப்பினர்களாகவும் கொண்ட "தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு" ஒன்று அமைந்தது.

தமிழ்நாட்டு வரலாற்றினை ஆறு தொகுப்புகளாக வெளி யிடவேண்டும் என்று குழுவினர் செய்த முடிவிற்கிணங்க, முதல் தொகுப்பான "தமிழ்நாட்டு வரலாறு—தொல்பழங்காலம்" என்னும் இந்நூல் வெளிவந்துள்ளது. இந்நூலைச் சிறப்பாகக் கொண்டுவர முயற்சியினை மேற்கொண்ட தமிழ்நாட்டு வரலாற்றுக் குழுவினரையும், சிறந்த ஆராய்ச்சிக் கட்டுரைகளை வழங்கியுள்ள அறிஞர் பெருமக்களையும், இந்நூலை வெளியிடும் பணியில் ஈடுபட்ட தமிழ் வளர்ச்சித் துறையினரையும் நான் மிகவும் பாராட்டுகிறேன்.

# முன்னுரை

மிகத் தொன்மையான நாடு தமிழ்நாடு. சேர, சோழ, பாண்டியர் என்ற மூவேந்தர் தமிழ்நாட்டை நெடுங்காலம் ஆண்டுவந்தனர். ஒரு குடியைச் சார்ந்த அரசர்கள் தொடர்ந்து பல நூற்றாண்டுகள் ஒரு நாட்டைச் சிறப்பாக ஆண்டுவந்த இத்தகைய வரலாற்றை மற்ற நாடுகளில் காணமுடியவில்லை. அந்தப் பழங்காலத்திலேயே உள்நாட்டு வாணிகம், கடல் கடந்த உறவுகள், பலவகைக் கைத்தொழில் வளம், சமுதாய அமைப்பு, கலைகளின் வளர்ச்சி, இலக்கியப் பண்பாடு முதலான பல நிலைகளிலும் முன்னேற்றம் பெற்றிருந்தது தமிழ்நாடு. கல்வெட்டுச் சான்றுகளும், பிறநாட்டார் குறிப்புகளும், இலக்கியச் சான்றுகளும் தமிழ்நாட்டு வரலாற்றின் பெருமையைச் சாற்றுகின்றன. இத்தகைய தொன்மையான வரலாறு படைத்த நாடாக இருந்தும், தமிழ் நாட்டின் வரலாறு நல்ல நூல்வடிவு பெற்று விளங்கவில்லை.

அதற்குக் காரணம் என்ன? பழங்காலத்துத் தமிழ் அறிஞர்கள் வரலாற்றுத் துறையில் போதிய அக்கறை கொள்ளாதது ஒரு காரணம். ஆங்கிலேயரின் வருகைக்குப் பின் வந்த வரலாற்று அறிஞர்கள் தமிழ்நாட்டு வரலாற்றில் ஆர்வம் கொள்ளாதது மற்றொரு காரணம்.

கல்கத்தா இந்தியாவின் தலைநகரம் ஆகியது. பிறகு தில்லி நகர் அந்தச் சிறப்பைப் பெற்றது. அதனால் வரலாறு எழுதத் தலைப்பட்ட ஆங்கிலேயரும் பிறரும் வடநாட்டிலிருந்து தொடங்கி எழுதத் தொடங்கினார்கள். தமிழக வரலாற்றின் சிறப்பு அவர்களுக்குப் புலனாகவில்லை. கடந்த சில நூற்றாண்டுகளாக வல்லரசுகளாய் விளங்கியவைகளும், நேர்ந்த பெரிய போர் நிகழ்ச்சிகளும் வடநாட்டைச் சார்ந்தவை. ஆகவே வடநாட்டு வரலாறே அவர்களின் கண்களுக்குப் பளிச்சென்று தோன்றிற்று. தமிழ்நாட்டுத் தொன்மை வரலாறு கவர்ச்சி யிழந்து நின்றது. ஆகவே வரலாற்று அறிஞர்களால் தமிழ் நாட்டு வரலாறு புறக்கணிக்கப்படலாயிற்று.

மொழிப்பற்றின் காரணமாகவும் நாட்டுப்பற்றின் காரண மாகவும் தமிழரிடையே தோன்றிய விழிப்புணர்ச்சி, இந்தப் புறக்கணிப்பைத் தெளிவாக உணர்த்தியது. தமிழக அரசின் நன்முயற்சியால் அமைந்த தமிழ்வளர்ச்சி ஆராய்ச்சி மன்றம் 1970ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் 18ஆம் நாள் கூடிய போது, தமிழ்நாட்டின் வரலாறு விளக்கமான முழு நூலாக உருப்பெறாத குறை நன்கு உணரப்பட்டது. மாண்புமிகு முதல்வர் டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி அவர்களின் தலைமையில் அன்று கூடிய அந்த மன்றம் அத்தகைய வரலாறு எழுதுவதற்கென ஒரு குழுவை அமைத்தது. அக்குழுவின் உறுப்பினராகப் பின் வருவோர் அமைக்கப்பெற்றனர்.

(1) டாக்டர் மு. வரதராசன் ... தலைவர்
(2) திரு மயிலை சீனி வேங்கடசாமி ... உறுப்பினர்
(3) திரு இரா. நாகசாமி, எம். ஏ. ... ,,
(4) திரு அ. இராகவன் ... ,,
(5) திரு கா. அப்பாத்துரை, எம்.ஏ. ... ,,
(6) திரு சி. ஈ. இராமச்சந்திரன், எம்.ஏ., எம்.லிட். ... ,,
(7) திரு க. த. திருநாவுக்கரசு, எம். ஏ., எம்.லிட். ... ,,
(8) திரு கே. ஆர். அனுமந்தன், எம்.ஏ. ... ,,
(9) தமிழ் வளர்ச்சி இயக்குநர் உறுப்பினர்–செயலாளர்

குழுவிற்கு உதவிபுரியும் வகையில் பேராசிரியர் கே. கே. பிள்ளை அவர்களும், பேராசிரியர் கா. மீனாட்சிசுந்தரம் அவர்களும் இருந்து பணிபுரியுமாறு கேட்டுக் கொள்ளப் பட்டனர்.

வரலாற்றுக் குழு ஆராய்ந்து எழுதும் இந்நூல் ஆறு தொகுப்புகளாக வெளிவரும். தொல்பழங்காலம் (வரலாற் றுக்கு முற்பட்ட தமிழகம்), சங்ககாலம், பல்லவர் காலம், சோழர் காலம், பிற்காலம், இக்காலம் என ஆறு காலப் பகுப்புக் கொண்டு அவை அமையும்.

அவற்றுள் முதல் தொகுப்பாகிய இதனுள், தமிழ்நாட்டு நிலப்பரப்பின் தோற்ற வரலாறு பற்றிப் பேராசிரியர் ச. சரவணன் அவர்கள் ஆராய்ந்து எழுதியுள்ளார். நிலவியலும் அதை ஒட்டிய வரலாறும் பற்றிப் புலவர் செங்கைப் பொதுவன் ஆய்ந்து எழுதியுள்ளார். சில சிக்கல்களும் கருத்து வேறுபாடுகளும் உள்ள இனமரபு வரலாறுபற்றிப் பேராசிரியர் க. த. திருநாவுக்கரசு ஆராய்ச்சிக் கட்டுரை வழங்கியுள்ளார். பழைய கற்காலம் பற்றியும், புதிய கற்காலம் பற்றியும், பெருங் கல்காலம் பற்றியும் ஆராய்ந்து கட்டுரை நல்கிய அறிஞர்கள் முறையே திரு. அ. இராகவன், பேராசிரியர் சி. ஈ. இராமச் சந்திரன், திரு. இரா. நாகசாமி ஆகியோராவர்.

ஆறு தொகுதிகளுள் முதல் தொகுதியாகிய இது அளவில் சிறியதாக இருப்பதற்குக் காரணம் வரலாற்றுக்கு முற்பட்ட காலம் பற்றியதாக, சான்றுகள் குறைந்ததாக இருத்தலே யாகும். ஆயினும் தமிழக வரலாற்றுக்கு அடிப்படையான சில உண்மைகளை இத்தொகுதி விளக்குவது ஆதலின் இனிவரும் தொகுதிகளுக்கு இது இன்றியமையாததாக உள்ளது.

இக்குழுவின் பணிகளுக்கு ஊக்கமும் ஆக்கமும் அளித்து உதவிகள் நல்கி வரும் தமிழக அரசிற்குக் குழுவின் சார்பாக நன்றி கூறுகிறேன்.

மு. வரதராசன்,

தலைவர்,

தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு.

# பதிப்புரை

தமிழ்நாடு அரசு அமைத்த வரலாற்றுக் குழுவின் தீர்மானத்தின்படி செயல்பட்டு, வரலாற்றுக்கு முற்பட்ட காலத் தமிழகத்தின் நிலையை உணர்த்தும் இந்தத் தொல்பழங்கால வரலாற்றுத் தொகுப்பை இயன்றவரையில் செம்மைப்படுத்தி வெளிக் கொணர்கிறோம். தமிழ்நாட்டு வரலாற்றை முழுமையான நிலையில் வெளியிடத் தொடங்கிய முதல் முயற்சி இது. இதில் உள்ள கருத்துகள் முழுமை பெற்றவை என்று கொள்ள முடியாது. இதுவரையில் கிடைத்துள்ள செய்திகளைத் திரட்டி ஆய்ந்து, கண்ட முடிபுகளே இந்த நூலில் இடம்பெற்றுள்ளன. எதிர்கால ஆய்வுகளால் கருத்துகள் வளரலாம். உலக வரலாற்றுப் பேராற்றில் வந்து சேரும் ஒரு சிற்றுருகவும், அப்பேராற்றிலிருந்து பிரிந்து சென்று நாட்டை வளப்படுத்தும் ஒரு கால்வாயாகவும் இந்தத் தொகுப்பும் இதனைத் தொடர்ந்து வெளிவரும் பிற தொகுப்புகளும் விளங்கும்.

எழுத்துச் சான்றுகள் இல்லாத வரலாற்றுக் காலத்தைத் "தொல்பழங்காலம்" என்னும் தொடரால் குறிப்பிட்டுள்ளோம். இற்றைக்கு முன் 20 லட்சம் ஆண்டுகளிலிருந்து கி. மு. 4000 வரை உள்ள காலம் இப்பகுதிக்குரியதாக உலக அளவில் குறிப்பிடப்படுகிறது. இந்தத் தொகுப்பிலோ உலகம் தோன்றியது முதல் தமிழக நிலப்பரப்பு எவ்வாறு இருந்துவந்துள்ளது என்னும் செய்தியும் தரப்பட்டுள்ளது. எழுத்துச் சான்றுகள் கிடைத்துள்ள சங்ககாலத்திலும் நிலவிய பெருங்கல்கால நாகரிக வரலாற்றின் ஒரு பகுதியும் இந்தத் தொகுப்பில் இடம்பெற்றுள்ளது. இந்தப் பெருங்கல் காலப் பகுதியை விடுத்து நோக்குகையில் தமிழ்நாட்டைப் பொறுத்தமட்டில் தொல்பழங்காலம் என்பது கி.மு. நான்காம் நூற்றுண்டுக்கு முற்பட்டது என்பது தெளிவாகும்.

இந்தத் தொகுப்பு ஆறு இயல்களைக் கொண்டது. நிலம், மக்கள், நாகரிகம் என்ற வகையில் இவற்றின் முறைவைப்பு உள்ளது. நிலப்பரப்பின் தோற்றம், நிலவியல் ஆகிய இரண்டு இயல்களில் நிலம்பற்றிய வரலாறு முதலில் விளக்கப்பட்டுள்ளது. மக்கள் வரலாறு மூன்றும் இயலில் ஆராயப்பட்டுள்ளது. இறுதியில் உள்ள பழைய கற்காலம், புதிய கற்காலம், பெருங்கல் காலம் என்னும் மூன்று இயல்களில் நாகரிக வரலாறு கூறப்பட்டுள்ளது.

கலைச்சொற்களின் ஆங்கில வடிவம், சுட்டுநூல் குறிப்புகள், பதிப்பாசிரியர் குறிப்புகள் முதலானவை வரலாற்றுக் கட்டுரையின் இடையே தொடர்எண் குறியீடு செய்யப்பட்டு அந்தந்த தொடர் எண் குறியீடு உள்ள பக்கத்தின் அடிப்பகுதியில் தரப்பட்டுள்ளன. நூலாசிரியரின் பெயர், நூலின் பெயர் (வேற்றுரு வடிவெழுத்தில்), வெளியீடு, வெளியிட்ட ஆண்டு, குறிப்பிடும் கருத்து உள்ள பக்கம் என்ற வரிசையில் சுட்டுநூல் செய்திகள் தரப்பட்டுள்ளன. சுட்டுநூல் தொகுப்பு நூலாயின் கட்டுரை ஆசிரியரின் பெயர், கட்டுரை எழுதப்பட்ட ஆண்டு, நூலின் பெயர் என்ற முறையில் தொடங்கிப் பின் முறையே குறிக்கப்பட்டுள்ளன.

நூலின் எழுத்துப் பகுதி முடிந்ததும் நூல் எழுத உதவியாயிருந்த பிற நூல்கள் 'கருவி நூல் பட்டியல்' என்னும் தலைப்பின் கீழ் இயல்வாரியாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

கட்டுரைத் தொடர்பான நிலப்படங்கள், வரைபடங்கள், ஒளிப்படங்கள் முதலானவை நூலின் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளன. அவற்றின் ஒப்புநோக்கு அடையாளக் குறிப்புகள் கட்டுரையின் இடையே பிறைக்குறிகளுக்கு உள்ளும் படங்களின் அடியிலும் தரப்பட்டுள்ளன.

படங்களை அடுத்து நூலில் கையாளப்பட்டுள்ள சிறப்புச் சொற்கள், பொருள் நோக்கில் பாகுபாடு செய்யப்பட்டு அகர வரிசைப்படுத்தி, அவை கையாளப்பட்டுள்ள பக்க எண்களுடன் தரப்பட்டுள்ளன.

நூலின் இறுதியில் இந்த நூலோடு நேரடித் தொடர்புடையோர் பெயர்கள் அகரவரிசையில் முகவரியுடன் தரப்பட்டுள்ளன.

திரு. எ. சுப்பராயலு, திரு. செங்கைப் பொதுவன் ஆகியோர் இந்த நூலுக்குப் பதிப்பாசிரியர்களாக இருந்து பணிபுரிந்து உதவினார்கள்.

நூல் சிறந்த முறையில் வெளிவர உதவிய அனைவருக்கும் கடப்பாடு உரியது.

தமிழ்நாட்டு வரலாற்று வெளியீட்டகம்,<br>
தமிழ் வளர்ச்சி இயக்ககம்,<br>
குறளகம்,<br>
சென்னை – 600 001.

# பொருளடக்கம்

4. பழைய கற்காலம்

பக்கம்



## 5. புதிய கற்காலம்



## 6. பெருங்கல் காலம்

## இயல் 1

# நிலப்பரப்பின் தோற்றம்

"நீலத் திரைக்கடல் ஓரத்திலே—நின்று
நித்தம் தவஞ்செய் குமரிஎல்லை"

என்ற அடிகளால் மகாகவி பாரதி தமிழகத்தின் இன்றைய தென்திசை எல்லையைக் கோடிட்டுக் காட்டும்போது நம் தமிழ் நிலத்திற்குக் கன்னித் தன்மையைக் கற்பித் திருத்தல் வெறும் கற்பனைமட்டும் அன்று; காலமெல்லாம் நிலைத்து நிற்கும் உண்மையும் ஆகும். கடல் அரசன் தன் அலைக் கைகளை நீட்டிப் பல நிலமங்கைகளை அணைத்துத் தன்னுள் ஒன்றுபடுத்திக்கொண்ட நிலப் பொதியியல் வரலாற்றுக்கு முற்றிலும் மாறாக, ஆழ் கடலின் அரவணைப்புக்குட்படாமல், இன்றுள்ள தமிழ் நாட்டின் நிலப்பரப்பு தன் கன்னித் தன்மையைக் காத்து நிற்கும் உண்மையை நிலப்பொதியியல் ஆய்ந்தறிந்து சான்றுகளுடன் ஏற்றுக்கொண்டுள்ளது.

தமிழகமும் அதனை உள்ளடக்கிய பெரும்பாலான தென்னிந்தியப் பகுதிகளும், உலகம் தோன்றிய பொழுதே தோன்றிய உறுதிமிகு தொன்மைப் பாறை களால் ஆக்கப்பட்டிருப்பது மேலே கூறப்பட்ட உண் மைக்குச் சிறந்த சான்றாக அமைகிறது. தமிழக நிலப்பரப்பின் வரலாறு இந்நிலவுலக வரலாற்றின் வேர்ப் பகுதியாக அமைந்துள்ளது. ஆகவே தமிழக நிலப் பரப்பின் தோற்ற வரலாற்றை அறிய விழைவோர் ஞாயிற்றிடமிருந்து தணல் பிழம்பாக வெடித்துச் சிதறிய ஞாலம்[1] என்ற நாம் வாழும் கோளம் தோன்றிய வரலாற்

---

[1] ஞாலம்—விண்வெளியில் தொங்கிக்கொண்டிருக்கிற நில உருண்டை

றையும், தணல் பிழம்பு குளிர்ந்து பல கோடி ஆண்டுகள் இறுகி இறுதி வடிவம் பெற்ற தொன்மை வாய்ந்த பாறைகளின் தோற்றத்தையும் அவை தோன்றிய காலத்தையும் பற்றி நிலப்பொதியியல் கண்ணோட்டத்துடன் முடிவு செய்யப்பட்ட உண்மைகளை அறிந்திருத்தல் இன்றியமையாததாகும்.

ஒன்பது கோள்களுள் ஒன்றான ஞாலம், ஞாயிற்றில் ஏற்பட்ட பெரும் மாற்றத்தின் விளைவால் 500 கோடி (5,000 மில்லியன்) ஆண்டுகளுக்குமுன் வெடித்துச் சிதறி வானவெளியில் ஒரு தனிக்கோளமாக மிதந்து சொல்லொணு வேகத்துடன் சுழன்றது. முதலில் சுழல்பொருள் உருவாக இருந்து, வெப்பம் தணிந்து, படிப்படியாகக் குளிர்ச்சியடைந்த கால எல்லை[2] கோளத்தின் உள்ளேயும், வெளியேயும் ஊழி மாற்றங்களை ஏற்படுத்திற்று. கால எல்லை என்று இங்குக் குறிப்பிடுவது மனித வரலாற்றில் குறிப்பிடும் ஒரு சில நூற்றாண்டுகளைக் குறிப்பது அன்று. நிலப்பொதியியலின்படி ஒரு கால எல்லை என்பது நினைவில் நிறுத்தக்கூடிய பழமைக்குப் பழமை பொதிந்த பலகோடி மனித ஆண்டுகளை உள்ளடக்கிய காலவரம்பே என்பதை உணரவேண்டும்.

தணல் குழம்பாக இருந்த ஞாலம், காலச் சுழற்சியில் தன் தணலைத் தணித்துக்கொண்டு குளிர்ந்து இறுகத் தொடங்கிற்று. ஊழூழிக் காலமாக இவ்வாறு குளிர்ந்த ஞாலத்திலுள்ள தணல் பிழம்பின் கலவை பல்வேறு தனிமங்களாலும், கனிப்பொருள்களாலும் ஆக்கப்பட்டிருந்தது. ஞாலத்தின் ஓயாச் சுழற்சியின் காரணமாக உயர்ந்த அடர்த்தியுடைய இரும்பு, நிக்கல் முதலான கனிப்பொருள்களின் தனிமங்களாலான அணுத்திரள்கள் கோளத்தின் மையப் பகுதிகளுக்குச் சென்று, திரண்டு மிக இறுகிய கோளக் கருவாக[3] வடிவம் பெற்றன. ஏறக்குறைய 3,200 கிலோ மீட்டர் விட்டம் உள்ள இக்கோளக்

---

[2] A range of time.

[3] Core.

கருவைச் சுற்றி அடர்த்தி குறைந்த தனிமங்களை உள்ளடக்கிய அணுத்திரள்கள் அடர்த்திக்கு ஏற்பப் பல்வேறு படலங்களாகத் திரண்டு இறுகிப் பல்வேறு வகையான பாறைகளைத் தோற்றுவித்தன. தொடக்கத்தில் வாயுப் பிழம்பாக இருந்த உலகம் குளிர்ந்து திண்ணிய பாறைப் பொருள்களாலான மேலோட்டினைக் கொண்ட கோளமாக மாறிவிட்டது. உலகின் மேற்பொருக்கையே பாறைப்படலம் என்கிறோம்.

ஞாலம் இம்முறையில்தான் தோன்றியது என்ற கோட்பாட்டை யாவருமே ஒப்புக்கொள்கின்றனர்.

எளிதில் உறையக்கூடிய பொருள்கள் நிலத்தின் மேற்பரப்புக்குக் கொண்டுவரப்பட்டுப் பாறைகளாக உறைந்துவிடுவதால் ஓடு போன்ற பாறைப்படலத்திற்குக் கீழே, அதாவது, ஏறத்தாழ 40 கிலோ மீட்டர் ஆழத்தில் உள்ள பாறைகள் இளகிய நிலையில் உள்ளன என்பதை நில அதிர்ச்சி ஆய்வுகள் காட்டியுள்ளன. மேலும் இரும்பு, மக்னீசியம் முதலான தனிமங்களால் ஆக்கப்பட்ட கோளக்கருவானது பேரழுத்தத்திற்கு உட்பட்ட தனிப்பட்டதோர் நீர்ம (நெகிழ்ம) நிலையில் உள்ளது என்னும் உண்மையையும் இந்த ஆய்வுகள் தெளிவுபடுத்தியுள்ளன. 40 கிலோ மீட்டருக்குக் கீழே உள்ள பாறைகள் உருகியிருந்தாலும் மேற்பொருக்குப் பாறையின் சுமையால் அழுத்தப்பட்டுள்ளன. நில வெடிப்புகள், நிலத்துளைகள் போன்றவைகளால் இந்த அழுத்தம் விடுபடும்போது பாறையின் உருக்கு வெப்ப நிலை குறைக்கப்பட்டுக் கொப்புளித்தெழும் கற்குழம்பாக[4] அவை மாறி எரிமலைகளின் வாயிலாக வெளியே வழிந்தோடி நிலத்தின் மேற்புறத்தில் புடைத்தெழும் மலைகளாகப் படிகின்றன.[5]

---

[4] Magma.

[5] ஆக்க சக்தியின் ஆற்றலை வெளிப்படுத்தும் இந்த அரிய பெரிய உண்மையை இராமலிங்க வள்ளலார்,

"புனல்மேல் புவியும் புவிமேல் புடைப்பும்
அனல்மேல் வகுத்த அருட்பெருஞ் ஜோதி"

என்று மெய்யுணர்வு தோன்றக் கூறுகிறார்.

இவ்வாறு ஞாலம் குளிர்ந்து இறுகியபோது உருவான பாறைகளே மிகத் தொன்மையான பாறைகளாகும். உலகத்தில் காணப்படும் பழமையான நிலப்பரப்புகள் அனைத்தும் இத்தகைய பாறைகளால் ஆக்கப்பட்டவையாகும். ஆகவே நிலப்பரப்புகளின் தொன்மையை இப் பாறைகளைக் கொண்டு அளவிட முடிகிறது.

தணல் பிழம்பு குளிர்ந்து இறுகிப் பாறைப்படலமாகும்போது நீராவிப்படலம் தோன்றி உலகைச் சூழ்ந்து நின்றது. தணல் படலம் பாறைப்படலமாக மாறியபின் நீராவிப்படலம் குளிர்ந்து இடைவிடா மழையாகப் பொழிந்தது. பொழிந்த நீர், ஊழிப் பெருக்கெடுத்து ஓடிப் பள்ளங்களில் தங்கியது. இவ்வாறு தங்கிய அகன்ற ஆழமான பள்ளங்களே கடல்கள். பெருக்கெடுத்தோடிய வழிகளே ஆறுகள்.

இவ்வாறுகளின் வழியே ஓடிய வெள்ளப்பெருக்கால் அடித்துச்செல்லப்பட்ட வண்டல்மண் கடலிலும் உலகின் ஆழமான பகுதிகளிலும்[6] படிந்து படிவுப்பாறைகள் ஆயின. இந்த மாற்றம் நிகழ்ந்த முறைகளை இங்குச் சுருக்கமாக அறிதல் நலம். தணல் பாறைகள் சிதைக்கப்பட்டு நிலங்களில் ஆழமான பகுதிகளில் இயற்கை முறைகளினால் கூட்டுச் சேர்க்கப்பட்டு இறுகும் பாறைகளைப் படிவுப்பாறைகள்[7] என்கிறோம்.

மேலே விளக்கப்பட்ட இருவகைப் பாறைகளான தணல் பாறைகளும், படிவுப்பாறைகளும், மறுபடியும் நில இயக்க அசைவுகள் ஏற்படுத்திய அதிர்ச்சிகளினால் தாக்கப்பட்டு, பூமியின் உட்பாகத்திற்கு அழுத்தப்பட்டு, பூமியின் ஆழத்தில் உள்ள வேக்காட்டாலும்[8] அழுத்த வலிமையினாலும் பெரிதும் பாதிக்கப்பட்டு, ஏறக்குறைய உருகுநிலை அடைந்து உரு மாற்றப்பட்டன. இவை மறுபடியும் பூமியின் மேற்பரப்புக்கு வர முயன்று இறுகிய போது புதுப்புதுத் தனிமங்களைக் கொண்ட பாறைகளாக

[6] Geosynclines.

[7] Sedimentary rocks.

[8] Heat.

மாற்றம் பெற்றன. இத்தகைய பாறைகளின் இயைபுக் கலவை[9] மட்டுந்தான் உருமாறுவதற்கு முன்பிருந்த இயைபுக் கலவையை ஒத்திருந்தது. ஆனால், அப் பாறைகள் புதிய வேக்காட்டமுத்தத்தின் வலிமைக்கு ஏற்பப் புதிய தனிமங்களைக் கொண்டு புதிய பாறைகளாய் அமைந்தன. இவற்றையே உருமாறிய பாறைகள்[10] என்று அழைக்கிறோம்.

உலகத்தின் தோற்றம் காலந்தோறும் எவ்வாறு மாற்றம் பெற்று வந்துள்ளது என்பதனையும், அம்மாற்ற வளர்ச்சியில் தமிழ்நாட்டின் நிலையினையும் இனி ஆய்ந்து அறிவோம். உலகின் மேற்பரப்பில் பரவலாகப் பெரிய மாற்றங்கள் அளவுக்கடங்காமல் நிகழ்ந்த காரணத்தால் உலகத்தின் நிலப்பரப்பு வெவ்வேறு ஊழிக்காலத்தில் வெவ்வேறு வகையில் உரு மாறிக் காட்சியளித்தது. நிலப் பொதியியலாளர் ஞாலத்தின் வரலாற்றுக் காலத்தை ஐந்து பேரூழிகளாகப்[11] பகுத்துக் காண்கின்றனர். ஒவ்வொரு பேரூழியும் பல ஊழிக்காலத்தை[12] உட்கொண்டுள்ளது. ஊழிக்காலம் ஒவ்வொன்றின் தொடக்கத்திலும் கடல் நிலத்தைக் கவர்ந்தது. பிறகு அதன் முடிவில் நில மேலெழுச்சியின்[13] காரணமாகக் கடல் பின்வாங்கியதால் நிலம் மீண்டும் விடுபட்டது. ஆகவே பாறையாகிய ஏட்டுச் சுவடியின் அத்தியாயங்களைப் பேரூழிக் காலங்கள் என்றும், பத்திகளை ஊழிக் காலங்கள் என்றும், வாக்கியங்களை ஊழிப் பாறை அமைவுகள்[14] என்றும் கருதலாம்.

உயிரினத் தோற்ற வரலாற்றை உறுதிப்படுத்த உதவுவன படிவுப்பாறைகளாகும். படிவுப்பாறைகள் புதைபடிவமற்ற படிவுப்பாறைகள் என்றும், புதை படிவமுள்ள படிவுப்பாறைகள் என்றும் கூறும்படியாக

---

[9] Chemical composition.
[10] Metamorphic rocks.
[11] Era.
[12] System.
[13] Uplift of land masses.
[14] Stratification of rocks.

இருவகையில் அமைந்துள்ளன. இந்த அமைப்பி லிருந்து உயிரினம் தோன்றாத காலத்துப் படிவுப் பாறைகள் எனவும், உயிரினம் தோன்றிய காலத்துப் படிவுப்பாறைகள் எனவும் பிரித்துணரமுடிகிறது. இரண்டாவது வகையின்பாற்பட்ட புதைபடிவமுள்ள படிவுப்பாறைகள் தோன்றிய காலம் உயிரினம் தோன்றிய காலம் ஆகும். புதைபடிவமுள்ள படிவுப்பாறைகள் சுமார் 80 கோடி ஆண்டுகளுக்கு முன்பே படிந்துள்ளன. இத்தகைய படிவுகளில் எண்ணற்ற காலச் சுழற்சிகளின் போது, அந்தந்தக் காலங்களில் வாழ்ந்த உயிரினங்களின் உடல்களும் வண்டலுடன் சேர்ந்து படிந்தன. இவையே இக்காலத்தில் புதைபடிவங்களாகக்[15] கிடைக்கின்றன. படிவுப்பாறைகளின் தோற்றத்திற்கு முன்பு இருந்த தணல் பாறைகளில் இத்தகைய புதைபடிவங்கள் கோளத்தின் எந்தப் பகுதியிலும் இல்லை. இதைக் கொண்டு ஞாலத்தில் உயிரினங்கள் தோன்றிய ஊழி படிவுப்பாறை ஊழிதான் என்று உறுதிப்படுத்தமுடி கிறது. அதாவது 80 கோடி ஆண்டுகளுக்கு முன்புதான் உயிரினம் தோன்றியது என அறிய முடிகிறது.

## ஆர்க்கேயன் பேரூழி அல்லது உயிரினமற்ற பேரூழி[16]

முந்தைக்கேம்பிரியன்[17] ஊழியை உள்ளடக்கிய ஆர்க்கேயன் பேரூழி இற்றைக்கு முன்னுள்ள ஏறத்தாழ 450 முதல் 60 கோடி ஆண்டுகளுக்கிடைப்பட்ட கால மாகும். (காண்க. அட்டவணை, பக். 26) இக்காலத்தில் நிகழ்ந்த ஊழி இயக்கம் உலகின் ஏனைய பகுதிகளில் உண்டாக்கியது போலவே தமிழ் நாட்டிலும் மிகப் பெரிய மாற்றங்களை உண்டாக்கியது. இதற்குப் பிற்பட்ட ஊழிக்கால மாற்றங்களால் தமிழ்நாடு சிறிதளவே பாதிக்கப்பட்டது. இதன் காரணமாகவே தமிழ்நாட்டின் தொன்மை பழுதுபடாமல் காக்கப்

[15] Fossils.

[16] Archaean Era or Azoic Era (தொன் முதல் ஊழி)

[17] Pre-Cambrian system.

பட்டுள்ளது. ஆர்க்கேயன் பேரூழிக்காலத்திற்குப் பிற்பட்ட ஊழிக்கால மாற்றங்களெல்லாம் நிலத்தைக் கடல் கொண்டதால் ஏற்பட்டவையே. ஆர்க்கேயன் பேரூழிக் காலத்தில் உலகத்தில் உயிரினங்கள் வாழவில்லை. முதன்மையான தணல் பாறைகள் பன்முறை கலந்து தம் படிவுநிலையில் மாற்றம் பெற்றுள்ளன. இவ்வாறு மாற்றம் பெற்றுள்ள 'நைஸ்'[18] என்ற பாறை தமிழக மெங்கும் பரந்து காணப்படுகிறது. ஆர்க்கேயன் தொகுதிப் பாறைகள் என்று கூறப்படுவது இந்த நைஸ் பாறைகளையும், அதன்பின் தோன்றிய தொல்லுயிர் எச்சங்களற்ற படிவுப் பாறைகளையும் குறிப்பதாகும். சேலம் மாவட்டச் சங்கரிதுர்க்கத்துச் சுண்ணும்புப் பாறைகளும், தமிழ்நாட்டின் தொழில் வளத்திற்கு வழிகோலும் கஞ்சமலைப் பகுதியின் இரும்புக் கனிப் படுகைகளும் ஆர்க்கேயன் தொகுதிப் பாறைகள் எனத் தீர்மானிக்கப்பட்டுள்ளன. சேலம் மாவட்டத்துக் கஞ்ச மலைப் பகுதிப்பாறைகள் உலகிலேயே மிகப் பழமையான பாறை வகைகளைச் சேர்ந்தவை. இன்று இதன் வயது ஏறத்தாழ 450 கோடி ஆண்டுகள் எனலாம். இவ்வளவு பழமையான பாறைகள் உலகில் ஒரு சில பகுதிகளில் மட்டுமே உள்ளன என்று கண்டுபிடிக்கப் பட்டுள்ளன.

தமிழ்நாட்டிலுள்ள மாக்னசைட் கனிப்பொருள்கள் உலகிலேயே மிக்க சிறப்பினைப் பெற்றவை. இந்த மாக்னசைட்[19] கனிப்பொருளை உள்ளடக்கிய ட்யூனைட்[20] என்ற பாறை ஆர்க்கேயன் தணல் பாறைகளின் பிரிவைச் சேர்ந்ததாகும். இரும்பு, மக்னீசியக் கனிப் பொருள்களை உள்ளடக்கிய கருமை நிறம் படர்ந்த சார்னகைட்[21] என்ற பாறை உலகிலேயே முதன் முதலில் சென்னைப் பல்லாவரம் பகுதியில் கண்டுபிடிக்கப்பட்டு,

---

18 Gneiss.

19 Magnesite.

20 Dunite.

21 Charnockite.

திரு. ஆலண்டு[22] அவர்களால் விவரிக்கப்பட்ட தொன்மை மிக்க பாறையாகும்.

மாமல்லபுரத்திலுள்ள குடைவரைக் கோயில்கள் இத்தொன்மையான சார்னகைட் பாறைகளில் அமைக்கப்பட்டுள்ளன. தமிழகத்து உயர் மலைகளான நீலகிரி, ஆனைமலை, பழனிமலை ஆகியவை இப்பாறைகளாலான மலைகளாகும். இந்தச் சார்னகைட் பாறைகள் தணல் பாறைகளால் ஆனவையா, படிவுப் பாறைகளால் ஆனவையா என்பது பற்றி உலக வல்லுநர்களிடையே கருத்துப் பரிமாற்றங்கள் நிகழ்ந்தன. நேரில் ஆய்ந்தறியத் தமிழ்நாட்டிற்கே அவர்கள் வரும் அளவுக்கு அவர்களைக் கவர்ந்து ஈர்த்த பெருமை நம் நாட்டிலுள்ள இப்பாறைகளுக்கு உண்டு.

ஆர்க்கேயன் பேரூழியின் பிற்பகுதியில், சார்னகைட் பாறைகளுக்குப் பிற்பட்ட காலத்தில், தணல் குழம்பு வெளிப்பட்டு ஆங்காங்கே கிரானைட்[23] பாறைகளாக இறுகின. சார்னகைட் பாறை அமைந்த காலத்திற்கு முன்பு முந்நீர் நிலத்தை[24] மூழ்கடிக்கக்கூடிய அளவிற்குக் கற்குழம்பு கொப்புளித்தெழுந்து இறுகியதன் விளைவாக நைஸ் பாறைகள் பேரளவில் தோன்றின. இக்காரணம் பற்றியே இப்பாறையை "முந்நீர்நில நைஸ் பாறைகள்" என்று நிலப்பொதியியலாளர் வழங்கலாயினர். பிற்பகுதியில் தோன்றிய கிரானைட் பாறைகளோ சிறிய அளவில் சில குறிப்பிட்ட இடங்களில் மட்டுமே பொங்கி எழுந்து இறுகின. இதன் காரணமாக இப்பாறைகள் இதற்கு முன் தோன்றிய நைஸ், சார்னகைட் ஆகிய பாறைகளை ஓரளவுக்கே ஊடுருவி நின்றன. இவை தமிழகத்தில் ஆர்க்காட்டிலும், திருத்தணியிலும், மணப்பாறையிலும், மைசூர் மாநிலத்தில் பெல்லாரி, குளோஸ் பெட் பகுதிகளிலும் காணக்கிடக்கின்றன. தமிழகத்தில் கிரானைட் பாறைகளின் தோற்றத்திற்குப் பிறகு வேறு

---

22 Mr. Holland.

23 Granite.

24 மூன்று பக்கம் நீரால் சூழப்பட்ட நிலம், Peninsula.

பெரிய மாற்றங்கள் எதுவும் நிகழவில்லை என்பதற்கு வரிவடிவங்களற்ற கிரானைட் பாறைகளே சான்று கூறுகின்றன.

ஆர்க்கேயன் பேரூழியின் முடிவில், தமிழ்நாட்டுக்கு வட திசையில் கடல் இருந்தது; தெற்கு, கிழக்கு, மேற்குத் திசைகளில் கடல் இல்லை. இன்றைய ஆந்திரம், மத்திய பிரதேசம், ஒரிசா, ராஜஸ்தான் ஆகிய மாநிலங்களின் சிற்சில பகுதிகள் கடலுள் மூழ்கிக்கிடந்தன. நிலவுலகை உலுக்கிய ஊழி மாற்றங்களுக்குப் பிறகு தமிழ் நிலத்தில் பேரமைதி நிலவியது. இக்காலத்தில்தான் தமிழ்நாட்டின் நிலப்பகுதி அசைக்க முடியாத உறுதியுடைய அடித் தளத்தைப் பெற்றது. எனினும், காற்று, மழை, வெயில் முதலானவற்றின் சீற்றத்திற்குட்பட்டது. அதன் விளைவால் தொடர்ந்து அரிப்பு நேர்ந்ததன் காரணமாக ஆர்க்கேயன் பாறைகள் நொறுங்கி மண் தோன்ற லாயிற்று.

"கல் தோன்றி மண் தோன்றாக் காலம்" எனத் தமிழ் இலக்கியம் சுட்டிக்காட்டும் தொன்மை, நிலப் பொதியியல் நிலைநாட்டியுள்ள மேற்கூறிய கால எல்லையே யாகும். இக்காலம் முதற்கொண்டே தமிழ்நாட்டின் நிலப்பரப்பு உறுதிநிறை அமைதியைக் கொண்டதாக நிலைத்துவிட்டது.

முந்தைக்கேம்பிரியன் ஊழிக் காலத்தில் மென்மை யான உடலிலையுடைய செடியினம், விலங்கினம் ஆகிய உயிரினங்கள் தோன்றின. மலைகளின் வளர்ச்சிநிலை இந்தியாவில் இக்காலத்தில் நின்றுவிட்டது. கடப்பை, விந்தியம் தொகுதியிலுள்ள பாறைப்படிவுகள் உண் டாயின.

## தொல்பேரூழி[25]

முந்தைக்கேம்பிரியன் ஊழியை அடுத்து உள்ளது தொல்பேரூழிக் காலமாகும். இப்பேரூழியில் நீரில்

25 Palaeozoic Era.

பலவகையான உயிரினங்கள் தோன்றிப் பெருகி வளர்ந்தன. இப்பேரூழி கேம்பிரியன்[26], ஆர்டோவிசியன்[27], சைலூரியன்[28], டெவோனியன்[29], கார்பானிபெரசு[30], பெர்மியன்[31] என்னும் ஆறு ஊழிக்காலத்தைத் தன்னகத்தே கொண்டது. இவற்றின் காலம் முறையே 10, 6, 3½, 6, 6, 5 கோடி ஆண்டுகள். இப்பேரூழி இற்றைக்கு முன் உள்ள 60, 23½ கோடி ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தைக் கொண்டதாகும். மேற்கூறிய 6 ஊழிக்காலங்களும் இந்திய நிலப்பொதியியல் வரலாற்று நூலில் "திராவிடப் பேரூழி"[32] என்று சுட்டப்படுகிறது.

இந்தப் பேரூழியில் ஏற்பட்ட மாற்றங்களோ, தோற்றுவித்த பாறைகளோ தமிழ்நாட்டில் இல்லை. கடல் நிலத்தை விழுங்கியதால், விழுங்கப்பட்ட பாறைகளின் மீது தோன்றிய புதுப் பாறைப்படிவங்களே இந்தப் பேரூழிக்கால எல்லைகளில் ஏற்பட்ட புதிய மாற்றங்களாகும். இந்தப் புதிய மாற்றங்களின் அறிகுறியோ,

---

[26] Cambrian system.
வேல்ஸ், கம்பர்லாந்து நாட்டுப் பகுதிகளில் காணப்படும் தொல்லுயிரிகள் படிந்த பாறை அடுக்கு தோன்றிய காலம்.

[27] Ordovician system.

[28] Silurian system.
பண்டைய பிரிட்டனில் பழங்குடிகள் வாழ்ந்த பகுதிகளில் காணப்படும் தொல்லுயிரிகள் படிந்த பாறை அடுக்கு தோன்றிய காலம். மீன் தோன்றிய ஊழிக்கு முந்திய ஊழி. தண்டில்லாத உயிரினங்கள் தோன்றிய ஊழியின் கடைக்கூறு.

[29] Devonian system.
இங்கிலாந்தில் டெவோன்சயர் என்னும் மாநிலப் பகுதிகளில் காணப்படும் தொல்லுயிரிகள் படிந்த பாறை அடுக்கு தோன்றிய காலம். மீன் தோன்றிய ஊழி.

[30] நிலக்கரிப் படிவு ஊழி–Carboniferous system.

[31] Permian system.
'பெர்ம்' நாட்டுப் (ரஷ்யாவில் உள்ளது) பகுதிகளில் காணப்படும் தொல்லுயிரிகள் படிந்த பாறை அடுக்கு தோன்றிய காலம். இந்தப் பாறை அடுக்கு சிவப்பு நிற மண்பாறைகளும் மெக்னீசியச் சுண்ணும்புப் பாறைகளும் கொண்டது.

[32] Dravidian Era, Pascoe (1950)

படிவமைப்புகளோகூடத் தமிழ்நாட்டுப் பாறைகளில் காணக்கிடைக்கவில்லை. இக்கால மாற்றங்கள் காணக் கிடைக்காத நிலை ஒன்றே, இன்றுள்ள தமிழ்நாட்டு நிலப் பகுதி, ஞாலம் தோன்றிய காலத்திலிருந்தே கடலால் கொள்ளப்படாமல், நிலப்பகுதியாகவே இருந்தது என் பதை நிலப்பொதியியல் நெறியில் தெளிவுபடுத்தப் போதுமானதாகும்.

## இடைப்பேரூழி[33]

தொல்பேரூழிக்குப் பிற்பட்டது இடைப்பேரூழி யாகும். இது இற்றைக்கு முன் உள்ள $23\frac{1}{2}$, $6\frac{1}{2}$ கோடி ஆண்டுகளுக்கு இடைப்பட்டுக் கிடக்கும் காலத்தைக் கொண்டது. இந்த இடைப்பேரூழி திரயாசிக்[34], ஜுராசிக்[35], கிரிடேசியஸ்[36] என்று மூன்று ஊழிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இவற்றின் காலம் முறையே 4, 6, 7 கோடி ஆண்டுகள்.

### திரயாசிக் ஊழி

*திரயாசிக் ஊழியில் டினுசர்*[37] என்ற ஊர்ந்து செல்லும் அரக்க உயிரினங்கள்[38] வாழ்ந்தன; கண்ட வளர் கிளர்ச்சிகள்[39] உண்டாயின; வறண்ட பாலையில் உள்ளது போன்ற தட்பவெப்பநிலை இருந்தது. தமிழகம் இக் காலத்தில் கோண்டுவான[40] என்னும் நிலத்தின் பகுதி

---

[33] Mesozoic Era.
பாறை மாறிய பேரூழி அல்லது மண்ணூழி.

[34] Triassic system.
மும்மடிப் பாறை அடுக்கு தோன்றிய காலம்.

[35] Jurassic system.
ஜுரா மலையில் உள்ள பாறை தோன்றிய காலம்.

[36] Cretaceous system.
சுண்ணும்புப் பாறை தோன்றிய காலம்.
*Creta* (Gr.) = Chalk.

[37] Dinosaur.

[38] Giant Reptiles.

[39] Continental Drift.

[40] Gondwana.

யாக இருந்தது. இன்றைய அரேபியாவின் தென்பகுதி, அதாவது இன்றைய தமிழ்நாட்டின் இடைவெளிவிட்ட வடமேற்குப் பகுதி கடலுள் மூழ்கிக் கிடந்தது. தமிழ் நாட்டின் வடபகுதியிலும், தென்மேற்குப் பகுதியிலும், நெடுந்தொலைவு இடைவிட்டு நன்னீர் ஏரிகள் இருந்தன.

ஜுராசிக் ஊழி

ஜுராசிக் ஊழியின் எல்லையில் புதைபடிவப் பாறைகள் தமிழ்நாட்டில் இருந்ததைக் கொண்டு தமிழ் நாட்டு நிலப்பகுதியும், கடலில் ஏன் மூழ்கியிருக்கக் கூடாது என்ற வினா எழுவது இயல்பு. உண்மையில் தமிழ்நாட்டில், இக்காலத்தில் உருப்பெற்ற புதைபடிவப் பாறை, மிகப் பேரளவிலான பனிப்படலம் பொழிந்து உருகி உலகின் பல்வேறு பாகங்களிலிருந்தும் ஓடிய போது, உயிரின எச்சங்கள் படிந்து, தமிழ்நாட்டில் ஒதுக்கப்பட்டு இறுகிய புதைபடிவப் பாறைகளாக உள்ளன. நன்னீர் ஏரிகளிலும், ஆற்றுப் பள்ளத்தாக்கு களிலும் படிந்து உருவாகிய மேற்கூறிய தமிழ்நாட்டுப் புதைபடிவப் பாறைகள் தன்னிடத்தே கடல் நீரில் வாழும் உயிரினங்களின் எச்சங்கள் இன்றி, நன்னீரில் வாழும் உயிரின எச்சங்களை மட்டும் கொண்டு விளங்குவதால் தமிழகம் எக்காலத்திலும் கடலால் கொள்ளப்படவில்லை என்பது உறுதியாகிறது. இக்காலத்தில்தான் இந்தியா, ஆஸ்திரேலியா, தென்னமெரிக்கா, அண்டார்டிகா, தென் னாப்பிரிக்கா, மடகாஸ்கர் ஆகிய இடங்களை உள் ளடக்கிய நிலப்பரப்புக் கண்டம் ஒன்று இருந்தது. இந்தத் தொடர்ச்சியான ஒரே பெருநிலப் பரப்புக்கு, "கோண்டுவானா நிலப்பரப்பு"[41] என்ற பெயர் வழங்கப் பட்டது. (காண்க. நிலப்படம்–1.)

கோண்டுவானா நிலப்பரப்பு கீழ்க்கோண்டுவானா என்றும், மேல்கோண்டுவானா என்றும் இரு வகைப்

---

[41] திராவிட மொழிகளில் ஒன்றான கோண்டு மொழி பேசும் மக்கள் இப்போது வாழும் பகுதியிலுள்ள பாறைகளின் ஒப்புமை அடிப் படையில் இப்பெயர் இந்நிலப்பகுதிக்கு இட்டு வழங்கப்பெறுகிறது.

படும்.[42] முதற்பகுதியான கீழ்க்கோண்டுவாளு அமைப்புப் பாறைகளைத் தமிழ்நாட்டிலுள்ள திருப்பெரும்புதூரில் காணலாம். மேல்கோண்டுவாளு அமைப்புப் பாறைகள் செங்கற்பட்டு மாவட்டத்தைச் சேர்ந்த சத்தியவேடு என்ற இடத்தில் இருக்கின்றன. திருப்பெரும்புதூரில் உள்ள கீழ்க்கோண்டுவாளுப் பாறைக் கற்கள் செடியினங்களின் சுவடு படிந்த வெண்ணிறக் கற்களாகவும், சத்தியவேடு மேல்கோண்டுவாளுப் பாறைக் கற்கள் உயிரினங்களின் சுவடு படிந்த பாறைகளாகவும் உள்ளன. திருச்சி மாவட்டத்தில், தொன்மையான ஆர்க்கேயன் நைஸ் பாறைகளின்மீது, மேல்கோண்டுவாளுப் பகுதிப் பாறைகள் படிந்துள்ளன. இக்காலத்தில் வெப்பநிலை திடீரென்று குறைந்து பனியூழிப்படலம் ஏற்பட்டது. பனிப்படலம் பொழிந்து உலகெங்கிலும் உள்ள அடர்ந்த காடுகளை அடித்துச் சென்று ஒதுக்கியபோது, செடி, மர இனங்கள் நிலத்தடியில் புதைந்ததால் இன்று வட இந்தியாவிலுள்ள இராணிக்கஞ்சு நிலக்கரிச் சுரங்கங்கள் தோன்றின. இவைகள் கீழ்க்கோண்டுவாளுக் காலத்தவை. இப்பனியூழிப்படலக் காலத்தில் அதற்கு முன் வாழ்ந்த டினுசர் போன்ற அரக்க விலங்கினங்கள் அழிந்துபோயின.

ஜுராசிக் ஊழியில் ஐரோப்பாவிலும் ஆசியாவிலும் விரிவான அளவில் கடல் பரவியது. தமிழ்நாட்டை உள்ளடக்கிய தெற்குக் கோண்டுவாளு நிலப்பரப்பு அளவில் குறையத் தொடங்கிற்று. வேக்னர் கோட்பாட்டுப்படி அது சிறு நிலப்பரப்புகளாகவும் பிரிந்தது. கடலரசன் டெதீஸ்[43] என்னும் தன் அலைக் கைகளை நீட்டினுன். தென் ஐரோப்பாவின் கிழக்கிலும் மேற்கிலும் பரவி, வடபால் பிரிட்டன்வரை உள்ள நிலமடந்தையை அணைத்துக்கொண்டான். இன்றைய நிலையை அடைவதற்கு முன், இன்றுள்ள நிலப்பரப்பின் பெரும்பாலான பகுதி கடலுள் மூழ்கியிருந்தது.

[42] கீழ், மேல் என்பவை குத்துநிலைக் குறியீடுகள். கிடைநிலைக் குறியீடுகளாய்த் திசைகளைக் குறிப்பன அல்ல.

[43] Tethys.

இந்த மாற்றம், எவ்வகையான அசைவையும் முந்நீர் நிலத்தின்மீது ஏற்படுத்தவில்லை. இக்காலத்தில்தான் முதற்பறவையான ஆர்க்கியாப்டெரிக்சும்,[44] பூக்கும் மரங்களும், முதற்பாலூட்டிகளும்[45] தோன்றின.

கிரிடேசியஸ் ஊழி

ஜுராசிக் ஊழியின் முடிவிலும், கிரிடேசியஸ் ஊழி எல்லையின் தொடக்கத்திலும், குறிப்பிடத்தக்க நிலவியல் மாற்ற நிகழ்ச்சிகள் ஏற்பட்டன. நிலப்பொதியியல் வரலாற்றில், மிகச் சிறப்பாகக் குறிப்பிடத்தக்க அளவில் மாபெருங் கடலெழுச்சி ஒன்று இக்காலத்தில் நிகழ்ந்தது. இதைச் சினோமானியன் கடல் எழுச்சி[46] எனக் குறிப்பிடு கிறார்கள். இவ்வெழுச்சியால் பரந்து கிடந்த இந்தியப் பெருநிலப் பரப்புகளை மிகப் பேரளவில் கடல் விழுங்கிய போதுகூட, இன்றைய தமிழ்நாட்டு நிலப்பகுதியை முழுமையாகக் கடல் கொள்ளவில்லை என்பது கருத்தில் நிறுத்தவேண்டிய ஒன்றாகும்.

புதுவையை அடுத்த சிறு நிலப்பகுதியிலிருந்து, காவிரிப் பள்ளத்தாக்குவரை உள்ள சிறு நிலப்பரப்பை இக்கடலெழுச்சி தாக்கியது. ஏறக்குறைய 95 கிலோ மீட்டர் அளவுக்குக் கிழக்குக் கடற்கரையைச் சார்ந்த நிலப்பகுதிக்குள் கடல் நுழைந்துவிட்டதாக வல்லுநர்கள் சான்றுடன் விளக்குகின்றனர். நுழைந்ததாலான கடற்கரை, திருச்சியையும் பெரம்பலூரையும் இணைக் கும் சாலையைத் தெற்கு எல்லையாகவும், தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள வானூரை வடக்கு எல்லையாகவும் கொண்டிருந்தது என்று உய்த்துணரமுடிகிறது.

இந்தக் கடல் ஊடுருவலின் காரணமாகவே, திருச்சி யின் சுற்றுப்புறங்களில், குறிப்பாகக் கருடமங்கலத் திற்கு அண்மையில் கிரிடேசியஸ் அமைப்பைச் சிறந்த

[44] Archaeopteryx.
[45] Mammals.
[46] Cenomanian transgression.

முறையில் வெளிப்படுத்தும் சிப்பிகள் பொதிந்த கடின மான எஃகு வண்ணச் சுண்ணும்புப் பாறை மிகுதியாய்க் கிடைக்கிறது. கட்டட வேலைக்கும், அழகு வேலைப்பாட் டிற்கும் பெரிதும் வேண்டப்படுகிற இப்பாறைகள் திருச்சிராப்பள்ளிச் சலவைக்கல் என வணிகச் சிறப்புப் பெற்று விளங்குகின்றன. கடல்வாழ் தொல்லுயிரிகளின் எச்சங்களை உள்ளடக்கிய இச் சுண்ணும்புப் பாறைகளை இக்கடல் எழுச்சிதான் உண்டாக்கிற்று. இத்தகைய கிரிடேசியஸ் அமைப்புகளைக் கொண்ட பாறைகள், புதுவையிலும், விருத்தாசலத்திலும் கிடைப்பது இந்த உய்த்துணர்வை உறுதிப்படுத்துகிறது.

கிரிடேசியஸ் காலத்தில் வெண்டிரிகுலைட்[47] போன்ற கடல் பஞ்சுகள் தோன்றின. பாறை தோற்றுவிக்கும் பவளக் கூட்டங்கள் மறைந்து, தனிப்பட்டு வளரும் பவளங்கள் மலிந்தன. இரட்டைச் சிப்பிகளையுடைய லமிலிபிராங்கியா[48] பெருகிற்று. முட்டையிட்டுக் குஞ்சு பொறிக்கும் திராகோடான்[49] போன்ற உயிரினங்கள் வாழ்ந்தன. அசைபோடும் விலங்குகளான திரிசாரஸ்[50] இகுவாஞோடான்[51] போன்ற அரக்க உயிரினங்கள் தோன்றின.

கிரிடேசியஸ் ஊழி இறுதியில் ஊன் உண்ணும் விலங்குகளிடையேயும் அசைபோடும் விலங்குகளிடை யேயும் அச்சம் தரத்தக்க வாழ்க்கைப் போராட்டம் நிகழ்ந்தது. இறுதியில் படிமலர்ச்சி வளர்ச்சிப் போக்கி ஞல் இவை நலிந்து போயின. பாலூட்டிகளின் படி மலர்ச்சி மேலும் தொடர்ந்தது. பசுந்தழைக்காடுகள் சுருங்கி ஊசியிலைக்காடுகள் மிகுதியாக வளர்ந்தன.

---

47 Ventriculite.
48 Lamellibranchs.
49 Trachodon.
50 Trisaurs.
51 Iquanodon.

## கடைப்பேரூழி அல்லது மூன்றாங்காற் பேரூழி[52]

இடைப்பேரூழிக்குப் பிற்பட்டது இப்பேரூழியாகும். இது இற்றைக்குமுன் 650 லட்சம் ஆண்டுகளிலிருந்து 10 லட்சம் ஆண்டுகள் வரை நீண்டு கிடக்கும் 640 லட்சம் ஆண்டுகளைக் கொண்டது. இதை இயோசீன்[53], ஒலிகோசீன்[54], மையோசீன்[55], பிலேயோசீன்[56] என்று நான்கு ஊழிகளாகப் பிரித்துள்ளனர். இவற்றின் காலம் முறையே 270, 130, 170, 70 லட்சம் ஆண்டுகளாகும். இந்த ஊழிகளில் நிகழ்ந்த முக்கிய நிலப் பொதியியல் மாற்றங்களைக் காண்போம்.

### இயோசீன் ஊழி

கடல் பின்னோக்கிச் சென்றதால் உண்டான நிலப் பரப்புகள் இற்றைக்கு ஆறு கோடி ஆண்டுகளுக்குமுன் தோன்றின. உலகின் பலவிடங்களில் கடலுக்கு அடியிலிருந்த நிலப்பரப்புகள் உயர்ந்து மலைகளாயின. ஆங்காங்கே சில இடங்களில் நிலப்பரப்புகள் கடலுள் மூழ்கி ஆழமற்ற கடல்களையும் தோற்றுவித்தன. தற்போது இமயமலை உள்ள இடத்தில் அக்காலத்தில் டெதீஸ் என்ற குறுகிய ஆழமான கடல் ஐரோப்பாவின் தென் பகுதியிலிருந்து கிழக்கிந்தியத் தீவுகள்வரை நீண்டிருந்தது.

இதற்கு முந்திய கிரிடேசியஸ் ஊழிக்காலத்தில் காவிரிக்கும் வெள்ளாற்றுக்கும் இடைப்பட்ட பகுதியில் ஊடுருவியிருந்த கடல் இக்காலத்தில் பின்வாங்கியது.

---

52 Tertiary Era.

53 Eocene = விடிவு தோன்று காலம்.
*Eos* (Gr.) = Dawn.

54 Oligocene = சிறியன தோன்று காலம்.
*Oligos* (Gr.) = Small.

55 Miocene = குறைந்தவை தோன்று காலம்.
*Meion* (Gr.) = Less.

56 Pliocene = அதிகமானவை தோன்று காலம்.
*Pleion* (Gr.) = More.

இதன் விளைவால் நேர்ந்த படிவுகளிலிருந்துதான் தஞ்சை, காரைக்கால் பகுதியில் பெட்ரோலியம் எடுக்கும் முயற்சி அண்மைக் காலத்தில் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

தற்காலத்தில் காணப்படும் நிலைக்குச் செடியினங்கள் இக்காலத்தில்தான் மாற்றம் பெற்றன. இலையுதிர் மரங்களும், ஊசியிலை மரங்களும், ஜின்கோ, ஓக், தேக்கு மரங்களை ஒத்த அகன்ற இலைகளையுடைய மரங்களும் இக்காலத்தில் வளர்ந்தன. இவற்றின் வளர்ச்சிக்குத் துணையான தட்பவெப்பநிலை இக்காலத்தில்தான் ஏற்பட்டது.

நும்முலைட்ஸ்[57] என்ற தட்டையான சுருளினையுடைய நுண்ணுயிரினம் இவ்வூழிக்காலத்தில் பல்கி வளர்ந்தது. செரிதியம்[58], சைப்பிரியா[59], மூரக்ஸ்[60] போன்ற சங்குப் பூச்சிகளும், ஸ்டீகோடாண்ட்ஸ்[61] போன்ற திமிங்கலங்களும் உண்டாயின. ஏரிகளிலும், பேராறுகளிலும், முதலைகளும், ஆமைகளும் காணப்பட்டன. தற்காலப் பறவைகளின் மூதாதைகள் தோன்றின. எல்லா அரக்க உயிரினங்களும் அழிந்தன. ஊன் உண்ணும் விலங்குகளின் பற்கள் உறுதி பெற்றன. தழையுண்ணும் விலங்கினங்களான குதிரை, மாடு, யானை, காண்டாமிருகம், பன்றி ஆகியவற்றின் மூதாதைகள் தோன்றின. மனிதனின் மூதாதைகளான 'தலைமி'களும்[62] தோன்றின.

### ஒலிகோசீன் ஊழி

இயோசீன் ஊழிக்கு அடுத்தது ஒலிகோசீன் ஊழியாகும். டெதீஸில் படிந்த இடைப்பேரூழி-மூன்றுங்காற் பேரூழிப் படிவுகள் நில அசைவுகளால் அழுத்தப்

---

[57] Nummulites.
[58] Cerithium.
[59] Cypraea.
[60] Murex.
[61] Stegodonts.
[62] Primates.

பட்டுத் தீவுத்தொடர்களும், மலைத்தொடர்களும் உண்டாயின. இதனால் ஆல்ப்ஸ் மலை தோன்றியது. இந்த ஊழியில் தட்பவெப்பநிலை வெதுவெதுப்பாக இருந்தது. இதனால் முதலைகள், குளிர் பருவங்களில் வளரும் செடியினங்கள் ஆகியவற்றின் வளர்ச்சி தடைப்பட்டது. தற்காலத்தில் காணப்படும் சங்குப் பூச்சிகளும், கடல் நண்டுகளும் தோன்றின. பரந்த புல்வெளிகள் உண்டாயின. சதுப்புநிலக் காடுகள் அடர்ந்து வளர்ந்தன.

கரப்பான் பூச்சிகள், வண்ணத்துப் பூச்சிகள், ஈக்கள், தேனீக்கள் ஆகியவை இவ்வூழியில் தோன்றிப் பரந்தன. வெள்ளை எறும்புகள், நன்னீர்ப் பாம்புகள் ஆகியவை தோன்றின. பாலூட்டிகளும் தலைமிகளும் சிறந்து வளர்ந்தன. ஒட்டகம், குட்டையான தும்பிக்கையுடன் தந்தங்களையுடைய யானை, மூன்று குளம்புகளையுடைய குதிரை ஆகியவை மேலும் படிமலர்ச்சியுற்றன. கரடிகள், பூனைகள், நாய்கள் ஆகியவற்றின் மூதாதைகள் வாழ்ந்துவந்தன. ஆப்பிரிக்காவில் கிப்பன்[63] என்பதை ஒத்த தலைமிகள் வாழ்ந்தன. இவை மனிதக் குரங்கிற்கும் மனிதனுக்கும் மூதாதை எனக் கருதப்படுகின்றன.

### மையோசீன் ஊழி

இந்த ஊழியில்தான் ஆல்ப்ஸ் மலை நன்றாக உருவாயிற்று. இத்துடன் இமய மலையும் முன்பிருந்ததைவிட மேலும் உயர்ந்தது. மிகவும் வன்மை வாய்ந்த நில அசைவுகளால் டெதீஸ் கடலில் உள்ள படிவுகள் கசக்கப்பட்டும் மடிக்கப்பட்டும் மலைத்தொடர்களாக உயர்த்தப்பட்டன. இதனுடன் எரிமலைக் குழம்புகளும் அவ்வப்போது உமிழப்பட்டன. கடல் வரம்புகளிலும் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் ஏற்பட்டன. டெதீஸ் மிகவும் குறுகிவிட்டது.

ஆல்ப்ஸ், இமயம் ஆகிய மலைகள் உயர்ந்ததால், பருவ நிலைகள் முற்றிலும் மாறுபட்டன. மித வெப்ப

---

[63] Gibbon.

நிலையே நீடித்தது. பசுந்தழைக் காடுகளெல்லாம் சுருங்கின. பீடபூமிகளிலும் மலைச்சாரல்களிலும் புல் வெளிகள் பரவின. கடலில் நும்முலைட்டுகள் அழியத் தொடங்கின. சுண்ணப்பாறைகளைத் தோற்றுவிக்கும் ஆல்காக்கள் பல்கின. விலங்கினங்களிலும் செடியினங் களிலும் தற்போது காணப்படும் உயிரினங்களின் மூதாதைகள் வாழ்ந்துவந்தன.

### பிலையோசீன் ஊழி

இந்த ஊழியில் ஆல்ப்ஸ், இமயம் ஆகிய இரு மலைகள் மேலும் உயர்ந்தன. கண்டங்களும் கடல்களும் தற்போதைய நிலையை அடைந்தன. விலங்கினமும் செடியினமும் தற்போதைய நிலையை நோக்கிய மாற்றத் துக்கு உள்ளாயின. குதிரையினம், ஒட்டைச்சிவிங்கி, புலி, குரங்கு, பறவை ஆகிய உயிரினங்கள் சிறந்து வளர்ந்தன. மனித இன மூதாதைகளான 'தலைமி'களின் படிமுறை வளர்ச்சி குறிப்பிடத்தக்க நிலையில் இருந்தது.

மையோசீன், பிலையோசீன் படிவ அமைப்புகள் தஞ்சை, காரைக்கால் கடற்கரைப் பகுதிகளில் காணப் படுகின்றன. நிலப்பொதியியல் சிறப்பைக் கொண்ட கடலூர் மணற்பாறைகளும்[64] காஞ்சிப் பெருமணலும்[65] மையோசீன் ஊழிக்காலத்துப் பிற்பகுதியில் அல்லது பிலையோசீன் ஊழிக்கால முற்பகுதியில் தோன்றியவை யாக இருக்கக்கூடும்.

இக்காலத்தில் கிழக்கு நோக்கிக் கடல் பின்வாங்கிய போது பின்வாங்கிய பகுதிகளில் காயல்களும் உப்பங் கழிகளும் தோன்றின. இதற்கு முந்திய காலத்தில் அடர்ந்து வளர்ந்திருந்த சதுப்புநிலக் காடுகள் இக் காலத்தில் நேர்ந்த நில அசைவு, உயர்ச்சி மாற்றங்களால் தாக்கப்பட்டு, இப்பகுதிகளுக்கு அண்மையிலுள்ள சேலம், திருச்சி, தென்னார்க்காடு பகுதிகளிலிருந்து

---

[64] Cuddalore sandstone.
[65] Conjeevaram gravel.

அடித்துக் கொணரப்பட்ட மணல், களிமண் ஆகியவற்றுடன் புதையுண்டு படிந்தன. இவைகள் பின்னர் இறுகிப் பழுப்பு நிலக்கரிப் படிவுகளாக மாறின. நெய்வேலி, புதுச்சேரி[66] பழுப்பு நிலக்கரிப் படிவுகள் இவ்வகையில் தோன்றியவை.

## நாலாங்காற் பேரூழி[67]

மூன்றாங்காற் பேரூழியை அடுத்து அமைவது நாலாங்காற் பேரூழி ஆகும். இது இற்றைக்குமுன் 10 லட்சம் ஆண்டுகள்வரை உள்ள காலத்தைக் கொண்டது. பிலைஸ்டோசீன் ஊழி[68], ஹோலோசீன்[69] அல்லது அண்மைக்கால ஊழி என்னும் இரண்டு ஊழிகளாக இது பிரிக்கப்பட்டுள்ளது.

### பிலைஸ்டோசீன் ஊழி

இந்த ஊழி ஏறத்தாழ 10 லட்சம் ஆண்டுகளைக் கொண்டது. இவ்வூழியின் இறுதியில் இற்றைக்கு 3 லட்சம் ஆண்டுகளுக்கு முன் 5 பனிப்படர்வு ஊழிப் பருவங்கள் தோன்றின. இந்த ஊழிப் பருவங்கள் ஒவ்வொன்றையும் அடுத்து ஒவ்வொரு பனிப்படர்வு இடைவெளி தோன்றியது. இவ்வகையில் பனிப்படர்வும் இடைவெளியுமாக மாறி மாறித் தோன்றிய ஊழிப் பருவங்களில் ஐந்தாவது பனிப்படர்வு ஊழியை அடுத்துத் தோன்றியுள்ள இடைவெளிக் காலத்திலேயே நாம் இப்போது வாழ்ந்துவருகிறோம்.

நாலாங்காற் பேரூழிக் காலத்தில்தான் கண்டங்களும் கடல்களும் தற்போதுள்ள எல்லைகளுக்கு உட்

---

66 பிரஞ்சுக்காரர் 'பாண்டிச்சேரி' என்று இதனைத் திரித்து வழங்கினர்.

67 Quarternary Era.

68 Pleistocene = மிகுதியானவை தோன்று காலம்.
*Pleistos* (Gr.) = Most.

69 Holocene = நிறைந்தவை தோன்று காலம்.
*Holo* (Gr.) = Whole.

பட்டன. கடற்கரைகள் உயர்ந்து மணற்பரப்பாயின. தமிழ்நாட்டின் தென்கிழக்குக் கடற்கரைப் பகுதியில் காணப்படும் மணல்மேடுகளும், நாட்டில் பரவலாகக் காணப்பட்டுத் தேரி என வழங்கப்படும் செம்மண் பரப்பு களும் இக்காலத்தில் அமைந்தவை என நம்பப்படு கின்றன.

பிலேஸ்டோசீன் ஊழி இறுதியில் வெப்பநிலை மிகவும் குறைந்தது. வட ஐரோப்பா, வட அமெரிக்கா, அண்டார்டிகா ஆகிய நிலப்பகுதிகளிலும் ஆல்ப்ஸ், இமயம் ஆகிய மலை முகடுகளிலும் பனிப்படர்வு நிகழ்ந்தது. இது வடக்கிலிருந்து தெற்காக ஊர்ந்தது. பிலேஸ்டோசீன் ஊழித் தொடக்கத்தில், எரிமலை இயக்கமும் பள்ளத்தாக்குகளும் உண்டாயின. துருவப் பகுதியில் பனியின் கொடுமையைத் தாங்கும் மயிர் அடர்ந்த தடித்த தோல்களையுடைய உயிரினங்கள் தோன்றி வாழ்ந்தன.

இக்காலத்தில் யானைகள், குதிரைகள், எருதுகள் ஆகியவை படிமுறை வளர்ச்சி பெற்றன.

'தலைமி'களிலிருந்து படிமுறை வளர்ச்சியுற்று இக் காலத்தில்தான் மனிதன் தோன்றினான்.

## ஹோலோசீன் அல்லது அண்மைக்கால ஊழி

பிலேஸ்டோசீன் ஊழியின் பனிப்படர்வு முடிந்த வுடன் ஹோலோசீன் ஊழி தொடங்கிற்று. இது கி. மு. 8000 ஆண்டிலிருந்து தொடங்குகிறது. இந்த ஊழிப் பருவத்தில்தான் தற்கால மனிதன் நாகரிக வாழ்க்கையில் ஈடுபடலானான்.

## தமிழகத்தின் சிறப்பு

நிலப்பொதியியலின் வரலாற்றுத் தொடக்க கால மான கேம்பிரியன் காலம் முதல் தென்னிந்தியா நிலப் பரப்பாகவே இருந்துவந்தது. சிறுசிறு பகுதிகள் நீங்க லாக அதன் பரப்பு என்றுமே கடற்கோளுக்கு உட்பட வில்லை. இதற்கு மாறாக வட இந்தியப் பகுதி அதன்

வரலாற்றுக் காலப் பெரும்பகுதியில் பெரும்பாலும் கடலுள் மூழ்கியிருந்தது. அதனால் கேம்பிரியன் காலம் முதற்கொண்டு ஏற்பட்ட கடலடிப் படிவுகள் அதன் நிலப் பரப்பைக் கவ்விக்கொண்டுள்ளன.

தென்னிந்தியப் பாறைகள் எண்ணிலா ஆண்டுகள் அசைக்க முடியாத வீறமைதியுடன் விளங்கிவருகின்றன. இதன் தொன்மையையும், நிலைப்புத் தன்மையையும் கருதி இதனைக் 'கேடய நிலம்'[70] என்று குறிப்பிடுகின்றனர்.

தென்னிந்திய மலைகள் எச்சமலைகள்[71] என்னும் வகையைச் சேர்ந்தவை. ஊழியியக்கம்[72] அல்லது நில நசிவின் காரணமாக உயர்நிலப் பரப்பின் சிற்சில பகுதிகள் அரிக்கப்பட்டுத் தாழ்ந்தது போக, எஞ்சிநிற்கும் பாறைப் பகுதிகளே இன்று தமிழ்நாட்டில் மலைகளாகக் காட்சியளிக்கின்றன.

தமிழகத்தின் ஆறுகள் முதுமை நிலையை அடைந்தவை. இவை அகலமானவை; ஆழமற்றவை. தென்னிந்திய நிலப்பரப்பின் எழில் மிக்க குறிஞ்சிக் காட்சிகளும், வனப்புமிக்க முல்லைக் காட்சிகளும், பசுமையான மருதநிலக் காட்சிகளும், நலந்தரும் நெய்தல் நிலக் காட்சிகளும் உலகத்தார் எல்லாரையும் கவர்ந்துள்ளன. வறண்ட பாலைநிலக் காட்சிகளைத் தற்கால மின்விசையின் உதவியால் நீரை ஏற்றிக் கரம்பிலும் வரப்புக் கட்டிப் பசுமைப் புரட்சியால் வளமாக்கிக் காணும் பேறு நமக்கு உண்டு.

## பனிப்படர்வு ஊழியும் குமரிக்கண்டமும்

கடலை ஒட்டிய தாழ்ந்த நிலப்பகுதிகளையும் சமவெளிகளையும் அடிக்கடிக் கடல் கொண்டது என்பதற்கு நிறையச் சான்றுகள் உள்ளன. தமிழகத்தின் கடற்கரையை ஒட்டி ஆழமற்ற கடல் பரவலாக அமைந்

---

70 Shield.

71 Relic Mountains.

72 Orogeny.

துள்ளது. இக்கடற்பகுதிகள் கடற்கரையை ஒட்டிய தாழ்ந்த நிலப்பரப்பாய் இருந்தபோது கடலால் அழிக்கப் படுவது இயல்பான நிகழ்ச்சியே ஆகும். இவ்வகையில் அழிக்கப்பட்டு இன்று தமிழகத்தை ஒட்டி மூழ்கியுள்ள நிலப்பகுதியை மக்கள் குமரிக்கண்டம் என்ற பெயரால் வழங்கியிருக்கலாம்.

பனிப்படர்வுக் காலங்களில் ஏராளமான பனிக் கட்டிகள் துருவப் பகுதியிலும் கண்டங்களிலும் படிந்த தால் கடல்மட்டம் குறைந்தது. இக்காலங்களில் கடல் மட்டம் பொதுவான தன் மட்டத்திலிருந்து 100 மீட்டர் வரை குறைந்ததாக வல்லுநர்கள் மதிப்பிட்டுள்ளனர்.[73] மற்றும் பனிப்படர்வு இடைவெளிக் காலத்தின்போது கண்டங்களில் படிந்திருந்த பனிக்கட்டிகள் உருகியதால் 30 மீட்டர் உயரத்துக்கும் அதிகமாகக் கடல்மட்டம் அதன் பொதுவான மட்டநிலையிலிருந்து உயர்ந்தது. இதனால் மொத்தமாகக் கடற்கரையை ஒட்டிய 130 மீட்டர் உயரத் திற்குக் குறைந்திருந்த தாழ்வான நிலப்பரப்புகளெல்லாம் கடலுள் மூழ்கின. மேலும் பனிக்கட்டி, நிலப்பரப்பை அழுத்துவதாலும் கடல்மட்டம் உயர்வது இயல்பு. இவ்வாறு உயர்ந்து ஏற்பட்ட அழுத்தவிசையால் மேலும் உயரமான, அதாவது 130 மீட்டருக்கும் மேற்பட்ட உயரமுடைய நிலப்பரப்புக்கூடக் கடலால் கொள்ளப்பட் டிருக்கவேண்டும்.

கடல் பின்வாங்கிச் செல்வதால், நீர் அழுத்தத்தில் அமுங்கிக் கிடந்த நிலப்பரப்புகள் உயர்வதும் உண்டு. மேல் விளக்கப்பட்ட விதியின்படி, ஒரு காலத்தில் ஒருங் கிணைந்திருந்ததாகக் கருதப்படும் நாடுகள் :

1. இங்கிலாந்து—அயர்லாந்து
2. இங்கிலாந்து—பிரான்சு
3. அலாஸ்கா—சைபீரியா
4. சைபீரியா—ஜப்பான்
5. மலேசியா—சுமத்திரா—ஜாவா—போர்னியோ

---

[73] Kuenen (1955).

6. ஆஸ்திரேலியா—நியூகினி
7. ஆஸ்திரேலியா—தாஸ்மேனியா
8. இந்தியா—இலங்கை ஆகியவை.

எனவே, குமரிக்கண்டம் என்பது தமிழகப் பகுதியை ஒட்டிக் கடலுள் மூழ்கிய நிலப்பரப்பாக இருந்திருக்கலா மென்றும், கடல்மட்ட வேறுபாட்டால் அது கடலால் கொள்ளப்பட்டிருக்கலாம் என்றும் அறியலாம்.

மன்னார்வளைகுடாவைச் சேர்ந்த பெருநிலப் பகுதியும், தமிழகம் இலங்கை ஆகிய நாடுகளுக்கிடையே உள்ள பாக் கடலிடுக்கும்[74] அண்மைக் காலத்தில் மூழ்கியன வாகத் தெரியவருகின்றன. கி. மு. 8000 ஆண்டுகளுக்கு முன் பனிப்படர்வு ஊழி இருந்ததால், இந்நிகழ்ச்சி கி.மு. 8000 ஆண்டுக்குப் பின்னரே நிகழ்ந்திருத்தல் வேண்டும்.

கி. மு. எட்டாயிரத்திற்குப் பிறகு பனிப்படர்வு ஊழிக் காலம் முடிவுற, வெப்பத்தால் பனிக்கட்டிகள் உருகத் தொடங்கி, கடல் மட்டம் உயர்ந்தது. கி.மு. 6000-ல் கடல் மட்டம் உயர்ந்து பிரிட்டனும் ஐரோப்பாக் கண்டமும் துண்டிக்கப்பட்டன என்று கூறப்படுகிறது.[75] ஆகையால் ஏறத்தாழ அதே காலத்தில் மூழ்கிய நிலப்பகுதியால் மன்னார்வளைகுடாவும் பாக் கடலிடுக்கும் தோன்றியிருக்கலாம். மாமல்லபுர அழிவும் இவ்வாருகவே நேர்ந்திருக்கலாம். இதற்குச் சான்றாகத் திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்த கடற்கரையிலும், வாலிநோக்கம் வளைகுடாவிலும் அக்காலத்தில் கடற்கரையோரம் வளர்ந்த காடுகள் இன்று கடலுள் மூழ்கியிருப்பதைக் கொள்ளலாம். இக்காடுகளில் இருந்த மரங்களின் அடிமரப் பகுதிகள் இரண்டடி அளவு விட்டம் கொண்டவை. இம்மரங்கள் அக்காலத்துக் கடற்கரையோரங்களில் வளர்ந்திருக்கலாம். பிரிட்டனிலும் இவை போன்ற கடலுள் மூழ்கிய காடுகள் காணப்படுகின்றனவாதலால் மேற் கூறிய கால வரையறை தமிழகத்திற்கும் பொருந்தும்.

---

[74] Strait.

[75] Oakley & Muir (1959).

லெமூரியாக் கண்டம், அட்லாண்டிக் கண்டம், 'மூ' என்னும் பசிபிக் கண்டம் ஆகியவை அறிவியலாளரால் முழுமையான அளவில் ஒப்புக்கொள்ளப்படவில்லை. எனினும், இலங்கை தென்னகத்துடன் இணைந்திருந்தது என்பதும் குமரிமுனைக்குத் தெற்கே நிலப்பரப்பு இருந்தது என்பதும் ஏற்றுக்கொள்ளப்பட்ட உண்மைகளே ஆகும். இலக்கியங்களில் குறிப்பிடப்படும் குமரிக்கண்டம் இந்நிலப் பரப்பே ஆகலாம். (காண்க. நிலப்படம்–2)

தமிழ்நாட்டில் பிலைஸ்டோசீன் காலத்தில் குறிப்பிடத்தக்க நிலவியக்க அசைவுகளோ, நிலநடுக்கமோ அல்லது எரிமலைக் குமுறல்களோ இல்லை. இற்றைக்கு முன் மூன்று லட்சம் (3,00,000) ஆண்டுகளில் தொடங்கி ஏற்பட்ட ஐந்து பெரிய பனியூழிகளால் கடலோரப் பகுதிகள் மட்டும் அழியத் தமிழகம் அவற்றினின்றும் தப்பி மீண்டது. மற்றும் தமிழ்நாட்டிலுள்ள பாறைகளிலிருந்து, தமிழ்நாட்டில் எக்காலத்திலும் பனி படர்ந்ததாகத் தெரியவில்லை. மேலும், தமிழ்நாட்டில் பனிப்படர் காலங்களில் மித வெப்பநிலை இருந்ததால் மக்கள் நலமாக வாழ்ந்தனர் எனலாம். இவ்வகையான அமைதியான சூழ்நிலை, சில நூற்றாண்டுகளில் நாகரிக வளர்ச்சி ஏற்படுவதற்கான வாய்ப்பை உருவாக்கியது என்பது இக்காலத்தில் நாம் கண்கூடாகக் காண்பதாகும்.

மிகத் தொன்மைக் காலமான, 1,50,000 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழர்களின் மூதாதையர் மூன்று பனிப்படர்வு ஊழிகளையும் மூன்று பனிப்படர்வு இடைவெளிக் காலங்களையும் கண்டிருக்கலாம். பனிப்படர்வு ஊழிக்காலங்களில் பரந்த நிலப்பரப்புகள் கடலில் மூழ்கி அழிந்ததையும் கண்ணுற்றிருக்கலாம்.[76]

---

76 "தொன்று நிகழ்ந்த தனைத்தும் உணர்ந்திடு
சூழ்கலை வாணர்களும்—இவள்
என்று பிறந்தவள் என்றுணராத
இயல்பின ளாமெங்கள் தாய்"

என்று தேசிய மகாகவி பாரதி தன் கவிதையில் வடித்துக் கொடுக்கும் தமிழ் அன்னையின் தொன்மை நாகரிகச் சிறப்பானது, ஒளி வீசும் வரலாற்றைக் கடந்த நிலப்பொதியியல் காட்டும் இத்தொன்மைச் சிறப்பாகும் என்று கொள்ளலாம்.

| பேரூழி | ஊழி | கால எல்லை | இற்றைக்கு முன் |
|---|---|---|---|
| | | (ஆண்டுகள் கோடிக்கணக்கில்) | |
| நாலாங்காற் பேரூழி | ஹோலோசீன் | 0·01 | |
| (0·1 கோடி ஆண்டு) | பிலெஸ்டோசீன் | 0·1 | 0·1 |
| கடைப்பேரூழி | பிலியோசீன் | 0·7 | 0·8 |
| அல்லது | மையோசீன் | 1·7 | 2·5 |
| மூன்றுங்காற் பேரூழி | ஒலிகோசீன் | 1·3 | 3·8 |
| (6·4 கோடி ஆண்டு) | இயோசீன் | 2·7 | 6·5 |
| இடைப் பேரூழி | கிரிடேசியஸ் | 7 | 13·5 |
| (17 கோடி ஆண்டு) | ஜுராசிக் | 6 | 19·5 |
| | திரயாசிக் | 4 | 23·5 |
| தொல் பேரூழி | பெர்மியன் | 5 | 28·5 |
| (36·5 கோடி ஆண்டு) | கார்பானிபெரசு | 6 | 34·5 |
| | டெவோனியன் | 6 | 40·5 |
| | சைலூரியன் | 3·5 | 44 |
| | ஆர்டோவிசியன் | 6 | 50 |
| | கேம்பிரியன் | 10 | 60 |
| ஆர்க்கேயன் பேரூழி | முந்தைக் | | |
| அல்லது | கேம்பிரியன் | 200 | 250 |
| உயிரினமற்ற பேரூழி | ஆர்க்கேயன் | | 450 |

# இயல் 2
# நிலவியல்

ஒரு நாட்டின் வரலாறு அதன் இயற்கையமைப்பிற்கேற்ப இசைந்துகொடுத்துச் செல்வதாகும் என்ற உண்மையினை யாவரும் அறிவர். எகிப்துநாட்டில் பாயும் நைல் ஆறு அந்நாட்டின் பண்டைய நாகரிகத்திற்கு எவ்வளவோ பேருதவியாய் அமைந்திருந்தது. கிரேக்கநாட்டின் மலைச்சூழல் கிரேக்கர்களைச் சிறந்த போர்வீரர்களாக விளங்கச் செய்தது. அந்நாட்டினிடையே கடல் ஊடுருவிச் சென்ற இயற்கை அமைப்பு கிரேக்கர்களைக் கடல் வாணிகத்தில் சிறந்து விளங்கச் செய்தது. இவை போன்ற ஒரு நாட்டின் நிலவியல் அமைதிகள் அந்நாட்டின் வரலாற்றில் எத்தகைய செல்வாக்கினைப் பெற்றுள்ளன என்பதை வரலாற்றாசிரியர்கள் நன்கு உணர்வர். இவ்வகையில் தமிழ்நாட்டிற்கு இயற்கையாய் அமைந்த நிலவியலும் அதன் அரசியல், நாகரிகம், பண்பாடு, கலை, முதலான வரலாற்று நிகழ்ச்சிகளில் செல்வாக்கினைப் பெற்றிருந்தது. எனவே தமிழ் நாட்டின் வரலாற்றினைக் காணும்போது அதன் நிலவியலை வரலாற்றுத் தொடர்போடு காணவேண்டும்.

தொல்பழங்காலம், சங்ககாலம் என்னும் பழங்காலம், இடைக்காலம், அண்மைக்காலம் ஆகிய நால்வேறு வரலாற்றுக் காலங்களில் தமிழ்நாட்டின் பரப்பளவில் ஏற்றத்தாழ்வுகள் உண்டு. அவற்றின் அளவுகளை அறுதியிட்டுரைக்கும் சான்றுகள் இல்லை. பொது வகையால் நூலின் பிறவிடங்களில் அவை சுட்டப்படும்.

இப்போதுள்ள தமிழ்நாட்டின் பரப்பு 1971ஆம் ஆண்டுக் கணக்குப்படி 1,30,069 சதுரக் கிலோ மீட்டர் ஆகும்.[1]

## இருப்பிடம்

இன்று தமிழ்நாடு என்னும் பெயர் பூண்டு ஆளப் பட்டுவரும் நிலப்பகுதி இந்தியாவின் தென்கிழக்கு மூலே யில் உள்ளது. உலகிலுள்ள பகுதிகளைக் கிடைக்கோடு களாலும்,[2] குத்துக்கோடுகளாலும்[3] கணக்கிட்டுக் காட்டு வது நிலவியலார் வழக்கமாகும். அவ்வாறு கணக்கிட்டுக் காட்டும்போது 8° 5′ வட கிடைக்கோடு தமிழ் நாட்டின் தென் கோடியில் அமைகின்றது. வட கோடியில் 13° 35′ வட கிடைக்கோடு அமைகின்றது. கிழக்குக் கோடியி லும் மேற்குக் கோடியிலும் முறையே 80° 20′, 76° 15′ கீழைக்குத்துக் கோடுகள் அமைகின்றன.[4]

தமிழ்நாடு நிலத்தால் இந்திய தேசத்துடன் தொடர்பு கொண்டிருந்தாலும் மொழியிலும் பண்பாட்டி லும் ஒரு தனித்த மரபினை உடையதாய்த் திகழ்கின்றது.[5]

இந்நாட்டிற்கு இயற்கையாய் அமைந்த சிறப்புக் கூறுகள் பலவற்றுள் இரண்டைக் குறிப்பிடலாம்.

### 1. தொன்மை

தமிழக நிலப்பரப்பு மிகப் பழமை வாய்ந்தது. இவ் வுண்மை மேலே (இயல் 1.) தெளிவாக விளக்கப்பட் டுள்ளது. இதனால், உலகம் தோன்றிய காலம் முதல் உள்ள நிலப்பொதியியல், மண்ணியல், உயிரியல், சமூக

---

[1] According to Census of India-1971.

[2] Latitudes.

[3] Longitudes.

[4] T.S. Paramasivan, "Physiography and Drainage of Tamilnad"; *This is Tamilnad* (Released on the occasion of the XXI International Geographical Congress, Madras symposium 1968), p.l.

[5] The Director of Information and Publicity, Madras, *Madras in Maps and Pictures* (1959), p.l.

வியல் முதலானவற்றின் எல்லாப் படிமுறை வளர்ச்சிக் கூறுபாடுகளையும் நம்நாட்டில் காணக்கூடிய வாய்ப் பினை நாம் பெற்றுள்ளோம்.

## 2. நீர், நிலத் தொடர்பு வாய்ப்புகள்

ஏறத்தாழ 11 கோடி ஆண்டுகளுக்கு முன்னதான கோண்டுவானா என்னும் நில அமைப்பால் நம் நாடு ஆப் ரிக்கா, ஆஸ்திரேலியா ஆகியவற்றுடன் நிலத்தால் தொடர்பு கொண்டிருந்தது என்பது மேலே விளக்கப்பட் டுள்ளது. இதனால் அக்காலத்தில் ஆஸ்திரேலியா, ஆப் ரிக்கா முதலான பகுதிகளில் இருந்த உயிரினங்கள் நம் நாட்டில் வந்தேறியும், நம் நாட்டில் இருந்தவை அப் பகுதிகளில் சென்றேறியும் வாழ்ந்திருந்தன. பின்னர் வடக்குப் பக்கம் நிலத்தாலும் ஏனைய மூன்று பக்கம் பெருங்கடல் நீராலும் தமிழ்நாடு சூழப்பட்டது. கடல் சூழ்ந்த அமைப்பு பகைவர் எளிதில் தாக்காவண்ணம் காக்கும் இயற்கை அரணாக அமைந்ததோடு, தொலை நாடுகளோடு வேற்று நாட்டவரின் இடையூறு இல்லாமல் வாணிகத் தொடர்பு கொள்ள வசதியாகவும் அமைந்தது.

### பெயர் வழக்கு

தமிழ்நாடு அல்லது தென்னாடு 'நாவலந்தண் பொழில்' என்று வழங்கப்பட்டுவந்தது.[6] 'நாவலந்தண் பொழில்' என்னும் இச்சொல்வழக்கு இந்திய நிலப் பரப்பு முழுவதையும் உணர்த்தியதோ என்று எண்ணும் படி அமைந்த பாடற்பகுதிகளும் உண்டு.[7] அடுத்துக் காட்டப்படும் 'சம்புத்தீவு' என்னும் ஆட்சியை நோக்கி, நாவலந்தண்பொழிலின் ஒரு பகுதியாகத் தமிழகம் விளங்கியதாகக் கொள்ளவும் இடமுண்டு. 'நாவலந்தண் பொழில்' என்பதற்கு நாவல் மரங்கள் மிக்க குளுமை யான சோலை என்பது பொருள். இப்பெயர் முதன் முதல் வழங்கப்பெற்ற காலத்தில் நாவல் மரங்கள் மிகுதி

---

[6] பரிபா. 5 : 8
[7] பெரும்பாண். 465, சிலப். 17 : 1 : 3, 25 : 173, மணிமே. 22 : 29

யாக இருந்திருக்கவேண்டும். இம்மரங்கள் சங்ககாலத்திலும் குறிப்பிடத்தக்க நிலையில் இருந்தன.[8] காவிரிப் பூம்பட்டினத்தைச் சம்பாபதி என்று குறிப்பிட்டதும் அங்கு நாவல் மரம் மிகுதியாக இருந்தமையை நோக்கியே ஆகும். சம்பு என்பது நாவல் மரத்தைக் குறிக்கும் வடசொல். இப்பெயர்கள் இயற்கை அமைப்பின் அடிப்படையில் தமிழ்நாட்டிற்கு ஏற்பட்டவை எனலாம். சிலப்பதிகாரக் காலத்திலும் இப்பெயர்வழக்கு தொடர்ந்தது[9]. மணிமேகலை இவ்வழக்குடன்[10] நாவலந் தீவு,[11] நாவல் ஓங்கிய மாபெருந்தீவு,[12] நாவலொடு பெயரிய பெருந்தீவம்[13] என்னும் வழக்குகளையும் ஆள்கின்றது. மணிமேகலை இதனைச் 'சம்புத் தீவு' என்றும் ஆள்கிறது.[14] இப்பெயரை ஆளுமிடத்தில் சம்புத்தீவின் ஒரு பகுதியாகத் தமிழகம் விளங்கியது என்று அது கூறுகின்றது.[15] "இமிழ் கடல் வரைப்பில் தமிழகம்"[16] "இமிழ்கடல் வேலியைத் தமிழ்நாடாக்கிய"[17] என்று சிலப்பதிகாரம் குறிப்பிடும்போதும் அப்பொருளே தோன்றுகிறது. தீவு, இமிழ்கடல் வரைப்பு ஆகியவை நாற்புறமும் நீரால் சூழப்பட்டிருந்த பெருநிலப் பரப்பை உணர்த்துவன என்பது தெளிவு. சங்ககாலத்தில் தமிழகம் தீவாக விளங்கவில்லை. ஆரியர் இந்தியாவில் நுழைந்த

---

[8] மலைபடு. 135, நற். 35 : 2, அகநா. 380 : 4, புறநா. 177 : 11
[9] சிலப். 17 : 1 : 3
[10] மணிமே. 22 : 29
[11] மணிமே. 25 : 12
[12] மணிமே. 2 : 1
[13] மணிமே. 11 : 107
[14] மணிமே. 17 : 62
[15] பாரதவர்சம், சாகரசம்வர்த்த தீவு, குமரித்தீவு என்னும் பெயர்களாலும் சம்புத் தீவு அழைக்கப்பட்டுவந்தது என்றும், சம்புத்தீவின் ஒரு பகுதியாகப் பாரதவர்சம் (இந்தியா) விளங்கியது என்றும், பிறவாறும் கொள்ளத்தக்க வகையில் 'சம்புத் தீவு' என்னும் பெயர் புராணங்களில் கையாளப்பட்டுள்ளது. (D.C. Sircar *Cosmography and Geography in Early Indian Literature*, p. 33 ff.
[16] சிலப். 3 : 37
[17] சிலப். 25 : 165

காலத்திலேகூட அது தீவாக விளங்காமல் முந்நீர் நிலமாகவே[18] விளங்கியது. ஏறத்தாழ இரண்டு லட்சம் ஆண்டுகளுக்கு முற்பட்ட காலப்பகுதியில் நன்னீர்க் கடல்கள் இப்போதுள்ள சிந்து, கங்கை ஆற்றுப்பகுதி களில் ஒன்றை ஒன்று தொட்டுக்கொண்டு அரபிக்கடலை யும் வங்காளக் குடாக்கடலையும் தொடுவதுபோலக் கிடந் தன.[19] இதனால் நேர்ந்த நில அமைப்பினை அக்கால மக்கள் (தமிழர்) தீவு என்று குறிப்பிட்டனர் போலும். இதன் வழியே மரபு வழக்காகச் சிலப்பதிகாரமும், மணிமேகலையும் தீவு என்று குறிப்பிடுகிறது என்று கொள்ளலாம். எப்படியாயினும் தமிழ்நாட்டிற்கு வழங் கிய மேற்கண்ட பெயர்கள் இயற்கை அமைப்பை ஒட்டி அமைந்தவையே என்பது தெளிவு.

தமிழ்மொழி பேசும் மக்கள் வாழ்ந்துவந்த நிலப் பகுதி பண்டைக் காலத்தில் ‘தமிழ்’ என்னும் சொல்லா லேயே குறிக்கப்பட்டுவந்தது.[20] பின் தமிழகம்,[21] தமிழ் நாடு,[22] தமிழ் நாட்டகம்,[23] தமிழ் நன்னாடு,[24] என்னும் சொற்கள் தோன்றி அந்த நிலப்பகுதியை உணர்த்த லாயின. இந்தப் பெயர்கள் மொழியின் அடிப்படையில் தமிழ்நாட்டுக்கு அமைந்தவை என்னும் உண்மையைத் ‘தமிழ்கூறு நல்லுலகம்’[25] என்னும் பழந்தொடர் உணர்த்துகிறது.

## எல்லை

மொழி அடிப்படையிலான தமிழ்நாட்டின் சங்ககால வடக்கு எல்லை வேங்கடமலை என்று இலக்கியங்களில்

---

18 Peninsula
19 A.K.Dey, *Geology of India* (1939), Map p. 129
20 அகநா. 227 : 14, புறநா. 19 : 2, 35 : 3, 51 : 5.
21 புறநா. 168 : 18, சிலப். 3 : 37, பதிற். பதி. 2 : 5.
22 சிலப். 23 : கட். 15, 25 : 165, 29 : 1 : 8.
23 பரிபா. திர. 8 : 1
24 சிலப். 10 : 58, 25 : 171
25 தொல். பாயிரம். 3

கூறப்பட்டுள்ளது.[26] (காண்க. நிலப்படம் 3.) இந்த மலை இப்போதுள்ள திருப்பதி மலை ஆகும். இதனை நாட்டின் கிழக்குப் பகுதிக்கு வட எல்லை என்றுதான் கொள்ள முடியும். இது வட எல்லை அன்று; இம்மலைக்குத் தெற்கில் இருந்த புலிக்காடுதான் தமிழகத்தின் கிழக்குப் பகுதிக்கு வடக்கு எல்லை என்று கூறுவாரும் உண்டு.[27] இது பிழை. புல்லி என்னும் மன்னனுக்கு உரிய காடு 'புல்லியகாடு.'[28] இந்த மன்னனுக்கு வேங்கடமலையும் உரியதாய் இருந்தது. இந்த மலைக்கு வடக்கில் இருந்த மக்கள் சங்க காலத்தில் 'வடுகு' மொழி பேசிவந்தனர்.[29] மற்றும் வேங்கடம் தொண்டைநாட்டுக்கும் வடுகர் தேயத்திற்கும் இடையில் எல்லையாய் விளங்கியது என்னும் கருத்துகளுக்குத் தெளிவான குறிப்புகள் உள்ளன.[30]

---

[26] (அ) "வடவேங்கடம் தென்குமரி
ஆயிடைத்
தமிழ்கூறு நல்லுலகம்"

—பனம்பாரனர் – தொல் – பாயிரம்

(ஆ) அரவழுங்கும் பெருந்தெய்வத்து
வளைஞரலும் பனிப்பெளவத்துக்
குணகுட கடலோ டாயிடை மணந்த
பந்தர் அந்தரம் வேய்ந்து

—காக்கைபாடினியார் நச்செள்ளையார். (பதிற். 51)

வடக்கு எல்லை வடமலை என்றும், வடபெருங்கல் என்றும், நெடும் பெருங்குன்றம் என்றும் குறிப்பிடும் பாடல்கள்.

—புறநா. 17, 67, 380; மது. 1–4, 70-71; நற். 212

இமயமலை தமிழர் ஆட்சிப்பகுதியின் வடக்கெல்லை என்று குறிப்பிடும் பாடல்கள்

—பதிற். 11, 43.
—யாப். விரு. நூற். 95 உரை மேற்கோள்.

பொது வகையால் வடஎல்லை என இமயத்தைக் குறிக்கும் பாடல்கள்.

—புறம். 2, 6. நற். 356

[27] குஞ்ஞன் பிள்ளை, பண்டைய கேரளம் (தமிழ் மொழி பெயர்ப்பு), பக். 10

[28] நற். 14 : 11

[29] அகநா. 211, 213, 295

[30] அகநா. 213

எனவே சங்ககாலத் தமிழகத்தின் வடக்கு எல்லை வேங்கட மலை என்பதில் ஐயமில்லை.[31] வட எல்லையின் கிழக்குப் பக்க அடையாளமாக வேங்கடமலையைக் குறிப்பிடுவது போல அதன் மேற்குப் பக்க அடையாளமாகக் குதிரை மலையைக் குறிப்பிடலாம்.[32] பாழி, கட்டூர் (தகடூர்) ஆகிய ஊர்கள் அந்த எல்லைப் பகுதியில் இருந்தவை.[33] வடக்கு எல்லையின் மையப் பகுதிக்கு அடையாளமாக எருமை நாட்டைக் (மைசூரைக்) குறிப்பிடலாம்.[34] இது தமிழ் மன்னனை கட்டி ஆண்ட நாட்டுக்கு வடபால் வடுகருக்கு உரியதாய் இருந்தது.[35]

சங்ககாலத்தில் தமிழ்மொழி பேசப்பட்ட தமிழகத்தின் வடக்கு எல்லைதான் இங்குக் கூறப்பட்டது. தமிழ் மன்னர்கள் ஆண்ட தமிழ்நாட்டின் எல்லை எது என்று கூறுவதற்கு உறுதியான சான்று இல்லை. என்றாலும் இங்குக் கூறப்பட்ட மொழிஎல்லையின் வடபால் பிறமொழி பேசியவர் வாழ்ந்துவந்த இடங்களிலும் தமிழ்நாட்டு மூவேந்தர்களின் ஆட்சி பரந்திருந்தது என்பது தெளிவு.[36]

தெற்கு, கிழக்கு, மேற்கு ஆகிய மூன்று பக்க எல்லை கடல். (மலையாள மொழி வழங்கும் கேரள மாநிலம்

---

[31] அடிக்குறிப்பு 26-இல் கூறப்பட்டுள்ளவற்றுடன் இவற்றையும் கொள்க.

(அ) "வேங்கடம் குமரி தீம்புனல் பௌவமென்று
இந்நான்கு எல்லை தமிழது வழக்கே"

—சிகண்டியார்

(ஆ) "வடக்கும் தெற்கும் குடக்கும் குணக்கும்
வேங்கடம் குமரி தீம்புனற் பௌவமென்று
அந்நான்கு எல்லை"

—காக்கைபாடினியார்

[32] அகநா. 143, 372; புறநா. 158, 168 ஆகிய இடங்களில் கூறப்பட்டுள்ள குதிரை மலையைச் சார்ந்த நாடு தமிழ்நாடு.
குஞ்ஞன் பிள்ளை (பண்டை கேரளம் பக். 11, 70) இதனைக் காசர் கோடு என்பர்.

[33] அகநா. 375, 212

[34] அகநா. 253

[35] குறுந். 11

[36] அகநா. 31

அப்போது தமிழ்நாடாகவே இருந்தது.) மூவேந்தர் களின் ஆட்சி எல்லை கடற்கரையை அடுத்திருந்த தீவுகளிலும் பரந்திருந்தது எனலாம்.

தெலுங்கு, கன்னடம், துளு, கோண்டு முதலான மொழிகள் தமிழின் இனமொழிகளாக விளங்குகின்றமை யால் திராவிடர் எனப்படும் பழந்தமிழர் அம்மொழிகள் இன்று பேசப்படும் பகுதிகளிலும் பண்டைக்காலத்தில் வாழ்ந்தனர் என்பது பொருந்தும். எனவே மொழி அடிப்படையிலான பழந்தமிழ்நாடு அப்பகுதிகளிலும் பரந்துகிடந்தது எனலாம். சிந்துவெளியோடு பழந் தமிழருக்கு உள்ள தொடர்பினைக் கொண்டு இதன் பரப்பை அங்கும் கொண்டுசெல்லலாம். கடல் கொண்ட குமரிக்கண்டம் பற்றிய ஆராய்ச்சிகொண்டு தென் எல்லையைக் குமரிக்கண்டப் பகுதிக்கும் கொண்டு செல்லலாம். இவ்வாறு விரிந்த பரப்பளவைக் காட்டும் எல்லைகள் இன்று நமக்குக் கிடைக்கப்பெற்றுள்ள சங்ககால நூல்களின் காலத்திற்கு முந்தியவை என்னும் உண்மையை நாம் நினைவில் கொள்ளல் வேண்டும்.

இன்று மொழி அடிப்படையில் அமைந்துள்ள தமிழ் நாட்டின் வடக்கில் ஆந்திர மாநிலமும் கருநாடக மாநிலமும் உள்ளன. கருநாடக மாநிலம் ஆங்கிலேயர் காலத்திலும் அமைந்திருந்தது. ஆந்திர மாநிலம் 1–10–1953-க்குப் பிறகுதான் அமைந்தது. 1–11–1956 முதல் கேரள மாநிலம் தமிழ்நாட்டின் மேற்கு எல்லை ஆயிற்று.

ஒரு நாட்டின் நிலவியலை ஆராய்கையில் இயற்கைத் தோற்றம்[37] என்றும், பண்பாட்டுத்தோற்றம்[38] என்றும் இரு பகுதிகளாகக் கொண்டு ஆய்வது நிலவியலார் வழக்கமாகும். இயற்கைத்தோற்றத்தில் அந்நாட்டின் தட்பவெப்ப நிலை, நில அமைப்பு, நிலவளம் முத லானவை கூறப்படும். பண்பாட்டுத்தோற்றத்தில் அதன்

---

[37] Physical or Natural Features.

[38] Cultural Features.

மக்கள், அம்மக்கள் வாழ்விடம், அவர்களின் தொழில், அவர்களால் ஆக்கப்படும் பொருள்கள், அந்நாட்டின் ஏற்றுமதி, இறக்குமதி ஆகியவை கூறப்படும். இம் முறையைப் பின்பற்றி நாம் தமிழ்நாட்டின் நிலப் பரப்பினை ஆராய்தல் வேண்டும். அறிவியலைப் பின் பற்றிச் செல்வதாகிய இந்த நெறியைத் தமிழின் பொருள்இலக்கணப் பகுதி பண்டைக்காலந் தொட்டே மேற்கொண்டிருந்தது. எனவே தமிழ்நெறியின் வழியே இக்கால அறிவியல் கண்ணோட்டத்தில் தமிழ்நாட்டின் நிலவியலை இங்கு நாம் காணலாம்.

## தட்பவெப்ப நிலை

தமிழ்நாடானது நிலநடுக்கோட்டின் வடபால் வெப்பமண்டலத்தில் அமைந்திருக்கிறது. எனினும், மூன்று பக்கமும் கடலால் சூழப்பட்டிருப்பதாலும், கடலிலிருந்து பருவக்காற்றுகள் வீசுவதாலும், இந்நாடு வெயிலின் கொடுமையால் வட இந்தியாவைப்போல் அவ்வளவாகத் தாக்கப்படாமல் ஓரளவு சம தட்பவெப்பம் உடையதாக அமைந்துள்ளது. எனினும் நடுநிலக் கடல்[39] நாடுகளில் உள்ளது போல அவ்வளவு வெது வெதுப்பான தட்பவெப்ப நிலை இங்கு அமையவில்லை. வெயில், மழை, புயல் ஆகியவற்றின் சீற்றங்களுக்கு இந்நாடு பெரிதும் இலக்காவதால், இந்நாட்டு மக்கள் இயற்கையைப் பயன்படுத்தி மகிழ்வதைக் காட்டிலும் அதனை எதிர்த்துப் போராடி வென்று மகிழ்பவர்களாக உள்ளனர். தமிழ்நாட்டின் வெயிலிலும் காற்றிலும் புழுக்கும் தன்மை[40] மிகுதி. வட இந்தியாவில் தமிழகத் தைக் காட்டிலும் மிகுதியாக வெயிலின் சூடு உறைத் தாலும் அவ்வளவாக வியர்வை வெளிப்படுவதில்லை.

இன்றைய நிலையில் தமிழ்நாட்டில் குளிர்காலம் என்று சொல்லத்தக்கது சங்ககாலத்தில் முன்பனிக் காலம் என்று கூறப்பட்ட காலமே ஆகும். அதன்

---

39 Mediterranean Sea.
40 Humidity.

இடைப்பகுதியில், அதாவது சனவரி மாதத்தில் 24° செண்டிகிரேடுவரை[41] வெப்பநிலை குறைவதும் உண்டு. சங்ககாலத்தில் இளவேனிற்காலம் என்று கூறப்பட்டதும் இக்காலத்தில் கோடைக்காலம் என்று சொல்லத்தக்கதுமான ஏப்ரல், மே, சூன் மாதங்களில் 30° முதல் 33° வரை பொதுவாக வெப்பநிலை வேறுபடுகிறது. இக்காலத்தில் சிற்சில வேளைகளில் 40° வரை அது உயர்வதும் உண்டு. கடல்மட்டத்திலிருந்து 2,245 மீட்டர் உயரத்தில் உள்ள உதகமண்டலத்தில் வெப்பநிலை 9·4° முதல் 18·9° வரை வேறுபட்டு ஆண்டின் சராசரி 14·2° ஆக அமைகிறது. கோடைக்கானல் முதலான உயரமான இடங்களிலும் இவ்வாறு வெப்பநிலை குறைவு.

தமிழ்நாட்டில் தென்மேற்கிலிருந்தும், வடகிழக்கிலிருந்தும் குறிப்பிட்ட பருவத்தில் காற்றுகள் வீசுகின்றன. இவை தோன்றும் திசையால் பெயர் பெறுகின்றன. சூன், சூலை, ஆகஸ்டு மாதங்களில் தென்மேற்குப் பருவக்காற்று வீசுகிறது. செப்டெம்பரிலும் இது தொடர்வதுண்டு. இக்காற்று சுழன்று தெற்கிலிருந்தும், மேற்கிலிருந்தும் வீசுவது உண்டு. தெற்கிலிருந்து வீசும் காற்றைத் தமிழர்கள் தென்றல் என்று வழங்குவர். மேற்கிலிருந்து கிழக்கு நோக்கி வீசும் காற்றால் தள்ளப்பட்டுச் செல்லும் மழைமேகத்தை அவர்கள் கோடை என்று கூறுவர். வடகிழக்குப் பருவக்காற்று அக்டோபர், நவம்பர், டிசம்பர் மாதங்களில் வீசுகிறது. இதனைத் தென்மேற்குப் பருவக்காற்றே பின்வாங்கி வீசுவதாகக் கருதி இக்கால நிலவியலார் 'பின்வாங்கும் பருவக்காற்று'[42] என்று அழைக்கின்றனர். இக்காற்றும் சற்றுத் திசைமாறி வீசுவது உண்டு. வடக்கிலிருந்து வீசும்போது அது வாடை எனப் பெயர்

[41] Measurements in centigrade. The Chief Conservator of Forests, Madras, *Forestry in Madras State* (1968), p.12.
[42] Retreating Monsoon.

பெறும். கிழக்கிலிருந்து வீசும் காற்றால் தள்ளப்பட்டுச் செல்லும் மழைமேகம் கொண்டல் எனப்படும்.

கோடை மேகங்கள் அரபிக்கடலிலிருந்து நீராவிக் காற்றைக் கொண்டுவருகின்றன. மேற்குத் தொடர்ச்சி மலை இவற்றைத் தடுப்பதால் இன்றைய கேரள மாநில மாகிய பண்டைய சேரநாடு மழையை மிகுதியாகப் பெறு கிறது. இப்பருவத்தில் தமிழ்நாடு பெறும் மழையின் அளவு குறைவுதான். நிலப்பகுதியின் நீர்நிலைகளில் உள்ள நீர் ஆவியாகி மிகுந்த உயரத்திற்குச் செல்வதால் குளிர்ந்து நீராகிப் பெய்யும் 'வெப்பம் தூக்கு மழை யாலும்'[43] இப்பருவத்தில் தமிழ்நாடு ஓரளவு மழையைப் பெறுகிறது. கொண்டல் மேகங்கள் வங்கக் கடலிலிருந்து நீராவிக் காற்றைக் கொண்டுவருகின்றன. அவை கிழக்குத் தொடர்ச்சி மலையால் தடுக்கப்படுகின்றன. இதன் விளைவால் தமிழ்நாட்டில் நல்ல மழை பெய்கிறது. இவ்வகையில் இன்றைய தமிழ்நாடு பெறும் சராசரி ஆண்டு மழையளவு 969 மில்லி மீட்டர் ஆகும். எனினும் தமிழ்நாட்டின் மழையளவு 600 மில்லி மீட்டரிலிருந்து 7,000 மில்லி மீட்டர் வரை இடத்துக்கு இடம் மாறுபடு கிறது. மேற்குத் தொடர்ச்சி மலையில் ஆண்டுக்கு 7 ஆயிரம் மில்லி மீட்டர் வரை மழை பெய்கிறது. தமிழ் நாட்டின் உட்பகுதியிலுள்ள சமவெளிப் பகுதிகளில் சில இடங்கள் எப்பொழுதாவது 1,250 மில்லி மீட்டர் வரை மழையைப் பெறுவதுண்டு. என்றாலும், பெரும் பகுதி பெரும்பாலும் 600 முதல் 900 மில்லி மீட்டர் மழையையே பெறுகின்றது. கடற்கரை ஓரங்களில் மட்டும் 1,000 முதல் 1,250 மில்லி மீட்டர் வரை மழை பெய்கிறது.[44]

மழைமேகங்களைக் குளிரவைத்து மழை பொழியச் செய்யும் காடுகள் குறைந்துள்ள இக்காலத்தில் பெய்யும் மழையின் அளவுகள் இவை. பழங்காலத்தில் காடுகள்

[43] Convectional Current Rains.

[44] The Chief Conservator of Forests, Madras, *Forestry in Madras State*-1968 p. 12

மிகுதியாக இருந்தமையால் தமிழகத்தில் தற்காலத்தில் பெய்வதைவிட மிகுதியான மழை பெய்திருக்கும் எனலாம்.

வெயில், காற்று, மழை இவற்றால் நேரும் பருவங்களை நோக்கி ஓராண்டுக் காலத்தைத் தமிழர்கள் 6 பருவங்களாகப் பகுத்துரைத்தனர்.[45]

அவை வருமாறு :

1. கார் (மழை) காலம்—ஆகஸ்டு இடைப்பகுதி முதல் அக்டோபர் இடைப்பகுதி வரை. (ஆவணி, புரட்டாசி.)
2. கூதிர் (குளிர்) காலம்—அக்டோபர் இடைப்பகுதி முதல் டிசம்பர் இடைப்பகுதி வரை. (ஐப்பசி, கார்த்திகை.)
3. முன்பனிக்காலம்—டிசம்பர் இடைப்பகுதி முதல் பிப்ரவரி இடைப்பகுதி வரை. (மார்கழி, தை.)
4. பின்பனிக்காலம்—பிப்ரவரி இடைப்பகுதி முதல் ஏப்ரல் இடைப்பகுதி வரை. (மாசி, பங்குனி.)
5. இளவேனில் காலம்—ஏப்ரல் இடைப்பகுதி முதல் ஜூன் இடைப்பகுதி வரை. (சித்திரை, வைகாசி.)
6. முதுவேனில் காலம்—ஜூன் இடைப்பகுதி முதல் ஆகஸ்டு இடைப்பகுதி வரை. (ஆனி, ஆடி.)

முதுவேனில் காலத்தில் வீசும் தென்மேற்குப் பருவக் காற்றால் சேரநாடும், கூதிர் காலத்தில் வீசும் வடகிழக்குப்

---

45 "வட இந்தியாவில் ஓராண்டுக் காலம் வர்ஷம், சரத், ஹேமந்தம், சிசிரம், வசந்தம், கிரீஷ்மம் என்னும் ஆறு பருவங்களாக அமைந்திருக்கிறது. இப்பருவ நிலை தென்னிந்தியாவுக்குப் பொருந்தாது" என்பது குஞ்ஞன் பிள்ளை கருத்து. (பண்டைய கேரளம் பக். 51, அடிக்குறிப்பு) இவரது கருத்து பொருந்தாது. தமிழர் பகுப்பு தமிழ் நாட்டிற்கு முற்றிலும் பொருந்தும்.

பருவக்காற்ருல் சோழ–பாண்டிய நாடுகளும் மிகுதியான மழையைப் பெற்றபோதிலும் இரண்டு பருவங்களுக்கும் இடையே உள்ள காலத்தில் இரு பகுதிக்கும் ஓரளவு மழை கிடைப்பதால் இப்பருவத்தைக் கார்காலம் என்று, தமிழ்நாட்டுக்கெல்லாம் பொதுவாக அமையும் படி தமிழர்கள் பெயரிட்டுள்ளனர் என்று எண்ணத் தோன்றுகிறது.

பருவ காலங்கள் தமிழ்நாட்டின் வரலாற்றில் சிறந்த இடத்தைப் பெற்றுள்ளன. எடுத்துக்காட்டாக ஒன்றைக் குறிப்பிடலாம். கூதிர்ப் பருவத்திலும் முன்பனிப் பருவத்திலும் பழந்தமிழ்நாட்டில் போர்கள் தொடங்கப்பெறுதல் இல்லை. முன்பே தொடங்கப்பட்ட போர் அப்பருவங்களிலும் நீடிப்பது உண்டு. இக்காலங்களில் ஆண்கள் பெண்களை விட்டுவிட்டுச் செல்வது இல்லை; பொருள் தேடுதல் போன்ற காரணங்களால் முந்திய பருவங்களில் பிரிந்து சென்றவர் கார் காலத்தில் தம் இல்லம் வந்தடைவர். எதிர்பாரா வகையில் அவர்கள் தம் வீடுகளுக்கு வந்து சேரக் காலம் தாழ்தலும் உண்டு.

இன்றைய தமிழ்நாட்டின் நிலப்பரப்பு பொதுவாகத் தென்கிழக்காகச் சரிந்து உள்ளது. இதனுல் மழைக் காலத்தில் தமிழ்நாட்டின் மண் அரிக்கப்பட்டு ஆறுகளால் வங்காளக் குடாக்கடலில் சேர்க்கப்படுகிறது. அரிக்கப் பட்டவைகளை நிலப்பகுதியிலேயே தடுத்து நிறுத்திப் படியச் செய்யக்கூடிய நில அமைப்பு தமிழ்நாட்டில் அமையவில்லை. இதனுல் தமிழ்நாட்டுச் சின்னங்களில் மிகப் பழமையானவற்றைக் கடலுள் தேடவேண்டிய நிலை உள்ளது. இது தமிழ்நாட்டு வரலாற்றின் தொன்மையை ஆய்வோருக்கு உள்ள ஓர் இடர்ப்பாடு.

சங்ககாலத்தில் மொழி அடிப்படையிலான தமிழ் நாட்டின் வடக்கு எல்லை வேங்கடமலையாக இருந்தது என்று மேலே கூறப்பட்டுள்ளது. தமிழ்நாட்டின் வரலாற்றுக்காலம் சங்ககாலத்தில் தொடங்குகிறது. எனவே வேங்கடமலைக்குத் தெற்கிலுள்ள நிலப்பரப்பு அனைத்திலுமுள்ள நிலவியலை நாம் காணல் வேண்டும்.

இந்நிலத்தைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்று பாகுபடுத்தி 'நானிலம்' என்று பெயரிட்டுத் தமிழர் வழங்கிவந்தனர். தமிழ்நாட்டு நாகரிகம் மற்றச் சிறந்த நாகரிகங்களைப் போலக் குறிஞ்சிநிலத்தில் தோன்றியது. நீரும், நிழலும், தற்காப்பிடங்களும், உணவுப் பொருள்களும் ஒருங்கே கிடைக்கப்பெறும் நிலம் குறிஞ்சிநிலமேயாகும். முல்லைநிலத்தில் அந்த நாகரிகம் வேரூன்றியது எனலாம். எனினும் அது செழித்து வளர்ந்த நிலம் மருதநிலமே. இந்நாகரிகம் மலர்ந்து மணம் பரப்பியது நெய்தல்நிலத்தின் வழியே ஆகும். 'பாலை' என்றொரு நிலமும் தமிழ்நூல்களில் கூறப்படுகிறது. இது சகாராப் பாலைவனத்தைப் போலவோ, தார்ப் பாலைவனத்தைப் போலவோ எங்கும் மணற்பரப்பாகக் காணப்படவில்லை. மலைகளும் காடுகளும் கோடையின் கொடுமையால் வறண்டு காணப் படுங்கால் பாலைநிலம் என்ற பெயரைப் பெற்றன. இந் நிலம் உண்மையில் பாலைவனம்[46] அன்று; பாலைநிலம்[47] ஆகும். மற்றும் தமிழ்நாட்டில் நிலமேடுகளும்[48] மிகுதி யாக இல்லை.

### குறிஞ்சி

மலைநிலத்தையும் மலையைச் சார்ந்த நிலப்பகுதியை யும் குறிஞ்சிநிலம் என்று தமிழ்நூல்கள் கூறுகின்றன. 12 அல்லது 7 அல்லது 5 ஆண்டுகளுக்கொருமுறை இடமும் பருவமும் தவறாமல் பூக்கும் குறிஞ்சிப்பூ இந் நிலத்திற்குமட்டும் உரித்தாய்ச் சிறப்பினைப் பெற்றிருந் தமையால் அப்பூவின் பெயரால் இந்நிலப்பகுதி தமிழர் களால் வழங்கப்பட்டது.

தமிழ்நாட்டிலுள்ள மலைகள் பனிமலைகள் அல்ல. வானளாவிய மரங்களும் மண்டிய புதர்களும் கொண் டவை. வற்றாத நீரோடைகள் பாய்பவை. காயும், கனி

[46] Desert.

[47] The Tracts of hills and forests under decay.

[48] Plateau.

யும், கிழங்கும் கணக்கின்றித் தருபவை. வேளாண்மை செய்வதற்கேற்ற நிலப்பரப்பினை உச்சிப் பகுதியிலும் கொண்டவை. இவ்வாறு நீர்வளமும் நிலவளமும் மிகுந்து மக்கள் வாழ்வதற்கேற்ற வாய்ப்புகளைப் பெற்றிருந்தமையால்தான் தமிழ்நாட்டின் நாகரிகம் மலைப் பகுதிகளில் தோன்றியது.

இத்தகைய மலைகள் பெரியனவும் சிறியனவுமாகத் தமிழ்நாட்டில் மிகுதியாக உள்ளன. அவற்றிற்கு மேற்குத் தொடர்ச்சிமலை என்றும், கிழக்குத் தொடர்ச்சி மலை என்றும் இரண்டு பெயர்களை இட்டு வழங்குகின்றனர். மேற்குத் தொடர்ச்சிமலை உண்மையாகவே தொடர்ச்சியாக உள்ளது. கிழக்குத் தொடர்ச்சிமலை இடைவெளி விட்டு ஆங்காங்கே காணப்படினும் ஓரளவு தொடர்போலக் காணப்படுவதால் இதனையும் தொடர்ச்சி மலை என்று வழங்கிவருகின்றனர். இம்மலைகள் படிக்கட்டுகள்போல் உயர்ந்து செல்வதால் மேலைப்படிகள்[49], கீழைப்படிகள்[50] என்று ஆங்கிலேயர் வழங்கலாயினர். நீலமலையில் (நீலகிரி) இந்த இரண்டு மலைத்தொடர்களும் கூடுகின்றன. தென்னகத்திலேயே மிக உயரமான ஆனைமலை நீலமலையின் தெற்கில் உள்ளது.

சவ்வாதுமலை, சேர்வராயன்மலை, கல்ராயன்மலை, கொல்லிமலை, பச்சைமலை, ஏலமலை முதலானவை கிழக்குத் தொடர்ச்சி மலையில் ஆங்காங்குள்ள மலைகளாகும். இவற்றையும் இவற்றைச் சார்ந்த சிறுசிறு மலைகளையும் கோடிட்டுச் சேர்த்து நோக்கினால் அக்கோடு கிழக்கு–வடகிழக்குத்[51] திசையிலிருந்து மேற்கு–தென்மேற்குத்[52] திசையை நோக்கியதாய் அமையும். சென்னையை ஒட்டி இது ஓரளவு தென்வடல் திசையில் அமைந்துவிடும்.

குதிரைமலை, குடகுமலை, நீலமலை, ஆனைமலை, பொதியமலை முதலானவை மேற்குத் தொடர்ச்சி மலையில்

---

49 Western Ghat.
50 Eastern Ghat (or Tamil Nadu Hills).
51 ENE.
52 WSW.

அமைந்துள்ளன. இவை அரபிக்கடலை அடுத்துக் கடலி லிருந்து ஏறத்தாழ 80 கிலோ மீட்டர் தொலைவிலும், சிற்சில இடங்களில் 150 கிலோ மீட்டர் தொலைவிலும் நெடுக அமைந்துள்ளன. இவை ஒரே தொடராக அமைந்திருப்பினும் சிற்சில இடங்களில் கணவாய்களைப் பெற்றுள்ளன. தற்காலத்துக் கொல்லூர், நிலம்பூர், பாலக்காடு, போடிநாய்க்கனூர், செங்கோட்டை, அச்சன் கோயில், ஆரும்பொழில் (ஆறுவாய் மொழிச்சுரம்) முதலான இடங்களில் அமைந்துள்ள கணவாய்களும், சங்கநூல்களில் காணப்படும் குதிரைக் கவான்[53], ஏழில் குன்றத்துக் கவான்,[54] கவிரம்பெயரிய கவான்[55] என்ற பெயரால் வழங்கப்பெற்ற கணவாய்களும் அவற்றுள் குறிப்பிடத்தக்கவை.[56] இம்மலைத்தொடரை ஒரு கோடிட்டு நோக்கினுல் அது வடக்கு–வடமேற்கிலிருந்து[57] தெற்கு–தென்கிழக்குத்[58] திசையை நோக்கியதாக அமையும்; சிற்சில இடங்களில் வடமேற்கிலிருந்து தென்கிழக்கை நோக்கியதாகவும் அமையும்.

அம்மலைகளும் அவற்றைச் சார்ந்த குன்றுகளும் பண்டைக்கால வரலாற்றில் சிறந்த இடத்தைப் பெற் றுள்ளன. குதிரைமலைத் தலைவன் கொற்றன், கொல்லி மலைத் தலைவன் ஓரி, பறம்புமலைத் தலைவன் பாரி, பாயல் மலைத் தலைவன் வஞ்சன், பழனிமலைத் தலைவன் பேகன், பொதியமலைத் தலைவன் ஆய் முதலான தொடர்மொழிகள் அம்மலைகளுக்குள்ள வரலாற்றுத் தொடர்புகளைக் காட்டு

---

53 அகநா. 143

54 அகநா. 349

55 அகநா. 198. இக்காலத்துச் செங்கோட்டைக்கணவாய் எனலாம்.

56 18 கணவாய்கள் இருந்தமையை விக்கிரம சோழன் உலா குறிப்பிடு கிறது. அவை, ஆரியன் காவுச்சுரம், கம்பச்சுரம், பாலக்காட்டுச்சுரம், தாமச்சேரிச்சுரம், பேரம்பாடிச்சுரம், பேரியச்சுரம் முதலான பெயர் களுடன் வழங்குவதாகக் குஞ்ஞன் பிள்ளை குறிப்பிடுகிறார். (பண்டைய கேரளம்–பக். 71 அடிக் குறிப்பு.)

57 NNW

58 SSE

கின்றன. குன்றுப்பாறைகள் பல குடைவரைக் கோவில் களாகத் திகழ்ந்து அளிக்கும் வரலாறுகள் உண்டு.

முல்லை

காடுகளும், அவற்றைச் சார்ந்துள்ள நிலப்பகுதி களும் முல்லைநிலம் என்று பெயர் பெற்றிருந்தன. ஆண்டுதோறும் கார்ப்பருவத்தில் மிகுதியாகப் பூத்து இந்நிலத்திற்குச் சிறப்பினைத் தருவது முல்லைப்பூ ஆகும். எனவே இப்பூவின் பெயரால் இந்நிலத்தை 'முல்லை' என்று தமிழர் வழங்கலாயினர்.

இன்றைய தமிழ்நாட்டின் மொத்தப் பரப்பில் 16% காடுகளாய் அமைந்துள்ளன என்று வனத்துறையினர் கணக்கிட்டுள்ளனர். 45 மீட்டருக்கு மேலும் உயரமாக வளர்ந்த மரங்களைக் கொண்டு மேற்குத்தொடர்ச்சி மலைப் பகுதிகளில் காணப்படும் காடுகளைத் "தென் வெப்ப மண்டல ஈரமான பசுமைமாறுக் காடுகள்"[59] என்ற பெயரால் அவர்கள் அழைக்கின்றனர். அடுத்து 30 மீட்டருக்கு மேல் உயரமான தேக்கு முதலான மரங்களைக் கொண்டு நீலமலை, ஆனைமலை, பழனிமலை முதலான பகுதிகளில் காணப்படும் காடுகளைப் "பழுப்பு உதிரும் தென்னிந்தியக் காடுகள்"[60] என்று வழங்குகின்றனர். 13 முதல் 20 மீட்டர் உயரமான சந்தனம் முதலான மரங் களோடு புல்லும் புதரும் மண்டி ஒசூர் மேடுகளில் காணப் படுவதும் அதுபோன்றனவுமான காடுகளைச் "சருகுதிரும் தென் வெப்பமண்டலக் காடுகள்"[61] என்று அழைக்கின்றனர். கடல்மட்டத்திலிருந்து 1,500 மீட்ட ருக்குமேல் சோலைகளாகக் காணப்படும் காடுகளைத் "தென்மலைப் பகுதி ஈர இளவெயில் மண்டலக் காடுகள்"[62] என்பர். இங்குக் கூறப்பட்ட நால்வகை

---

[59] Southern tropical wet evergreen forests.
[60] South Indian moist deciduous forests.
[61] Southern tropical dry deciduous forests.
[62] Southern montane wet temperate forests.

யான காடுகளையும் பண்டைக்காலத் தமிழர் குறிஞ்சி நிலமாகவே கருதினர்.

6 முதல் 9 மீட்டர் உயரமுள்ள மரங்களோடு முட்புதர்கள் மண்டிச் சமவெளிப் பகுதிகளில் காணப்படும் காடுகளை வனத்துறையினர் "தென் வெப்பமண்டல முட்காடுகள்"[63] என்று அழைப்பர். 80 பாகை வரை புழுக்கத் தன்மை மிக்குக் கிழக்குக் கடற்கரை ஓரங்களில் என்றும் பசுமைமாறாது காணப்படும் காடுகளை "வெப்ப மண்டலப் பசுமைமாறா உலர்காடுகள்"[64] என்பர். கடல் நீர் பாய்ந்து வற்றி, உதிர்ந்த இலைகள் அழுகிக் காணப்படும் காடுகளைக் "கடற்கழிச் சதுப்புநிலக் காடுகள்"[65] என்பதன்பால் சேர்ப்பர். இவ்வாறு மூன்று வகையாகக் குறிக்கப் பெற்றுள்ள காடுகளைத் தமிழர்கள் முல்லை நிலமாகக் கொண்டனர்.

சங்ககாலத் தமிழ்நாட்டின் பரப்பளவில் பாதிக்கு மேல் காடுகளாய் இருந்திருக்கும் எனக் கருத இடம் உண்டு. வேங்கடமலைக்குத் தென்பால் புல்லி என்பவனுக்கு உரித்தாய் விளங்கிய புல்லியகாடு,[66] அதற்குத் தென்பால் அழிசிக்கு உரித்தாய் இருந்த ஆர்க்காடு,[67] மேற்குப் பகுதியில் நன்னனுக்கு உரித்தாய் இருந்த பாழிச்சிலம்பு,[68] தெற்கில் ஆய் என்பவனுக்கு உரித்தாய் இருந்த ஆய்கானம்,[69] மற்றும் ஆலங்கானம்,[70] முள்ளூர்க்கானம்,[71] உம்பற்பெருங்காடு,[72] சாய்க்காடு,[73]

---

63 Southern tropical thorn forests.
64 Tropical dry evergreen forests.
65 Tidal swamp forests.
66 நற். 14 : 11
67 குறுந். 258, நற். 190 : 6
68 அகநா. 152 : 13
69 அகநா. 69 : 18
70 அகநா. 36 : 14
71 குறுந். 312 : 3
72 அகநா. 357 : 9
73 நற். 73 : 9

உறந்தைப்புறங்காடு,[74] வல்லத்துப்புறமிளை,[75] குடவாயில் மிளை[76] முதலானவை அக்காலத்தில் இருந்த காடுகள் என்பதைச் சங்கப்பாடல்களால் அறியலாம்.

மருதம்

ஆறுகளும் ஆற்றால் பயன்பெறும் நிலப்பகுதிகளும் மருதம் என்னும் பெயரைப் பெற்றன. மருத மரங்கள் ஏனைய மரங்களைக் காட்டிலும் ஓங்கி உயர்ந்து சிறப்பாக இப்பகுதிகளில் விளங்கியமையாலேயே இந் நிலப்பகுதிக்கு இப்பெயர் வழங்கலாயிற்று.

இன்றைய தமிழ்நாட்டில் அதாவது பண்டைய சோழ, பாண்டிய நாடுகளில் பல ஆறுகள் கிழக்கு முகமாக ஓடி நாட்டைச் செழிப்புறச் செய்கின்றன. சேர நாட்டிலும் பல ஆறுகள் மேற்குமுகமாய் ஓடி அந் நாட்டை வளப்படுத்துகின்றன. இவை வட இந்திய ஆறுகளைக் காட்டிலும் வயதில் மூத்தவை. எனினும் பொதுவாக வட இந்திய ஆறுகளைப்போல் எக்காலத் திலும் நீர்ப்பெருக்கு உடையவை அல்ல. கனமழைக் காலத்தில் கரைபுரண்டோடும் காட்டாறுகள். மழை யில்லாக் காலங்களில் மணலைத்தோண்ட வரும் ஊற்று நீரால் மக்களுக்கு உதவுபவை. அல்லாமலும் வட இந்திய ஆறுகளைப்போல் வளமான நிலத்தில் பாய்பவை யும் அல்ல. தாம் பாயும் வறண்ட நிலங்களை வளமாக்கு பவை. தமிழ்நாட்டு ஆறுகளில் பெரியனவும், சிறியனவு மாக அருவிகள் (நீர்வீழ்ச்சிகள்) ஆங்காங்கே உண்டு. மலைப்பகுதிகளில் சுனைகளும் உண்டு. தமிழ்நாட்டு ஆறுகளில் பாயும் ஊற்றுநீர் வடநாட்டு ஆறுகளில் பாயும் பனிக்கட்டி உருகிவரும் நீரைக் காட்டிலும் தெளிவானது. வெள்ளப்போக்கு வட இந்திய ஆறுகளில் போலத் தேங்கி நகராமல் தென்னிந்திய ஆறுகளில் விரைந்து ஓடுவதற்கு இங்குள்ள நிலச்சரிவே காரணமாகும். எனவே வட

[74] அகநா. 122 : 22
[75] அகநா. 336 : 21
[76] அகநா. 44 : 17

இந்திய ஆறுகள் போக்குவரத்துக்கு உதவியாய் அமைந் துள்ளமை போன்று தமிழ்நாட்டு ஆறுகள் அமையாமல் போனதோடு மட்டுமின்றி வெள்ளக் காலங்களில் போக்கு வரத்துக்குத் தடையாகவும் பண்டைக் காலத்தில் அமைந் திருந்தன.

நிலவியலார் ஆறுகளை எப்போதும் நீரோடும் ஆறுகள்,[77] இடைக்காலம் விட்டு நீரோடும் ஆறுகள்,[78] எப்போதாவது நீரோடும் வறண்ட ஆறுகள்[79] என் றெல்லாம் பகுத்துக் காட்டுவர்.

இன்றைய தமிழ்நாட்டில் பாயும் ஆறுகள் பல. பாலாறு, தென்பெண்ணை, வெள்ளாறு, காவேரி, தென் வெள்ளாறு, வையை, குண்டாறு, வைப்பாறு, தாமிர பரணி, பழையாறு முதலான ஆறுகள் நாட்டின் வட பகுதியிலிருந்து நோக்கின் அடுத்தடுத்துப் பாய்வன வாகும்.

ஊற்றோடும் மலையருவிகளைத் தவிர எப்போதும் நீர் ஓடும் ஆறுகள் தமிழ்நாட்டில் இக்காலத்தில் இல்லை. தென்பெண்ணை, பாலாறு போன்றவற்றை இடைக்காலம் விட்டு நீரோடும் ஆறுகளாகக் கொள்ளலாம். குண்டாறு, வைப்பாறு போன்றவை எப்போதாவது நீரோடும் வறண்ட ஆறுகள் ஆகும். இவைகளெல்லாம் சங்க காலத்திலும் இதே நிலையில் இருந்தன என்று கூற முடியாது. காடுகள் மிக்கு மழை மிகுதியாகப் பெய்த அக்காலத்தில் இவ்வாறுகளில் பல, பல திங்கள் நீரோடும் ஆறுகளாக இருந்தன என்று கொள்ளவும் இடமுண்டு. மழை பெய்யாவிட்டாலும் காவேரியில் தொடர்ந்து நீரோ டிய செய்தி சிலப்பதிகாரத்தில் கூறப்பட்டுள்ளது.[80]

பாலாறு கருநாடக மாநிலத்திலுள்ள நந்திதுர்க்கம் என்னுமிடத்தில் தோன்றித் தொண்டைநாட்டில் பாய்ந்து

[77] Permanent rivers.
[78] Intermittent rivers.
[79] Ephemeral rivers.
[80] சிலப். 10 : 102-109

சதுரங்கப்பட்டினத்திற்கு அண்மையில் வங்காளக் குடாக்கடலில் கலக்கிறது. இதனோடு கூடும் துணை ஆறுகளுள் செய்யாறு என்பது குறிப்பிடத்தக்கது. தென்பெண்ணையாறு, பொன்னையாறு என்றும் வழங்கப் படுகிறது. இது கருநாடக மாநிலத்திலுள்ள சென்ன நாராயணன்பேட்டை என்னுமிடத்தில் தோன்றித் தர்ம புரி, தென்னார்க்காடு ஆகிய மாவட்டங்களில் பாய்ந்து, கடலூருக்கு அண்மையில் கடலில் கலக்கிறது. சேர்வ ராயன்மலை, கல்ராயன்மலை, பச்சைமலை ஆகியவற்றில் தோன்றும் அருவிகள் ஒன்றுகூடி வெள்ளாறு என்னும் பெயர் பூண்டு ஓடும் ஆறு தென்னார்க்காடு மாவட்டத்தில் பாய்ந்து கடலில் கலக்கிறது. இதனைச் சோழநாட்டின் வடக்கு எல்லையாகக் குறிப்பிடுவது உண்டு. புதுக் கோட்டைப் பகுதியில் பாய்ந்து கிழக்கு முகமாக ஓடிக் கடலில் கலக்கும் ஆறு ஒன்றும் வெள்ளாறு என்னும் இதே பெயரைப் பெற்றுள்ளது. தெளிவுக்காக இதனைத் தென்வெள்ளாறு என்று குறிப்பிடலாம்.

தமிழ்நாட்டிற்கே பெருஞ்சிறப்பினைத் தரும் ஆறு காவேரியாகும். இதனை வட இந்தியாவில் பாயும் கங்கைக்கு இணையான புனித ஆருகக் குறிப்பிடுவது வழக்கம். குடகு மலையில் தோன்றிக் கருநாடக மாநிலத் தின் ஊடே சென்று தமிழ்நாட்டை அடைந்து கோவை, சேலம் மாவட்டங்களின் எல்லையில் ஓடித் திருச்சி, தஞ்சை மாவட்டங்கள் வழியே பாய்ந்து கீழைக்கடலில் இது கலக்கிறது. பவானி, ஆன்பொருநை (அமராவதி) முதலான ஆறுகள் ஆங்காங்கே இதனோடு சேர்கின்றன.

தென்வெள்ளாறு, குண்டாறு, வைப்பாறு ஆகியவை வெறுங் காட்டாறுகள். பழனிமலையில் தோன்றிப் பாண்டியநாட்டில் பாய்ந்து வங்கக்கடலில் கலக்கும் வைகையாறு பரிபாடலில் சிறப்பிக்கப்படுகின்ற ஒன்றாகும். சுருளியாறு இதற்குத் துணையாய்க் கலக்கும் ஆறுகளுள் குறிப்பிடத்தக்கது. பொதியமலையில் தோன்றிக் கிழக்கு முகமாகப் பாயும் தாமிரபரணியே பொருநை என்று சங்கப்பாடலில் குறிப்பிடப்படும்

ஆறு என்பது சிலர் கருத்து. குமரி மாவட்டத்துப் பூதப்பாண்டி, நாகர்கோவில், சுசீந்திரம் ஆகியவற்றி னூடே பாய்ந்து மணக்குடி என்னும் இடத்தில் கடலோடு கலக்கும் ஆறு பழையாறு ஆகும். மக்கள் இதனைப் பறளியாறு என்றும் வழங்குகின்றனர். கடைச்சங்க காலத்துக்கு முன் கடலால் கொள்ளப்பட்டதாகக் கூறப் படும் பஃறுளி ஆற்றின் தொடக்கப்பகுதியாய் இது இருந்திருக்கலாம் என்று ஒரு சிலர் கருதுகின்றனர்.[81]

சேரநாட்டில் பாயும் ஆறுகளை வடக்கிலிருந்து காணுங்கால் சந்திரகிரியாறு, நேத்திரகிரியாறு, சுவர்ண கிரியாறு, சீதாநதி, பொன்னுனியாறு, பேய்ப்பூர் ஆறு, வாலார்ப்பட்டினம் ஆறு, சாலிக்குடி ஆறு, பெரியாறு, பம்பாறு முதலானவை குறிப்பிடத்தக்கவை.

இவற்றுள் பெரியாறு (பேரியாறு) சிலப்பதிகாரத் திலும், சங்கப் பாடல்களிலும் சிறப்பிக்கப்பட்டுள்ளது. இவை அனைத்தும் மேற்குத் தொடர்ச்சி மலையில் தோன்றி மேற்கு முகமாகப் பாய்ந்து அரபிக்கடலில் கலப்பவை.

ஆறுகள் பாயும் இடங்களே நாகரிகம் வளர்ச்சி பெற்ற இடங்கள் ஆகும். ஆற்றங்கரைகளில் சிறப்புமிக்க நகரங்கள் தோன்றிச் செல்வாக்குப் பெற்றிருந்தமை இதனைக் காட்டும். காவிரிக்கரையில் உறையூர், கழார் முதலான ஊர்களும், வையை ஆற்றங்கரையில் மதுரையும், பேரியாற்றங்கரையில் கருவூரும் சங்க காலத்தில் சிறப்புப்பெற்றிருந்தன.

## நெய்தல்

கடலும் கடற்கரைப் பகுதிகளும் சேர்ந்த நிலப் பகுதி நெய்தல் என்னும் பெயரைத் தாங்கியது. உவர் நீர்க் கழிகளிலும் பூத்து அழகைத் தரும் நெய்தற்பூ இந்

---

[81] சதாசிவம், வித்துவான், செ., சேரநாடும் செந்தமிழும், சசி நிலையம், நாகர்கோவில்-2, 7 ஆம் பதிப்பு, 1970–பக். 90.

நிலப்பகுதியில் சிறந்து விளங்கியமையால் இந்நிலம் இப்பெயரைப் பெற்றது.

சங்ககாலத் தமிழகம் மூன்று பக்கங்களில் கடலால் சூழப்பட்டிருந்தமை முன்பே கூறப்பட்டுள்ளது. இத் தன்மையால் இந்நாட்டிற்கு நீண்ட கடற்கரை இருந்தமை தெளிவு. இப்பகுதியில் வாழ்ந்த மக்கள் கடலில் மீன் பிடித்தல், உப்பு எடுத்தல், அவற்றை உள் நாடுகளில் விற்றல் முதலான தொழில்களில் ஈடுபட்டிருந்தனர்.

ஆறுகள் கடலோடு கலக்கும் இடங்களிலும், பிற வாய்ப்பான பகுதிகளிலும் பெருந் துறைமுகப் பட்டினங்கள் அமைந்திருந்தன. நறவு,[82] தொண்டி, முசிறி[83] முதலான துறைமுகங்கள் சங்ககாலத்தில் மேற்குக் கடற்கரையில் குறிப்பிடத்தக்கனவாய் இருந்தன. இக்காலத்தில் கொச்சி, திருவாங்கூர் முதலியன அக்கடற்கரையில் சிறந்து விளங்குகின்றன.

எயிற்பட்டினம், காவிரிப்பூம்பட்டினம், கொற்கை முதலான கிழக்குக் கடற்கரைத் துறைமுகப்பட்டினங்கள் சங்ககாலத்தில் குறிப்பிடத்தக்கவை. சென்னை, தூத்துக்குடி, நாகப்பட்டினம் ஆகியவை தற்காலத்தில் இக்கடற்கரையில் சிறப்பினைப் பெற்றுள்ளன.

கிரீஸ், ரோம் முதலான மேலை நாடுகளோடு ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே கடல்வழி வாணிகத் தொடர்பு கொள்ளத் தமிழ்நாட்டின் மேற்குக் கடற்கரை வாய்ப்பாய் அமைந்தது. பிற்காலத்தில் பர்மா, சீனு, தென்கிழக்கு ஆசியத்தீவுகள் முதலான நாடுகளோடு அவ்வகைத் தொடர்பு கொள்ளக் கிழக்குக் கடற்கரை வாய்ப்பாய் அமைந்தது. இதனுல் தொடர்புகொண்ட நாடுகளுக்கிடையே கலையும் பண்பாடும் கலந்து வளரலாயின.

பண்பாட்டுத்தோற்றம் பற்றிய செய்திகளில் தமிழ் நாட்டின் மக்கள்தொகை 1971ஆம் ஆண்டின்

---

82 இப்போதுள்ள கண்ணனூர் எனலாம்.

83 இப்போதுள்ள கிராங்கனூர் எனலாம்.

கணிப்புப்படி 4,11,99,168 என்பதை மட்டும் இங்குச் சுட்டலாளோம்.[84] ஒவ்வொரு நிலப்பகுதியிலும் வாழ்ந்த மக்கள், அவர்களின் தெய்வம், தொழில், பொழுது போக்கு, அந்தந்த நிலங்களில் இருந்த செடியினங்கள், விலங்குகள், புள்ளினங்கள், நீர்நிலைகள் முதலானவற்றை யெல்லாம் சங்ககால நூல்களிலும், பொருள் இலக்கண நூல்களிலும் விரிவாகக் காணலாம். பண்பாட்டைப் பற்றிய குறிப்புகளை இவ்வரலாற்று நூலின் பிற பகுதி களில் விரிவாகக் காணலாம்.

---

84. இது ஆண்டுதோறும் 2·23% உயர்ந்து வருகிறது.

இயல் 3

# இனமரபு

## 1. இனப்பாகுபாடு

'பல்வேறு இனங்களும் பண்பாடுகளும் நிறைந்த ஓர் அரும்பொருள் காட்சியகமே இந்தியா' என்று அறிஞர் கூறுவர்.[1] இக்கருத்திற்குத் தமிழகத்து இன மரபு வரலாறு சிறப்பு மிக்க சான்றாக விளங்குகிறது.

தமிழகத்தின் இனமரபு வரலாறு மிகவும் சிக்கலானது; குழப்பம் மிக்கது. புத்தம் புதிய ஆராய்ச்சிகளால் பழைய கருத்துகள் பல செல்லாக் காசுகள் ஆகி விடுகின்றன. புதிய கருத்துகள் எளிதில் பொருத்த மற்றுப் போய்விடுகின்றன. எனவே, மிகவும் கருத்தோடும் விழிப்புணர்ச்சியோடும் இனமரபு வரலாற்றை வரையவேண்டிய பொறுப்பு நம்மைச் சார்கிறது. இன மரபியல் ஆராய்ச்சி திட்டவட்டமானது அன்று. அதில் செய்யப்பெறும் முடிவுகள் நிலையற்றவை; எளிதில் மாறக்கூடியவை; கொள்கைகள் ஒன்றோடொன்று முரண் பட்டவை. தக்க அடிப்படைச் சான்றுகள் இல்லாத நிலையில் கொள்ளப்பட்ட முடிவுகள் பல இத்துறையில் மிகுந்த செல்வாக்குப் பெற்றுள்ளன. அவை காலப் போக்கில் மாற்றமுறலாம்; மாற்றவும் படலாம்.

### 'இனம்'—சொல்லும் பொருளும்

'இனம்' என்னும் சொல்லிற்குத் தமிழில் வருக்கம், குலம், சுற்றம், நிரை, ஒப்பு[2] என்பன போன்ற பல

---

[1] Mitra, Panchanan, *Pre-historic India*, (University of Calcutta, 1927), p.3

[2] *Tamil Lexicon*, (University of Madras, 1936), Vol. I p. 870

பொருள்கள் வழங்கிவருகின்றன. இவற்றுள் 'வருக்கம்' என்ற பொருளிலேயே இங்கு 'இனம்' என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஆங்கிலத்தில் வழங்கும் 'ரேஸ்'[3] என்னும் சொல்லிற்குரிய பல்வேறு பொருள்களுள் 'பொதுவான ஒரு மூதாதையரின் கால்வழியில் தோன்றிப் பொதுவான பண்புகளை மரபுவழியாகப் பெற்றுள்ள மக்கள் பகுதி'[4] என்னும் பொருளே சிறப்புடையது. இப்பொருளை உணர்த்தும் 'ரேஸ்' என்னும் ஆங்கிலச் சொல்லிற்கு நேரான தமிழ்ச்சொல்லாக 'இனம்' என்னும் சொல் இப்பகுதியில் கையாளப்படுகிறது.

பொருளாழம் மிக்க பல்வேறு சொற்களைப் போன்றே, 'இனம்' என்ற சொல்லும் பல பொருள்பட எடுத்தாளப்படுகிறது. சில சமயங்களில் 'நாட்டு மக்கள்' என்று பொருள்படுமாறு இச்சொல் வழங்கப்படுகிறது. பிரெஞ்சு இனம், சீன இனம், அமெரிக்க இனம் என்றெல்லாம் பேசப்படுவதை நாம் கேட்கின்றோம். ஒரே மொழி பேசும் மக்களை இதே சொல்லால் குறிப்பிடுவதையும் நாம் காணுகின்றோம். ஜெர்மானிய இனத்தவர், ஆரிய இனத்தவர், செமிடிக் இனத்தவர் என்றெல்லாம் குறிக்கும் வழக்கமும் இருந்துவருகிறது. குறிப்பிட்ட ஓர் இடத்தில் பொதுவான மொழி, சமயம், சமூகம், அரசியல், பொருளாதார நிறுவனங்கள் போன்றவற்றால் கட்டுண்டு செயல்படும் மக்கள் கூட்டத்தையே 'இனம்' என்னும் பெயரால் அறிஞர்கள் சுட்டுகின்றனர். இப்பொருளிலேயே பண்டைக் கிரேக்கரும், யூதரும் தனி இனத்தவர்களாகக் கருதப்பெற்றனர்.

இத்தகைய பாகுபாடெல்லாம் பொருந்தாதவை; இவை நாடு, மொழி, பண்பாடு, பழக்க வழக்கங்கள்

---

[3] Race

[4] Geddie, William (Ed.): *Chamber's Twentieth century Dictionary*, (W & R. Chambers Ltd. Edinburgh, 1960), p. 907

போன்றவற்றை அளவுகோளாகக் கொண்டு செய்யப் பெறுவன; அறிவியல் ஆராய்ச்சிமுறைக்குப் பொருந்தி வருவனவல்ல; இவை காலந்தோறும் சூழ்நிலைக்கேற்ப மாறக்கூடிய இயல்புடையன என்று கருதுவோரும் உளர். ஆயினும் இனத்தின் உண்மையான பொருள் மனித இனத்தில் உடலுறுப்புகளினுடைய அமைப்பைப் பொறுத்து அமைவதாகும். உயிரின மரபுரிமை மூலம் வழிவழியாகக் கொண்டுசெல்லக்கூடிய பொது வான எளிதில் கண்டறியத்தக்க உடற்கூற்றுப் பண்புகளையுடைய மனிதர்களின் சேர்க்கையை 'இனம்' என்று கூறுவதே அறிவியல் ஆராய்ச்சிக்குப் பொருந்திவரக்கூடிய கருத்தாகும்.

இரண்டாவது உலகப் போருக்குப் பிறகு 'இனம்' என்பது ஒரு சமூகப் புனைந்துரைக் கதை[5] என்ற கருத்து அறிஞர் பெருமக்களிடத்துப் பரவலாக நிலவி வருகிறது.[6] இரண்டாவது உலகப்போர் உண்டானதற் குரிய மூல காரணம் ஜெர்மானியருடைய இன மையக் கொள்கையேயாகும்.[7] "ஆரிய இனமே உலகில் சிறந்தது. அவர்களே உலகை ஆளத் தகுதி உடையவர்கள்" என்ற கோட்பாட்டை ஹிட்லர் நடைமுறையில் கடைப்பிடித்த மையால் மனித இனத்திற்கு உண்டான இன்னல்களையும், இடையூறுகளையும், கேடுகளையும், கெடுதல்களையும் அள விட்டுரைக்கமுடியாது. இதனால், அறிஞர்களிடையே இனவெறிக்குக் காரணமான 'இனக் கொள்கை'யின் மீது வெறுப்புண்டாயிற்று. மனித இனம் மண்ணில் நல்ல வண்ணம் வாழவேண்டுமானால் குறுகிய இனப்பற்றுக்கு இடந்தரலாகாது என்று அவர்கள் கருதுகின்றனர். இதன் விளைவாக 'இனம் என்பது ஒரு சமூகப் புனைந் துரைக் கதை' என்ற கோட்பாடு தோன்றலாயிற்று. "இனம் என்னும் கருத்து பலவகையான தவறான பொருள்களை இழிவாக அளித்ததனால், அறிவியல் துறை

---

[5] Social myth

[6] UNESCO 'Courier' July-August, 1950, p.8

[7] Ethnocentrism

களிலிருந்தே அதை முழுமையாகப் புறக்கணித்து ஒதுக்கிவிட வேண்டிய நெருக்கடி உண்டாகிவிட்டது"[8] என்று ஆஷ்லி *மாண்டேகு* என்ற மானிடவியல் வல்லுநர் கூறுகின்றார்.

மேலும், அறிவியல் வளர்ச்சியால் உண்டான முன்னேற்றம் பல்வேறு நாட்டு மக்களிடையேயும் பல்வேறு இனத்தவரிடையேயும் நெருக்கமான தொடர்பினையும் கலப்பினையும் உண்டாக்கிவருகிறது. இதனால், இனப் பாகுபாடே அழிந்துவிட்டது என்று சில சமூகவியல் ஆராய்ச்சியாளர் நம்புகின்றனர். அறிவியல் வளர்ச்சியால் மனித இனம் இடத்தாலும் காலத்தாலும் உண்டாகக் கூடிய இடையூறுகளை வென்றுவருகிறது என்பது உண்மை. ஆனால், பல்வேறு நாட்டு மக்களுக்கு இடையேயுள்ள பண்பாட்டு வேற்றுமைகளோ, பல்வேறு இனங்களுக்கு இடையேயுள்ள இனப்பண்புக் கூறுகளோ அழிந்தொழிந்துவிட்டன என்று நாம் சொல்லமுடியாது.

"நிறம் அல்லது வடிவ அமைப்பு போன்ற முதன்மையான அல்லது குறிப்பிட்ட ஒருசில பண்புகளை மட்டும் அடிப்படையாகக் கொண்டு நாம் மனித இனத்தைப் பல்வேறு இனங்களாகப் பாகுபடுத்திக் கூறமுடியாது. வெறும் உடற்கூற்று இயல்புகளை நிலைக்களனாகக் கொண்டு உலக மக்களைப் பல குழுக்களாகப் பிரிப்பது பொருத்தமற்றதாகும். இவ்வடிப்படையில் பாகுபாடு செய்தால் ஜப்பானில் வாழும் வெண்ணிறத் தோலுடைய ஐனு[9]க்களை நாம் தவறுதலாக வெள்ளையர் இனத்தோடு தொடர்புபடுத்தி உரைக்க வேண்டும். மேலும், கறுப்பு நிற இந்துக்களைக் காகாசிய[10] இனத்தைச் சேர்ந்தவர்கள் அல்லர் என்று நீக்கிவிட நேரிடும். ஆனால் உண்மையில் அவர்கள் காகாசிய இனத்தைச் சேர்ந்தவர்கள் என்பதற்கு ஆற்றல்மிக்க சான்றுகள் பல இருப்

---

[8] Montagu, Ashley, W.F. : '*Man's most Dangerous Myth—The Fallacy of Race*', UNESCO, France, 1967.

[9] Ainu

[10] Caucasian

பதை நாம் மறத்தலாகாது"[11] என்பது சமூகவியல் அறிஞர்களிடையே பொதுவாக நிலவிவரும் கருத்தாகும்.

இக்கூற்றினை முற்றிலும் உண்மை என்று நாம் ஒப்புக்கொள்ள இயலாது. குரோபர் போன்ற மானிடவியல் நூலார்[12] "இனம் என்பது உயிரியல் ஆராய்ச்சிக்கு உகந்த கருத்தாகும்; அது மரபுவழி ஒன்றுபட்டு வாழும் ஒரு குழுவினைக் குறிப்பதாகும்; மனித இனத்தினுடைய வளர்ச்சியின் ஒரு வகையை அது சுட்டுகிறது; ஆனால் 'இனம்' என்பதைச் சமூகப் பண்பாட்டுத் துறைக் கருத்தாகக் கொள்ளக்கூடாது; சிறப்பாகச் சமூகப் பண்பாட்டுத் துறையினர் அச்சொல்லைக் கையாளாமல் இருப்பது நல்லது"[13] என்று கருதுகின்றனர்.

எனவே, மனித இனத்தின் இயல்பினையும் பண்பினையும் ஆராய்கின்றவர்கள் 'இனம்' என்பதற்குத் தரப்படும் விளக்கத்தையும் அதைக்கொண்டு செய்யப்படும் இனப் பாகுபாட்டையும் அடிப்படையாகக் கொண்டே ஆராய்ச்சி செய்யவேண்டியவர்களாக உள்ளனர்.

### மொழிவழி இனப்பாகுபாடு

அண்மைக்காலத்து ஆராய்ச்சியாளர்களுள் சிலர் மனித இனத்தை அவர்கள் பேசும் மொழியினை அடிப்படையாகக் கொண்டு மொழிவழி இனங்களாகப் பாகுபாடு செய்தனர். மொழிப் பாகுபாட்டிற்கும் இனப் பாகுபாட்டிற்கும் தொடர்பில்லை என்பது அவர்கள் கருத்து. இத்தகைய பாகுபாட்டால் உலகில் இனச் செருக்கிற்கோ இனக் கொடுமைக்கோ இடமில்லாமல் போகும் என்று அவர்கள் நம்புகின்றனர். இதற்குச் சான்றாக 'யுனஸ்

---

[11] Ogburn Williams, F. & Nim Koff Meyer, F. *A Hand book of sociology* (Routledge & Kegan Paul, London, 1964), p. 62

[12] Anthropologists

[13] Kroeber, A.L. *Anthropology*, (Harcourt, Brace and Co, New York, 1948), p.124

கோ'வின் ஆதரவில் வெளியிடப்பெற்றுள்ள 'இந்தியப் பண்பாட்டு வரலாற்றில் ஆராய்ச்சி' என்னும் நூலில் காணப்படும் கருத்து ஒன்றைக் காட்டலாம். 'ஆரியன்', 'திராவிடன்' என்னும் சொற்கள் உண்மையில் மொழி வழி வாழ்வோரைக் குறிக்கும் பெயர்களாகும் என்பதை நமக்கு நாம் நினைவூட்டிக்கொள்வது நல்லது. இச் சொற்களை இனவழி அமைந்த மக்கள் குழுக்களைக் குறிப் பிடப் பயன்படுத்துவதே தவறாகும். உலகில் பல்வேறு பகுதிகளில் நிகழ்ந்ததைப் போன்றே இந்தியாவிலும் கடந்த பல நூற்றாண்டுகளாக இனங்கள் பேரளவில் கலந்துள்ளன. எனவே, மொழியையும் இனத்தையும் ஒன்றுபடுத்திக் காட்ட இயலாது.[14]

இக்கருத்தினை ஊன்றி நோக்குகின்றபொழுது நமக் குச் சில ஐயங்கள் எழுகின்றன. குறிப்பிட்ட ஒரு மொழியைப் பேசுகின்ற காரணத்தால் அம்மொழியைப் பேசுகின்ற மக்கள் அனைவரும் ஓர் இனத்தைச் சேர்ந்த வர்கள் என்று கூறுவது புதியதாக வகுத்துக்கொண்ட ஒரு கொள்கையா? அல்லது அறிஞர்களிடையே இக் கருத்து நெடுங்காலமாக நின்று நிலவி வருவதா? குறிப் பிட்ட ஓர் இடத்தில் வாழும் மக்கள் பொதுவாக ஒரு மொழியைப் பேசுவதால் அவர்கள் அனைவரையும் ஓர் இனத்தைச் சேர்ந்த மக்கள் என்று கூறுவது பொருந் துமா? பலூசிஸ்தானத்தில் வாழும் மக்களுள் ஒரு சிறு பிரிவினர் 'பிராகுவி' என்னும் (திராவிட மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த) மொழியைப் பேசுவதால் அவர்கள் திராவிட இனத்தைச் சேர்ந்தவர்களாகிவிட முடியுமா? என்பன போன்ற ஐயங்கள் தோன்று கின்றன.

உலகத்தில் பேசப்படுகின்ற மொழிகளை ஆராய்ந்து மொழியியலார் அவற்றைப் பல குடும்பங்களாகப் பாகு

---

[14] Metraux Guy, S. and Crouzet Francois: *Studies in the Cultural History of India* (Shivalal Agarwala, Agra, 1965), p.187.

பாடு செய்துள்ளனர். இப்பாகுபாடு மொழிகளை வகைப் படுத்தப் பொருந்துமே ஒழிய, மனித இனத்தை உடற் கூற்று அமைப்பிலோ, வாழுகின்ற நாட்டின் அடிப்படை யிலோ பாகுபாடு செய்வதற்குப் பொருந்தாது. மொழி ஆராய்ச்சியின் வசதிக்காக வகுத்துக்கொள்ளப்பெற்ற விதிமுறைகளை இன ஆராய்ச்சியில் கொண்டுவந்து பொருத்திக் காட்டுவது ஆராய்ச்சிமுறை ஆகாது. ஒவ் வோர் ஆராய்ச்சித் துறைக்கும் தனிச் சிறப்பு வாய்ந்த அடிப்படை விதிகளும் கோட்பாடுகளும் உள்ளன. அவ் வவற்றிற்குரிய வரையறுக்கப்பட்ட நிலைக்களங்களில் அவ்வவற்றிற்குரிய விதிகளைப் பயன்படுத்த வேண்டுமே யொழிய பிற துறைகளில் கொண்டுவந்து அவற்றைப் புகுத்திக் குழப்புவது பொருளற்ற செயலாகும். ஆனால், நம் நாட்டில் சிலர் இத்தவற்றைச் செய்துவருகின்றனர். அவர்கள் கருத்து பொருத்தமற்றது என்பதற்குப் 'பிராகுவி' மொழி பேசும் மக்களே போதிய சான்றாக உள்ளனர்.

இனம் என்பது மொழி என்னும் சொல்லிற்குரிய பொருளை உணர்த்தும் மாற்றுச்சொல் ஆகாது. வரலாற்று நூல் தொடக்கத்திற்கு முன்பு குறிப்பிட்ட ஒரு நிலப்பரப்பில் வாழ்ந்த அல்லது குறிப்பிட்ட ஒரு குழுவைச் சேர்ந்த மக்களிடத்தில் ஒரு மொழி தனிப் பண்புகள் உடையதாகச் சிறப்புற்று விளங்குமானால், அது அம்மக்களுடைய பண்பாட்டை வெளிப்படுத்தும் கருவிகளுள் முதன்மையிடம் பெறும். அந்நிலையில் இனத்திற்கும் மொழிக்கும் இடையே நெருங்கிய தொடர்பு உண்டாகலாம். இதனால், மொழியே இனப் பண்புகளை விளக்குவது என்பது பொருந்தாது.

## உயிரியல்வழி இனப்பாகுபாடு

இனத்தைப்பற்றிய புதிய கருத்தினை உயிரியல் சார்பான ஆராய்ச்சி உலகிற்கு உதவியிருக்கிறது. இக் கருத்து நன்கு அறியப்பட்ட மெய்ம்மைகளையும் மரபு வழிப் பண்புகளையும் அடிப்படையாகக் கொண்டு உரு

வாக்கப்பட்டதாகும். மனித இனங்களுக்கு இடையே நிலையான அல்லது கலப்பற்ற உயிரியல் வேறுபாடுகள் உள்ளன என்னும் பழைய கருத்தும், அறிவியல் ஆய்விற்குப் பொருந்திவராத 'உயர்ந்த இனங்கள்' 'இழிந்த இனங்கள்' என்னும் படிமுறைப் பாகுபாடும் இப்பொழுது பொய்யாய்ப் பழங்கதையாய்ப் போய்விட்டன. புதிய கருத்துப்படி 'ஹோமோ சேபியன்ஸ்'[15] என்னும் ஒரே இனத்தினுள் உயிரியல் துணைக்குழுக்களாக மனித இனங்கள் கொள்ளப்படுகின்றன. துணைக்குழுக்களுக்கு இடையே காணப்படும் ஒப்புமைச் சார்புடைய வேற்றுமைகளையும், சிறுதிற வேற்றுமைகளையும்விட மனித இனம் முழுமைக்கும் ஒத்த மரபுவழிப் பண்புகள் ஆற்றல் மிக்கனவாக விளங்குவதை இப்புதிய இனப்பாகுபாட்டின் அடிப்படைக் கொள்கை உலகிற்கு உணர்த்துகிறது. உயிரியல் பாகுபாட்டு நோக்கில் உண்டான இம்மாற்றம் பண்டைக்காலச் சான்றோர்கள் போற்றிய 'மனித இன ஒருமைப்பாடு' என்னும் கொள்கைக்குப் புதிய விளக்கம் தருகிறது.

தங்களுக்கிடையே மணவுறவு கொள்ளத்தக்க உறவு முறையுடைய தனி மனிதர்களின் கூட்டமைப்பே—குழுவே—இனம். மற்ற மக்கள் கூட்டத்திலிருந்தும் குறிப்பிட்ட சில பொதுவகையான மரபுவழிப் பண்புகளிலிருந்தும் அக்குழு வேறுபட்டதாக இருக்கும் என்பது உயிரியல் ஆய்வுமுறை தரும் விளக்கமாகும்.[16] ஒவ்வொரு தனி மனிதனின் நடத்தையையும், ஒவ்வொரு குழுவின் நடத்தையையும் மரபுவழியும் சூழ்நிலையும் சேர்ந்து உருவாக்குகின்றன. குருதிக் கலப்பும், தட்ப வெப்ப நிலையும், சூழ்நிலைக்கேற்ப அமைத்துக் கொள்ளப் பெறும் வாழ்க்கைமுறையுமே பல்வேறு இனங்கள் தோன்றுவதற்குரிய காரணங்களாகும்.

---

[15] **Homo Sapiens**

[16] **Dunn, L.C. (Ed.) : *The Race Question in Modern Science* : Sec.7. 'Race and Biology' (UNESCO, Paris, 1956), p.253.**

## உடற்கூற்று அமைப்புவழி இனப்பாகுபாடு

'மனித இனம் முழுவதும் ஒன்றே' என்னும் கருத்தை எல்லா அறிவியலறிஞர்களும் ஒப்புக்கொள் கின்றனர். 'ஹோமோ சேபியன்ஸ்' என்ற ஒரே உயி ரினத்தின்பாற்பட்டவர்களே மனிதர்கள் என்னும் கருத்தை ஏற்காதவர்கள் இல்லை. இப்பொதுவான மூதாதையரிடமிருந்தே எல்லா வகையான மனிதர்களும் தோன்றினர்; மனித இனங்களும் தோன்றின. மனித இனத்தின் பல்வேறு குழுக்களிடையே காணப்படுகின்ற வேறுபாடுகள் எல்லாம் தனித்தியங்குதல், இயற்கைத் தேர்வு, கலப்பு உயிரியாக்கல், மரபுவழி இனப்பண்பு களைக் கட்டுப்படுத்துகின்ற சக்திகளின் தேர்வுகள், அவற்றின் அமைப்பில் நிகழும் மாற்றங்கள் முதலான பல்வேறு கூர்தலறக் காரணங்களால்தான் ஏற்படு கின்றன.[17]

பொதுவாக இனப்பாகுபாட்டைப்பற்றி ஆராய் கின்றபொழுது நமக்குச் சில உண்மைகள் புலனு கின்றன. மானிடவியல் நூலார் 'இனம்' என்னும் சொல்லை விலங்கியல் சார்புப்பொருளில் கையாளு கின்றனர்[18] என்பது தெரிகின்றது. உடற்கூற்று அமைப் பில் காணப்பெறும் முனைப்பான சில இயல்புகளை அடிப் படையாகக் கொண்டு பல்வேறு இனங்களாக அவர்கள் மக்களினத்தைப் பாகுபாடு செய்துள்ளனர் என்பதும் புலனுகின்றது.

பண்பாட்டின் முன்னேற்றத்தை முடிவுசெய்யும் கூறாக இனம் அமையவில்லை என்பது இரண்டாவது உண்மையாகும். எனினும், மனிதனுடைய வியத்தகு ஆற்றல்களும், சூழ்நிலைக்கேற்ப வாழ்க்கையை அமைத் துக்கொள்ளும் திறனும் இப்பண்பில் ஊறியனவாக உள்ளன. இதனுல் இனப்பண்பு என்பது பண்பாட்டு

---

17 UNESCO 'Courier', July-August, 1950, p.8

18 Kroeber, A.L. : *op. cit.* p.148

வளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்துவருவதாகத் தெரிகிறது.

தோல் அல்லது வண்ணப்பொருள், மண்டை ஓடு, உடற்கட்டு, கண்மணி, உதடுகளின் அமைப்பு, தலைமுடி ஆகிய பல்வேறு உடற்கூற்றுப் பண்புகளின் வேற்றுமைகளைக் கருத்தில் கொண்டு இனப்பாகுபாடு செய்யப்பெறுகிறது.

மனிதனுடைய விதியை வகுப்பதில் மொழி, நாடு ஆகியவற்றைவிட இனம் மிக அதிகமான பங்கு பெற்றிருக்கிறது. 'இனம்' என்பது மரபுவழிப் பண்பை உள்ளடக்கியிருக்கிறது. மரபுவழிப் பண்பு அரசையும் அரசியலையும் உருவாக்கக் காரணமாயுள்ள ஒழுக்க, சமூக, அறிவியல் பண்புகளைத் தன்னகத்தே கொண்டிருக்கிறது என்பது இங்குக் கருதத்தக்கது.

மக்களுடைய உடற்கூறுபற்றி ஆராய்ந்து உரைக்கும் உடற்கூற்று மானிடவியல்[19] நூலார் மொழிகளைப் பற்றியும் பண்பாடுகளைப் பற்றியும் சமூகவியல் நூலார் தெரிவித்துவரும் கருத்துகளைப்பற்றிக் கவலையுறுவதில்லை. அவர்கள் இந்தியாவில் வாழும் மக்களிடையே காணப்பெறும் உடற்கூற்று இயல்புகளை ஆராய்ந்து அதன்வழி இந்திய மக்களைப் பல இனங்களைச் சேர்ந்தவர்களாக வகைப்படுத்தியுள்ளனர். அந்த இனங்களாவன: திராவிட இனம், இந்திய-ஆரிய இனம், மங்கோலிய இனம்.

## 2. திராவிட இனத்தின் தொன்மை.

முதலில் திராவிட மக்களை உடற்கூற்றுவழி இனப்பாகுபாடு செய்த அறிஞர்களின் கருத்தைக் காண்போம்.

திராவிட இனத்தவர் 'பெரும்பாலும் குள்ளமான வடிவினர்; கரிய நிறத்தினர்; தழைத்த கூந்தலும், அதில் ஒரோ ஒருகால் சுருண்ட மயிரும் வாய்க்கப்பெற்றவர்;

---

[19] Physical Anthropologists

கரிய விழியினர்; நீண்ட தலையோட்டை உடையவர்; ஒரோ ஒருகால் அடியிற் குழிந்த அகன்ற மூக்கினர்" என்பது இந்திய மானிடவியலார் கருத்து. இந்திய மக்களின் பண்டைத் தொகுதியில் முதன்மையாய் இருந்த திராவிட இனத்தவர் பிற்காலத்தில் வந்து குடியேறிய ஆரியர், சித்தியர், மங்கோலியர் முதலான பிற இனத்தவரோடு பையப்பையக் கலப்புற நேர்ந்ததை வரலாறு எடுத்துரைக்கின்றது.

## 'திராவிடர்' சொல்லும் பொருளும்

திராவிடர் என்னும் சொல்லின் பொருள் யாது? அது தமிழ்ச்சொல்லா? என்பன போன்ற வினாக்கள் அறிஞர்களுடைய கருத்தைக் கவர்ந்துள்ளன. திராவிடர் என்னும் சொல் வடமொழிச்சொல் என்பது கால்டுவெல் கருத்தாகும்.[20] "த்ர்" என்னும் வேர்ச்சொல்லோடு 'விட்' என்னும் விகுதி சேர்ந்து "திராவிட்" என்று அமைந்ததாக அவர் கருதுகிறார்: த்ர்=ஓடு, விட்= சிறுதுண்டு என்று பொருள் கூறுவர். எனவே 'ஓடிப் போனவர்கள் வாழும் சிறு நிலப்பரப்பு என்று அவர் திராவிடம் என்பதற்கு விளக்கம் கூறுகிறார். மற்றொரு சாரார் இச் சொற்பாகுபாட்டை அடிப்படையாகக் கொண்டு விரட்டப்பட்டவர் வாழும் பகுதி என்று கூறுகின்றனர்[21]. இவர்கள் கூறும் பொருள் பகைமை உணர்வின் காரணமாகத் தோன்றியிருத்தல் வேண்டும்; தமிழ் என்பதே இனிமை; எனவே திராவிடம் தமிழாகாது என்று ரா. இராகவையங்கார் அவர்கள் இந்தக் கருத்தினை மறுத்துள்ளார்.[22]

---

20 Caldwell, R.: *A Comparative Grammar of the Dravidan Languages*, (University of Madras, Madras, 1956), p.9

21 Srinivasa Aiyangar, M: *Tamil Studies*, (Madras, 1914), p.4

22 இராகவையங்கார், ரா: தமிழ்மொழி வரலாறு, (அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1943), பக். 16.
'திராவிடம்' என்னும் சொல் 'தீவினையைத் துரத்துவது' என்னும் பொருளை உணர்த்துவதாகச் சிவஞான முனிவர் கருதுகிறார்.
"எவ்வினையும் ஓம்புதலால் திராவிடம் என்றியல் பாடை"
(காஞ்சிப்புராணம், தழுவக். 243)

திருவிடம் (திரு+இடம்) என்னும் சொல்லே திராவிடம் என்று வடமொழியாளர்களால் திரித்து வழங்கப்பெற்றது என்று பேராசிரியர் எம். எஸ். பூரண லிங்கம் பிள்ளை தெரிவித்துள்ளமை[23] இங்குக் கருதத் தக்கது.

ஹீராசு அடிகள், "கடலின் குழந்தைகள்" என்று பொருள்படும் "திரைமிலர்" என்னும் சொல் திரிந்து, திரமிலர்–திரமிடர்–திராவிடர் என்ற வடிவங்களைப் பெற்றிருக்கவேண்டும் என்று கருதுகிறார். தமது கருத்தை நிலைநாட்ட உலக மொழிகள் பலவற்றிலிருந்து அவர் சான்றுகள் காட்டியுள்ளார்.[24] அவற்றை 64, 65 ஆம் பக்கங்களிலுள்ள அட்டவணையில் காணலாம்.

இந்த அட்டவணையிலிருந்து பண்டைக் காலத்தில் திராவிட இனத்தவரோடு தொடர்புடைய பெயரைக் கொண்ட மக்கள் உலகின் பல பாகங்களிலும் பரவி யிருந்தமை புலனாகின்றது. திரைமிலர் என்னும் சொல்லே திராவிடரெனத் திரிந்தது என்னும் இவரது கருத்தினை நாம் உடன்பட இயலாத நிலையில் இருந் தாலும் திராவிடரின் தோற்றம் பற்றிய ஆராய்ச்சிக்கு இப்பெயர்த்திரிபு பற்றிய விளக்கம் மறைமுகச் சான்று கள் சிலவற்றைத் தருவதனால் நாம் இவரது கருத்தைக் கருத்தில் கொள்ளவேண்டியிருக்கிறது.

டாக்டர் கால்டுவெல் 'திராவிடம்' என்னும் சொல் சமஸ்கிருதமொழிச் சொல்லே என்னும் கருத்தை நிலை நாட்டுவதற்குப் பழைய வடமொழி நூல்களிலிருந்து சான்றுகள் பல காட்டியுள்ளார். 'திராவிடம்' என்னும் வடிவமே தமிழ் நிகண்டுகளில் முதன்மையிடம் பெறு கிறது. திராவிடம் என்ற சொல் திரவிடம் என்பதற்கு மாற்றுச் சொல்லாக வராகமிகிரரின் பிரகத் சம்மிதையில்

---

[23] Purnalingam Pillai, M.S. : *Tamil India*, (Kazhagam, Madras, 1968), p.6

[24] Heras, Father, Rev. : 'The Original Name of Proto-Indians' *Proceeding of the Eleventh All India Oriental Langunges Conference*, 1941, pp. 123-137.

வழங்கப்பட்டுள்ளதாக டாக்டர் கெர்ன் என்ற அறிஞர் கூறுகிருர். கி.பி. 1573-ல் தாரநாதர் என்பவரால் எழுதப் பெற்ற 'இந்தியாவில் புத்தமத வளர்ச்சி' என்னும் நூலில், 'திரமிடம்' என்பதே 'திரமிளம்' என்று குறிக்கப்பெற்றுள்ளது. மலையாளமொழிப் புராணங் களிலும் திரமிடம் என்ற வடிவமே காணப்படுவதாக டாக்டர் குண்டெர்ட் என்பவர் தெரிவித்துள்ளார். பாலி மொழியில் எழுதப்பெற்றுள்ள மகாவமிசம் என்னும் நூலில் திரமிளம் என்ற சொல் 'தாமிளோ' என்று வழங்கப்பட்டுள்ளது. [26] இவற்றில் வகரக்கூறு முதன்மை யிடம் பெருமல் மகரக்கூறு முதன்மையிடம் பெற் றிருப்பது 'தமிழ்' என்ற சொல்லிலுள்ள மகரக் கூறேடு அது தொடர்புடையது என்பதைக் காட்டும் என்பது அவர் கருத்தாகும்.

பழந்தமிழ் இலக்கியங்களுள் திராவிடம் என்ற சொல்லாட்சியைக் காண்பது அரிது. தேவாரத்திற்கூட "ஆரியன் கண்டாய், தமிழன் கண்டாய்" [27] என்றுதான் குறிக்கப்பட்டுள்ளது.

யஜுர் வேதத்தில் 'த்ரமிளம்' என்ற சொல் ஆளப் பட்டுள்ளது. வடமொழியில் 'ழகரம்' இல்லை. ழகரம் வரும் தமிழ்ச்சொற்களை வடமொழியாளர் கையாள வேண்டிய நிலை வரும்பொழுது, ழகரத்தை ளகரமாகத் திரித்துச் சொல்லின் முதலில் உள்ள ஓசையில் ழகரத்தோடு இயைபுடைய ரகரத்தைச் சேர்த்துத் திரித்துக் கொள்வது வழக்கம். 'பவழம்' என்ற சொல்லைப் 'ப்ரவாளம்' என்று திரித்துக்கொண் டிருப்பதை இதற்கு ஒரு சான்ருகக் காட்டலாம். இம் முறையில் 'தமிழம்' என்ற சொல்லைத் 'த்ரமிளம்' என்று திரித்துக்கொண்டனர். இதுவே நாளடைவில் 'திராவிடம்' என வழங்கலாயிற்று. இவ்வுண்மையை,

---

[25] Druid

[26] Caldwell, R. : *op. cit.*, *p.*18

[27] தேவாரம் 6 : 23 : 5 (இளமுருகனுர் பதிப்பு, சென்னை, 1953).

| வரிசை எண் | நாடு | காலம் | நூல் அல்லது வழக்காறு | திரைமிலர் என்னும் சொல்லின் திரிந்த வடிவம். |
|---|---|---|---|---|
| 1. | இந்தியா | கி. மு. 1000 | பழைய தமிழின் சொல் தொகுதி. | திரைமிலர் > திரமிலர் > திரமிடர். |
| (1) | (2) | (3) | (4) | (5) |
| | | கி. மு. 100 அளவில். | வடஇந்தியக் கல்வெட்டுக் களிலும். | திரமினர் |
| | | கி. பி. 1573 அளவில். | 'இந்தியாவில் புத்த சமயம்' என்ற தார நாதரின் வரலாற்று நூலிலும். | |
| | | கி. மு. முதல் நூற்றுண்டு முதல் கி. பி. 400 வரை. | மநுதரும சாத்திரம் அதி. 11 ; 43–44 மகாபாரதம். | திராவிடர் |
| | | | (கால்டுவெல் பக். 8–10) | தமிழர் (தமிழைப் பேசுவோர்) |

| | | | | |
|---|---|---|---|---|
| 2. | கிரீஸ் | கி. மு. 484–425 | ஹொரடோடஸ் I, 173 ; VII, ப. 92 | தெர்மிலாய் |
| 3. | ஸ்பெயின் | கி. மு. ஆரும் நூற்ருண்டு | எவியன்ஸ் பெரிபுளுஸ், VIII, ப. 193 | திரேகனஸ் |
| 4. | பிரான்சு | கி. மு. 400–330 | அமியேனஸ் மர்சிலேனஸ் XV, 94 | திரவிடேய் |
| 5. | பிரிட்டிஷ் தீவுகள் | கி. மு. 4ஆம் நூற்ருண்டு | அரேலியஸ் விக்டர் டி. காசேனிபஸ் IV, 2 | திரிஸ்டயே |
| | | கி. மு. 100–44 | சீஸர், டிபெல்லோ காலிகோ | துருய்ட்டே |
| | | | அயர்லாந்திலுள்ள துருயிட் மக்களின் பெயர் | துருவாட் |
| | | | வேல்சிலுள்ள துருய்ட் மக்களின் பெயர் | தெர்வைட் |

டாக்டர் கிரியர்சன் என்னும் அறிஞரும் ஒப்புக் கொண்டுள்ளார்.[28]

'தமிழ்' என்னும் சொல்லுக்கு நேரான சொல்லாக வடமொழியில் 'திராவிட' என்னும் சொல் வழங்கி வருகிறது. அதுவும் நேரடியான திரிபு அன்று. பிரா கிருத (பாகத) மொழியில் கடன் வாங்கப்பெற்றுச் சிதைத்து வடமொழியில் வழங்கப்பட்டதாகும். இக் கருத்தினை 'இந்தியாவில் சமயங்கள்' என்னும் நூலில் கர்மார்கர் என்பவரும் தெளிவுபடுத்தியுள்ளார்.[29]

கலிங்கநாட்டின் சிறப்புமிக்க மன்னனான காரவேலன் கி.மு. 169-ல் ஒரு கல்வெட்டினைப் பொறித்துள்ளான். அது பிராகிருத மொழியில் உள்ளது. அதில் 113 ஆண்டுகளாகத் தமிழக மன்னர்கள் அயலார் படையெடுப்பை எதிர்ப்பதற்கு அமைத்துப் போற்றிய கூட்டணியைத் 'திரமிள தேச சங்காதம்' என்று அவன் குறிப்பிடுகின்றான்.[30] இச் சொல்லாட்சியால் மேலே காட்டப்பட்ட நம்முடிவு வலிவுறுகிறது.

ஏழாம், எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த வடமொழி நூல்களிலும், கல்வெட்டுகளிலும், செப்பேடுகளிலும் திரமிளர் > 'தமிளர்' என்னும் சொல்லாட்சியே பெருவழக்குடையதாக இருந்ததை நாம் காணுகின்றோம். தண்டி என்னும் வடமொழியாளர் இயற்றிய 'அவந்தி சுந்தரி கதை' என்னும் இலக்கியத்தில் தொண்டைநாடு திரமிளதேசம் என்னும் பெயரால் சுட்டப்பட்டிருக் கிறது.[31] இக்குவாகு அரச மரபினருடைய கல்வெட்டு

[28] Grierson, J.A. (Ed.) : *Linguistic Survey of India*, Vol. IV, Munda and Dravidian Languages (Govt. Press, Calcutta, 1906), p.298.

[29] Karmarkar, A.P. : *The Religions of India* : Vol. I; The Vratiya or Dravidian system (Mira Publishing House, Lonavila, 1950), p.vii.

[30] Jayaswal, K.P. : *Imperial History of India* (Munshiram Manoharlal, Delhi, 1969) p.16

[31] Journal of Madras University, Vol. 5, pt.2, pp. 4-6

களில் தமிழரைப் பற்றிய குறிப்பு வருகின்ற இடங்களி லெல்லாம் 'தமிளர்' என்னும் சொல் வழங்கப்பட்டிருக் கிறது.[32]

நந்திவர்ம பல்லவ மன்னனின் உதயேந்திரம் செப்பேட்டில் உள்ள வடமொழி வாசகத்தில் 'திரமிளர்' என்னும் சொல் தமிழரைக் குறிப்பதற்குப் பயன்படுத்தப் பட்டுள்ளது.[33] கி.பி. 7 ஆம் நூற்றாண்டினராகக் கருதப் படும் குமாரிலபட்டர் என்பவர் 'ஆந்திர-திராவிட பாஷா' என்ற சொற்றொடரைப் பயன்படுத்தியுள்ளார்.[34] இதில் 'திராவிட' என்பது தமிழைத்தான் குறிக்கிறது என்பதில் ஐயமில்லை.

குப்தமன்னர் காலத்தில் செப்பம் செய்யப்பட்ட வியாச பாரதத்தில் (சபாபருவம்-இயல் 30) சகாதேவ னால் அடக்கி ஒடுக்கப்பட்ட மன்னர்களாகப் பாண்டியர், திராவிடர், உதரர், கேரளர், ஆந்திரர் என்போர் குறிக்கப் பெற்றுள்ளனர்.[35] இதனைக் கூர்ந்து நோக்கின் திராவிடர் என்பது இடைச்செருகல் என்பது புலனாகும். சாணக்கிய ருடைய அருத்தசாத்திரத்தில் 'பாண்டியர்' என்ற சொல் வருகிறதேயன்றித் திராவிடர் என்ற சொல் இடம் பெறவில்லை.

மனுதரும சாத்திரத்திலும் ஆரிய நெறியிலிருந்து வழுவி, பிராமணரோடு கொண்டிருந்த தொடர்பினை இழந்து, சாதியிலிருந்து வெளியேற்றப்பட்ட சத்திரியர் பட்டியல் ஒன்று தரப்பட்டுள்ளது. அப்பட்டியலில் யவனர், சீனர், பஹ்லவர், பாரதர் முதலானவருடன் திராவிடரும் குறிக்கப்பெற்றுள்ளனர்.[36]

---

[32] Epigraphica Indica, Vol. 20, pp. 22-23
[33] *S.I.I.*, Vol. II, p. 508
[34] Caldwell, R. *op. cit.*, p.4
[35] Mookerji, R.K. : *The Fundamental Unity of India* (Bharatiya Vidhya Bhavan, Bombay, 1954), pp. 75-76.
[36] *Ibid*, p.78

கி.பி. ஆரும் நூற்ருண்டின் இடைப்பகுதியினராகக் கருதப்படும்[37] வராகமிகிரனுடைய பிரகத் சம்மிதை என்னும் நூல் இந்தியநாட்டை 9 பெரும்பிரிவுகளாகப் பிரித்து, அவற்றிலுள்ள அரசர்களைப் பற்றியும் மக்க ளினங்களைப் பற்றியும் கூறிவருங்கால் 'திரமிடம்' என்ற நாடு இந்தியாவில் தென்மேற்குப் பகுதியில் உள்ளதாகப் பேசுகிறது.

மேற்காட்டப்பெற்ற சான்றுகள் யாவும் 'திராவிடம்' என்ற வழக்கு காலத்தால் மிகப் பிற்பட்டது என்பதைக் காட்டுவதோடு 'திராவிடம்' என்ற வடமொழிச்சொல் திரிந்தே 'தமிழ்' என்னும் சொல் தோன்றியது என்று கூறும் கால்டுவெல் கருத்தின் பொருத்தமின்மையைப் புலப்படுத்துகின்றன. 'தமிழ்' என்னும் சொல் மலையா ளத்தில் 'தமிழ்' என்றும், தோடர் மொழியில் 'தொபிள்' என்றும், கன்னடத்தில் 'தமிள' 'தம்பள' என்றும், துளுவமொழியில் 'தமுளு' 'தம்புரு' என்றும் திரிந்து வழங்கிவருவது[38] தமிழ் என்னும் சொல்லே 'திராவிடம்' எனத் திரிந்தது என்னும் கருத்தை வலியுறுத்து கின்றது. திராவிடம் என்ற சொல் திரிந்து தமிழ் என்று வழங்கியிருக்குமாயின், மேற்கண்ட சொற்களில் வகரக்கூறு இடம்பெற்று மகரக்கூறு இல்லாதிருக்க வேண்டுமன்ருே?

கி.மு. 1500 அளவில் இருந்ததாகக் கொள்ளும் படியான 'திரமிழ' என்னும் அடிச்சொல்லிலிருந்து தமிழில் வழங்கும் 'தமிழ்' என்னும் சொல்லும், வட மொழியில் வழங்கும் 'திரமிடம்' 'திரவிடம்' என்ற சொற் களும் திரிந்திருக்கலாம் என்று டாக்டர் எஸ். கே. சாட்டர்ஜி கருதுகிருர்.[39] இவரது கருத்துக்குச் சமஸ்கிருத

[37] Macdonell A.A. : *A History of Sanskrit Literature* (Munshiram Manoharlal, Delhi, 1958), p.318

[38] Burrow, T. & Emeneau, M.B., *A Dravidian Etymological Dictionary* (O.U.P. London, 1966), p. 199

[39] Chatterji, S.K. : *Dravidian* (Annamalai University, 1965), p.34

நூல்களே துணை நிற்கவில்லை. யஜுர் வேதத்தின் காலம் முதற்கொண்டு பிரகத் சம்மிதை காலம்வரையிலுள்ள எல்லா வடமொழி நூல்களிலும் 'திரமிள' என்ற சொல்லாட்சி காணப்படுகிறதே அன்றித் 'திரமிட' என்ற வழக்கு இல்லை. எனவே, நாம் முன்பு கண்டவாறு 'தமிழ்' என்பதே 'திராவிடம்' எனத் திரிந்தது என்று கூறலாம்.

கால்டுவெல் அவர்கள் திராவிடமொழிகள் என்று தமிழ், தெலுங்கு, கன்னடம் முதலான மொழிகளை யெல்லாம் தொகுத்துச் சுட்டுகிறார். அவ்வாறு தாம் சுட்டுவதற்கு வடவர் அவ்வாறு கருதியதாகக் காரணம் கூறுகிறார். அவர் கூறுவது பொருத்தமற்றதாகும்.[40]

மேலே நாம் காட்டிய வடமொழி இலக்கியச் சான்று களிலெல்லாம் தமிழையும், தமிழரையும், தமிழகத்தையும் தெளிவாகக் குறிக்கும் இடங்களிலேயே 'திராவிடம்' என்னும் சொல் ஆளப்பெற்றிருப்பதை நாம் கருத்தில் கொள்ளுதல் வேண்டும். கி. பி. 8ஆம் நூற்றாண்டினரான ஆதிசங்கரர் தம்முடைய 'சௌந்தர்யலகரி' என்னும் நூலில் திருஞானசம்பந்தரைத் 'திராவிட சிசு' (செய். 75) என்று குறிப்பிட்டுள்ளமை இக்கருத்தை அரண்செய்கிறது.

வடமொழி நூலார் தமிழை ஒரு பிராகிருதமாகக் கருதி அதன் எழுத்து வடிவத்தைத் 'திராவிடி' என்ற பெயராலேயே சுட்டியுள்ளனர்.[41]

'லலித விஸ்தாரம் என்னும் பௌத்த சமய நூல் அறுபத்து நான்கு வகையான எழுத்து முறைகளைக் குறிப்பிடுகின்றபொழுது 'திராமிளி' என்றும், 'தாமிழி' என்றும் தமிழெழுத்து முறையைச் சுட்டுகிறது.[42]

---

[40] Caldwell, R. : *op. cit.*, p.6

[41] *Ibid*, p. 5

[42] நாகசாமி, இரா. : கல்வெட்டுக் கருத்தரங்குக் கட்டுரை கள் (தமிழகத் தொல்பொருளியல் துறை வெளியீடு, சென்னை, 1968), பக். 52

கிறித்துவ நூற்றாண்டிற்குமுன் தமிழிலன்றிப் பிற தென்னிந்திய மொழிகளில் இலக்கியம் இல்லாததால் தமிழ் எழுத்தையே 'திராவிடி' என்றும், 'திராமிளி' என்றும் வடநாட்டவர் சுட்டியிருத்தல் வேண்டும் என்னும் உண்மையை மேலே குறிப்பிட்ட கருத்துகள் வலியுறுத்துகின்றன.

'திரமிடம்' அல்லது 'திரவிடம்' என்னும் சொல் திராவிட மக்கள் பேசும் பல மொழிகளைக் கொண்ட திராவிடமொழிக் குடும்பத்தைக் குறிக்கவில்லை. மாறாக, தமிழரின் மூதாதையர் பேசிய மொழியையே அது சுட்டியது என்று டாக்டர் எஸ். கே. சாட்டர்ஜி மொழிந்துள்ளார்.[43] இதனால் அது பழந்தமிழையே குறிக்கிறது என்பதை உணரலாம்.

கி. பி. 470ஆம் ஆண்டில் வச்சிரநந்தி என்னும் சமணர் மதுரை மாநகரில் நிறுவிய தமிழ்ச் சங்கத்தைத் 'திரமிள சங்கம்' என்று பிராகிருத, வடமொழி நூல்கள் குறிப்பிடுவதும்,[44] திருவாய் மொழியைத் 'திராவிட வேதம்' என்று கூறும் மரபும், தமிழ் இலக்கணத்தைத் 'திராவிட சாஸ்திரம்' என்று திவ்வியப் பிரபந்த உரையாசிரியர் பிள்ளை லோகாச்சாரியார் குறிப்பிடுவதும்,[45] பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த தாயுமானவர் தமிழைத் 'திராவிடம்' என்றே குறிப்பிட்டுள்ளமையும்[46] நமது கருத்தினை அரண்செய்கின்றன.

இனி வெளிநாட்டார் தமிழகத்தைச் சுட்டியுள்ள முறையினைக் காண்போம்.

---

[43] Chatterji, S.K. : *op. cit.*, pp. 34-35

[44] Srinivasa Iyangar, P.T. : *History of the Tamils* (C. Coomaraswamy Naidu & Sons : Madras, 1929), p.247, f.n.

[45] பெரிய திருமொழிச் சிறப்புப்பாயிரம்—உரை, பகவத் விஷயம், பாகம் 2, (கிரந்தமாலா வெளியீடு, காஞ்சிபுரம், 1954).

[46] "வல்லா னொருத்தன்வர வந்த்ரா விடத்திலே
வந்ததா விவரிப்பேன்"

தாயுமானவர் திருப்பாடல்கள்
(கழகப் பதிப்பு, சென்னை, 1966), 7 : 10

| தமிழ் வழக்கு (1) | பிறநாட்டார் வழக்கு (2) | காலம் (3) | குறிப்பிட்டவர் (4) |
|---|---|---|---|
| தமிழகம் | தமிரிகெ[47] | கி. மு. 2ஆம் நூற்றாண்டு | கிரேக்கர்[48] |
| தமிழகம் | தமிரிசி | கி. பி. முதல் நூற்றாண்டு | ரோமானியர்[49] |
| தமிழகம் | தமிரிக்கா[50] | கி. பி. முதல் நூற்றாண்டு | ரேவண்ணு உலக நூல் ஆசிரியர்[51] |
| தமிழகம் | தமிரிகா[52] | கி. பி. 75 | செங்கடற் பயணக் கையேடு[53] |
| தமிழகம் | தமிரிகே[54] | கி. பி. 140 | தாலமி (கிரேக்கர்)[55] |
| தமிழ் | தெகி-மொ-லோ[56] | கி. பி. ஏழாம் நூற்றாண்டு | யுவான்சுவாங் (சீனர்)[57] |
| தமிழ்மொழி | தமுளிக்கா மொழி[58] | கி. பி. 16ஆம் நூற்றாண்டு | இடைக்கால ஐரோப்பியர்[59] |

47 Damirike

48 Smith, V.A. : *The Early History of India*, (O.U.P. London, 1912), p.439

49 Schoff (Ed.) : *Periplus of the Erythrean Sea* (N.Y. 1912), p. 57.

50 Damirica

51 Warmington, E.H. : *Commerce between the Roman Empire and India*, (Cambridge, 1928), pp. 114-115.

52 Tamirica

53 Nilakanta Sastri, K. A. : *Foreign Notices of South India* (University of Madras, 1972), pp. 7 & 56.

54 Damirike

55 Warmington, : *op. cit.*, pp. 114-115

56 Tehi-mo-lo

57 Nilakanta Sastri, K.A., *op. cit.*, p. 102

58 Lingua Tamulica

59 Caldwell, R. : *op. cit.*, p.10

இவ்வட்டவணை மேலைநாட்டார் பண்டைக்காலத்தில் தமிழகத்தைத் தமிழகம் என்னும் பெயராலேயே அறிந்திருந்தனர் என்பதைத் தெரிவிக்கின்றது.

'தமுளியன்' என்பதுதான் முதன்முதலில் தமிழ்க் குடும்ப மொழிகளுக்குக் கொடுக்கப்பட்ட பெயராகும் என்றும், தமுளியன் என்பதன் பண்டைய வடிவம் 'திராமிட', 'திராவிட' என்று சமஸ்கிருத மொழியாளருக்கு அறிமுகமாகியிருந்தமையால் அதைக் குழுவின் பெயராக வழங்க வசதியாக இருக்குமென்று கருதிக் கால்டுவெல் எடுத்துக்கொண்டார் என்றும் ஜுலே பிளாக்கு கூறியுள்ளமை இங்குக் கருதத்தக்கது.[60]

இக்காலத்து அறிஞர்களால் 'திராவிட' என்னும் சொல் விரிவுபடுத்தப்பட்டுத் தென்னிந்திய மக்கள் அனைவரையும் சுட்டும் இனப் பொதுப்பெயராக ஆளப்பட்டு வருகின்றது.[61]

தமிழரையே பண்டைக் காலத்தில் திராவிடர் என்னும் பெயரால் வடமொழியாளர் சுட்டினர் என்பதும், கால்டுவெல்லே முதன்முதல் தமிழோடு இனத் தொடர்புடைய மொழிகளைப் பேசும் தென்னிந்தியரை விரிவான பொருளில் 'திராவிடர்' என்னும் பெயரால் குறிப்பிட்டார் என்பதும், தமிழ் என்னும் மொழிப்பெயரின் திரிபை அடிப்படையாகக் கொண்டே 'திராவிடர்' என்னும் இனப்பெயர் எழுந்தது என்பதும் இவ்வாய்வினால் இனிது புலனாகும்.

## 3. உடற்கூற்றியல்வழி இனப்பாகுபாடு

தமிழகத்தின் இனமரபு வரலாற்றினை இதற்கு முன்னர் ஆய்ந்த ஆங்கிலப் பெருமக்களெல்லாம் இந்தி

---

60 Bloch, Jules: *The Grammatical Structure of the Dravidian Languages*, (Deccan College, Poona, 1954), p.xxvi.

61 Ramachandra Dikshitar, V. R.: *Pre-Historic South India* (University of Madras, 1951), p.203

யாவை ஒட்டுமொத்தமாகக் கொண்டே ஆய்ந்துள்ளனர். அவர்களது ஆய்வுரைகளில் தமிழகத்தில் வாழும் மக்களைப் பற்றிய செய்திகள் சில இடம் பெற்றுள்ளன. அவை சிறிய அளவில் கிடைப்பனவாயினும் அறிவியலின் அடிப்படையில் ஆயப்பட்டமையின், அவற்றை நாம் முதலில் காணவேண்டிய நிலையில் இருக்கின்றோம். திராவிடரும் வெளிநாட்டிலிருந்து வந்தவர்களே என்ற கொள்கையின் அடிப்படையிலேயே அவர்களுடைய ஆய்வு பெரிதும் நடத்தப்பட்டிருக்கிறது. இவ்வுண்மையைக் கருத்தில் கொண்டு அவர்களது முடிவுகளை நாம் சீர்தூக்கிப் பார்ப்போம்.

இனமரபு ஆய்வில் நிலையான தொழில்நுட்ப அளவுகோல் ஒன்றும் திட்டவட்டமாகப் பயன்படுத்தப்படவில்லை. அன்றியும் மனிதனுடைய பல்வேறு உடற்கூற்று இயல்புகளின் இனச்சிறப்புப் பண்புகளை வரையறுக்கும் முறையும் போதிய அளவிற்கு வளர்ச்சியடையவில்லை. இவ்விரு காரணங்களால் இனமரபியல் ஆய்வாளர்கள் பலதிறப்பட்ட கொள்கைகளைக் கொண்டுள்ளனர்.

கி. பி. 1867-ல் லேசன்[62] என்னும் பெரியார் இந்தியாவில் இரண்டு பெரிய இனங்களைச் சேர்ந்த மக்கள் வாழ்ந்துவருவதாக விளக்கினார். அவர் கருத்துப்படி வட இந்தியாவிலும் தென்னிந்தியாவில் வட எல்லையோரத்திலும் ஆரியர்கள் வாழ்ந்துவருகின்றனர். எஞ்சிய தெற்குப் பகுதியில் நிசாதர் என்னும் மக்கள் வாழ்ந்து வருகின்றனர். இவ்வாறு பாகுபாடு செய்த இவ்வறிஞரே இந்தியாவிலுள்ள மக்களை ஆரியர், திராவிடர் (திராவிட நிசாதார்), விந்தியக் குழுவினர் (விந்திய நிசாதார்) என்று மூன்று வகையாகவும் வகைப்படுத்துகிறார்.

டோபினார்ட்[63] என்னும் மானிடவியல் நூலார் இந்தியாவில் கறுப்பு நிறத்தவர், மங்கோலியர், ஆரியர் என்னும் மூவகை இன மக்கள் வாழ்ந்துவருவதாகத்

---

[62] Lassen
[63] Topinard

தெரிவித்துள்ளார். இந்தியாவின் மையப்பகுதியிலுள்ள மலைகளில் வாழும் பில்லர், கோந்துகள், கோண்டர் போன்றோரும், தென்னிந்தியாவில் வாழும் ஏறுதியர், மறவர், குறும்பர், வேடர் போன்றோரும் கறுப்பு நிறத்தவ ரானவர் என்பது இவருடைய துணிபாகும்.

1910-ல் நடைபெற்ற இந்தியக் குடிமக்கள் கணக் கெடுப்பை மையமாகக் கொண்டு சர் ஹெர்பர்ட் ரிசிலி என்பவர் முதன்முதலாக மனித உடல் அளவை[64] ஆராய்ச்சியின் மூலம் இந்தியாவில் மூவகை இனத்தைச் சேர்ந்தவர் வாழ்ந்துவருவதாகக் கண்டறிந்து, அவற்றை வகைப்படுத்துங்கால் 7 குழுக்களாகப் பாகுபடுத்தி யுள்ளார்.

1. வட இந்தியாவில் பேரளவில் காணப்படும் இந்திய ஆரிய மக்களின் அமைப்பு.

2. தென்னிந்தியாவில் முதன்மையாகவுள்ள திராவிட மக்களின் அமைப்பு.

3. இமயமலைப்பகுதி, நேபாளம், அஸ்ஸாம் முத லான பகுதிகளில் சிறப்புற்று விளங்கும் மங்கோலிய மக்களின் அமைப்பு என்பன முதன்மையான இந்திய இனங்களாகும்.

இவற்றுள் ஒன்று மற்றொன்றுடன் கலந்தமையால் உண்டான துணையினங்கள் நான்கு. அவை: (1) ஆரிய–திராவிடர், (2) மங்கோலிய–திராவிடர், (3) சித்திய–திராவிடர், (4) துருக்கிய–இரானியர். இவ் வகையில் மொத்தம் ஏழு இனங்கள் இந்தியாவில் இருப்ப தாக அவர் கூறுகிறார்.[65]

ரிசிலிக்குப் பிறகு மானிடவியல் நூலார் பலர் இந்திய மக்களைப் பாகுபடுத்தும் பணியை மேற்கொண் டனர். அவர்களுடைய பாகுபாடு திட்டவட்டமாகவோ,

---

[64] Anthropometry

[65] Risley, H.H. : '*The People of India*', pp.28-41; in *Census Report* (1901) Vol. I, Pt. IV, pp. 16-40

சரிநுட்பமாகவோ, தெளிவாகவோ, அறிவியல் முறைப் படியோ அமையவில்லை.

## ஹேடனின் பாகுபாடு

நிலவியல் அடிப்படையில் இந்தியாவை ஹேடன் முப்பெரும் பகுதிகளாகப் பிரித்துள்ளார். அவை இமய மலைப்பகுதி, வட இந்திய ஆற்றுவெளிக் காடுகள், அடர்ந்த தெற்கத்திய மேட்டுநிலங்கள் என்பனவாகும். அப்பகுதிகளில் வாழும் மக்களை அவர் பின்வருமாறு வகைப்படுத்தியுள்ளார்.

### (அ) இமயமலைப் பகுதி

1. இந்திய-ஆரியர் (திபெத்தியக் குருதிக் கலப்புடன் காணப்படும் கீழைப் பஞ்சாப்பு மக்கள்.)

2. மங்கோலிய கலப்பு (நேபாளத்திலும் மற்றும் உயர்ந்த இமயமலைப் பகுதிகளிலும் வாழும் மக்கள்.)

### (ஆ) வட இந்தியச் சமவெளி

இந்திய – ஆப்கானியச் சமவெளியில் காணப்படும் முதன்மையான இனக்கூறு. (ஜாத்துகளும் இராச புத்திரர்களும் இவ்வின மரபைச் சேர்ந்தவர்கள்.)

### (இ) தக்கணம்

தக்கணத்தில் வாழும் முதன்மையான மக்கள் கூட்டத்தினரைத் 'திராவிடர்' என்னும் சொல்லால் ஹேடன் சுட்டுகிறார். தக்கணத்தில் பல இனக் கூறுகள் இருப்பதை அவர் கீழ்க்காணுமாறு பாகுபடுத்தியுள்ளார்.

1. நீக்கிரிட்டோக்கள் - (ஐயுறவிற்குரிய வகையில் இவ்வினக்கூறு காடர்களிடத்தில் காணப்படுவதாகச் சொல்கிறார்.)

2. திராவிடருக்கு முற்பட்டோர் - (சந்தலரும், முண்டரும் சிறந்த சான்று என்கிறார்.)

3. திராவிடர் - (தமிழ்ப்பார்ப்பார், மலபார், கொச்சி, திருவாங்கூர் பகுதிகளில் வாழும் மக்கள், ஆகியோர் இக் குழுவில் சேர்க்கப்பெற்றுள்ளனர்.)

4. தெற்கத்திய குறுந்தலையர்[66] (தமிழ் நாட்டின் பறை யரும் திருநெல்வேலி மாவட்டத்து மீனவரான பர வரும் இக்கூட்டத்தில் சேர்க்கப்பட்டுள்ளனர்.)

5. மேற்கத்திய குறுந்தலையர் - (நாகர், பிராமணர், கூர்க் மக்கள் முதலானோர்.[67] இப்பிரிவில் தோடர்கள் முறைதவறாகச் சேர்க்கப்பட்டுள்ளனர்.)

ஏக்ஸ்டெட்டின் பாகுபாடு

1926–29ஆம் ஆண்டுகளில் ஜெர்மானிய - இந்திய மானிட இயல் வல்லுநர்குழு ஒன்று இந்நாட்டில் முறை யான இனமரபியல் ஆய்வினை மேற்கொண்டது. அக் குழுவிற்கு ஏக்ஸ்டெட்டு[68] என்பவர் தலைவராக விளங்கி னார். உடற்கூற்றியல், பண்பாட்டியல் என்னும் இருதிற அடிப்படையில் இந்திய மக்களை நாற்பெரும் பிரிவு களாக அவர் பாகுபடுத்தினார்.

1. வேடர்[69] அல்லது தொல்பழங்கால இந்தியர்: இவர்கள் சிங்களமொழியில் 'வெட்டர்' எனப் பெயர் பெற்றுள்ளனர்; காடுகளில் வாழும் நாகரிகமடையாத பழங்குடி மக்கள். இவ்வினத்தை இருவகையாக அவர் பிரித்துள்ளார்.

(அ) கோந்தியர்[70]: இவர்கள் கருமையான பழுப்பு நிறத்தினர்; சுருட்டை மயிரினர்; குலமரபுச் சின் னம் உடையவர்; மண்வெட்டி பயன்படுத்தும் பண் பாட்டினர். தாய்வழிச் செல்வாக்குடையவர். இக்

---

66 Brachy-cephals

67 Haddon, A.C.: *The Wanderings of People* (O.U.P.; Cambridge, 1912), pp. 20-34

68 Eickstedt

69 Weddid

70 Gondid

குழுவில் ஒரோவானியரும் கோந்த் பழங்குடி மக்க ளும் சேர்க்கப்பட்டுள்ளனர்.

(ஆ) மாலிட்டியர்[71]: இவர்கள் கரிய பழுப்பு நிறத் தோடு கூடிய சுருட்டை மயிரினர்; தொடக்கத்தில் தொன்மைப் பண்பாடுடையவராவர்; பின்னர் வெளிநாட்டுப் பண்பாட்டுச் செல்வாக்கிற்கு அடிமையானவர். இக்குழுவில் குறும்பர், வேடர்[72] முதலானோரைச் சேர்த்துக் கூறுகிருர்.

2. மெலனிட்டியர்[73] அல்லது கறுப்பு இந்தியர். இது கலப்பு மிக்க குழு. இதை இரண்டு வகையாகப் பாகு படுத்துகிருர்.

(அ) தெற்கத்திய மெலனிட்டியர்: இவர்கள் கருமை கலந்த பழுப்பு நிறத்தவர். இந்தியாவில் தென் கோடிச் சமவெளியில் வாழ்பவர். தாய்வழியுரிமை யின் செல்வாக்கினை ஏற்றுக்கொண்டவர். ஏனதியர் இக் குழுவைச் சேர்ந்தவராவர்.

(ஆ) கோலிட்டியர்[74]: இவர்கள் தக்கணத்தின் வட பகுதியில் உள்ள காடுகளில் வாழும் பழங்குடி மக்கள்; கருநிறங் கலந்த பழுப்பு நிறத்தவர்; குல மரபுச் சின்னத்தில் தீவிரமான ஈடுபாடுடையவர். சந்தலர், முண்டர்கள் இக்குழுவைச் சேர்ந்தவர்.

3. இந்தியர்[75] அல்லது புதிய இந்தியர்: இவர்கள் திறந்த வெளிகளில் வாழும் மக்களைக் காட்டிலும் இன அடிப்படையில் முற்போக்கான நாகரிக வளர்ச்சி யுள்ளவர். இவர்களை இருவகையாகப் பாகுபடுத்தி யுள்ளார்.

---

[71] Malid
[72] Veddah
[73] Melanid
[74] Kolid
[75] Indid

(அ) வலிவற்ற இந்தியர்[76] : இவர்கள் மெலிந்த தோற்ற முடைய பழுப்புநிற மக்கள் ; தந்தைவழி உரிமை யைக் கட்டாயப்படுத்தியவர் ; வங்காளிகள் இவ் வகையைச் சேர்ந்தவர்.

(ஆ) வட இந்தியர் : இவர்கள் இளம்பழுப்பு நிறத் தினர் ; தந்தைவழி மரபுரிமைத் தலைமைப் பதவி யாளராகத் தொடக்கத்தில் இருந்திருக்கலாம். தோடர், இராசபுத்திரர் போன்றோர் இவ்வகையைச் சேர்ந்தவர்.

4. பழைய மங்கோலிய கலப்பினர் : வைநாட்டில் உள்ள பழையன் இனத்துப் பழங்குடி மக்கள் இப் பிரிவினர் எனலாம்.[77]

இவ்வாராய்ச்சிகள் யாவும் முழுமையாகச் செய்யப் பெறுதலோடு முழு நிறைவு உடையதாகவும் அமைய வில்லை. நடைமுறையில் காணப்பெறும் உண்மை நிலைக்கு மாறுபட்ட வகையில் இவற்றின் பாகுபாடுகள் செய்யப்பெற்றுள்ளன. இக்காரணங்களால் நாளடைவில் இக்கருத்துகள் வலிவும் பொலிவும் இழந்துவிட்டன. ஆயினும், இவற்றிலிருந்து ஓர் உண்மையை நாம் உய்த்துணர முடிகிறது. 'திராவிட இனம்' என்பது பெரிதும் தென்னாட்டோடு தொடர்புடையதாகவே மக்களினமரபியல் ஆராய்ச்சியாளர்களால் கருதப்படு வதை நாம் மேற்கண்ட இந்திய இனப்பாகுபாடுகளால் அறிகிறோம்.

## ஹட்டனின் பாகுபாடு

1933ஆம் ஆண்டில் ஜே. எஸ். ஹட்டன் என்பவர் மிக விரிவான திட்டத்தின் அடிப்படையில் மானிட வியலிலும், இனமரபியலிலும் உண்டாகியுள்ள வளர்ச்சி களையும் புதுமைப் போக்குகளையும் கருத்தில் கொண்டு இந்தியக் குடிமக்களின் கணிப்பைத் தொடங்கினார்.

---

[76] Gracile Indid

[77] Mamoria, C.B. : *Tribal Democracy in India*, pp.5–7

இனத்திற்கும் மொழிக்கும் பண்பாட்டிற்கும் இடையே யுள்ள தொடர்புகளையும் கிளையுறவுகளையும் அவர் நுட்பமாக ஆராய்ந்துள்ளார். அதன் பயனாக, 'இந்தியாவில் வாழும் மக்கள் எல்லாருமே வெளிநாடுகளிலிருந்து வந்தவர்' என்னும் முடிவிற்கு அவர் வந்தார். ஹட்டன் இந்திய மக்களை எண் வகையாகப் பாகுபடுத்தியுள்ளார். அவை வருமாறு :

1. நீக்கிரிட்டோக்கள் : ஆப்பிரிக்காவிலிருந்து வந்த குறுகிய தலையையுடையவர் நீக்கிரிட்டோக்கள். இவர்கள் இந்தியாவிற்கு வந்த மிகப்பழைய மக்களாவர்; இப்பொழுது அந்தமான் தீவுகளிலும் (அங்குத் தங்கள் மொழியைப் போற்றிக் காத்துவருகின்றனர்), மலேயாவிலும் வாழுகின்றனர். அஸ்ஸாமிலுள்ள நாகர்களிடத்திலும், தென்னிந்தியாவில் குறிப்பிட்ட சில பழங்குடி மக்களிடத்திலும் இவ்வினக்கூறுகளைக் காணலாம்.

2. ஆஸ்திரிக்குகளின் மூதாதையர்[78] : இவர்கள் கரிய நிறத்தினர்; நீண்ட தலையோட்டினர்; அகன்ற மூக்கினர்; நடுநிலக்கடல் இனத்தவரின் ஆதி கிளையினர்; கீழை நடுநிலக்கடல் பகுதியிலிருந்து (பாலஸ்தீனம்) இந்தியாவிற்கு வந்தவர்.

3. ஆதி நடுநிலக்கடல் இனத்தவர்[79] : இவர்கள் நீண்ட வட்டவடிவத் தலையோட்டினர்; குறுகிய மூக்கினர்; ஆஸ்திரிய மொழியின் ஆதி வடிவங்களைக் கொண்டு வந்தவர்.

4. நாகரிக முதிர்ச்சியுள்ள நடுநிலக்கடல் இனத்தவர் (திராவிடர்) : இவர்கள் நீண்ட வட்டவடிவமான தலையோட்டினர்; குறுகிய மூக்கினர்; இந்தியாவில் 'திராவிடர்' என்னும் பெயர் உடையோர்.

5. அர்மிநொய்ட்டுகள்[80]: இவர்கள் நிலையான அல்பைன்ஸ் இன மக்களின் தனித்திறன் மிக்க கிளை இனத்தவர்;

[78] Proto-Australoid
[79] Early Mediterranean
[80] Armenoid

குறுகிய தலையோட்டினர்; நாகரிக முதிர்ச்சியுள்ள நடு நிலக்கடல் இனத்தவரோடு (திராவிடரோடு) இந்தியா விற்கு வந்திருக்கலாம்; அவர்களுடைய மொழியைப் பேசியிருக்கலாம்.

6. அல்பைனர்[81]: இவர்கள் குறுகிய தலையோட்டினர்; குஜராத்திலும், வங்காளத்திலும் காணப்படுகின்றனர்; வேதகால ஆரியருக்கு முற்பட்டவர்; ஆரியக் கிளைமொழி களைப் பேசியிருக்கலாம்.

7. நார்டிக்குகள்[82]: இவர்கள் வேதகால ஆரிய இனத்தவர்; குறுகிய மூக்கும் அகன்று நீண்ட தலை யோடும் உடையவர்; வேதகால ஆரியமொழியை (சமஸ் கிருதம்) இந்தியாவிற்குக் கொண்டுவந்தவர்.

8. மங்கோலிய பழங்குடிகள்[83]: இவர்கள் குறு கிய மண்டையோட்டினர்; இந்தியாவின் வடஎல்லைக் கோடியிலும் கிழக்கு எல்லை ஓரத்திலும் வாழும் இனத் தவர்[84].

இப்பாகுபாடும் ஓரளவிற்கு உண்மைக்கு முரண் பட்ட நிலையில் அமைந்துள்ளதைக் காணலாம். ஒரு சில குழுக்களுள் அடக்கிவிடக்கூடிய இனங்களை மிகைப் படுத்திப் பல்வேறு இனங்களாக ஹட்டன் பாகுபாடு செய்துள்ளார். மேற்கண்ட பகுதியை ஒரு முறை நோக்கினாலே நாம் இதை எளிதில் உணரலாம்.

குகாவின் பாகுபாடு

இந்திய மானிடவியல் மதிப்பீட்டுத் துறையின் இயக்குநராகச் சிறப்புற்று விளங்கியவர் பி. எஸ். குகா. இவரும் இந்திய மக்களுடைய இனப்பண்பாட்டைப்பற்றி

---

[81] Alpines
[82] Nordics
[83] Mongoloids
[84] Hutton, J.H. : - *Census of India*, Vol.I, Pt.III (Government Press, Calcutta, 1931), 'Ethnographic survey of India', pp. 424 ff

ஆராய்ந்து சில சிறந்த முடிவுகளை உலகிற்கு அளித்துள்ளார். இந்திய மக்களை ஆறு முதன்மையான இனங்களாகவும், அவற்றோடு தொடர்புடைய பதினேரு துணை வகைகளாகவும் அவர் வகைப்படுத்தியுள்ளார். அவை,

(1) நீக்கிரிட்டோக்கள்.

(2) ஆஸ்திரிக் மக்களின் மூதாதையர்.

(3) மங்கோலிய பழங்குடியினர். இவர்களுள் பண்டைய மங்கோலியர், திபெத்திய மங்கோலியர் என்ற இருவகையினர் உள்ளனர்.

(4) நடுநிலக்கடல் இனத்தவர். இவர்களுள் பண்டைய நடுநிலக்கடல் இனத்தவர், நடுநிலக்கடல் இனத்தவர், கீழைநாடுகளில் உள்ள 'நடுநிலக்கடல் இனத்தவர்' என்னும் மூவகையினர் உள்ளனர்.

(5) மேற்கு நாட்டுக் குறுகிய தலையுடைய இனத்தவர். இவர்களுள் அல்பைனர், தினரிக்குகள், அர்மினெய்டுகள் என்னும் மூன்று பிரிவுகளுண்டு.

(6) நார்டிக்குகள் (ஆரியர்)[85].

இப்பாகுபாட்டினுள் நடுநிலக் கடற்பகுதிக்குரிய பண்டை மக்களுள் திராவிடர் இனத்தை அவர் அடக்கிக் காட்டியுள்ளார்.[86]

குகா அவர்களின் பாகுபாடே இன்று இனமரபியல் ஆய்வாளர்களால் சிறப்பு மிக்கதாகப் போற்றப்படுகிறது. எனினும், ஓர் உண்மையை நாம் இவ்விடத்தில் நினைவு கூரக் கடமைப்பட்டுள்ளோம்.

---

[85] Guha, B.S. : '*The Racial Affinities of the People of India*' in *Census Report of India*, Vol. I. Pt.3 (1931), pp. ix–xi.

[86] Guha, B.S. : *Racial Elements in the population*, *Oxford Pamphlets*, No.22, (Bombay, 1944), p.17

இந்தியாவில் உள்ள தொல்பொருள் அகழ்வாராய்ச்சிச் சின்னங்களில் கிடைத்துள்ள ஆதிமனிதனின் மண்டை ஓடுகள் விரல்விட்டு எண்ணக்கூடியனவாக உள்ளன. இவ்வாறு அரப்பா, மொகஞ்சொதாரோ, தக்கசீலம், ஆதிச்சநல்லூர், மாஸ்கி, செங்கற்பட்டு முதலான இடங்களில் கிடைக்கப்பெற்ற குறைந்த அளவுச் சின்னங்களை நாம் நுட்பமாகவும், செம்மையாகவும், முழுமையாகவும் இன்னும் ஆராய்ந்துபார்க்கவில்லை. மேலும் தொல்பொருளியல் ஆய்வினரும் இனமரபியல் வல்லுநரும் நன்முறையில் ஒருங்கிணைந்து பணிபுரியவில்லை. இந்நிலையில் குறுகிய வரையறைக்குட்பட்ட நிலையிலேயே இனமரபியல் ஆராய்ச்சியை நாம் நடத்தவேண்டியுள்ளது. செம்மையான ஆய்வுமுடிவுகள் வெளிவருமானால் இனமரபியல் பற்றிய நம்முடைய கருத்துகளை நாம் மாற்றிக்கொள்ள நேரலாம்.

டாக்டர் குகா ஈறுக இந்திய மக்களை இனவழிப் பாகுபாடு செய்த இனமரபியல் அறிஞர்கள் யாவருமே இந்திய மக்களினத்தை வெளிநாடுகளிலிருந்து வந்தவர்களாகக் கொள்வதிலேயே நாட்டம் உடையவர்கள். இது குறித்து 35 ஆண்டுகளுக்கு முன் சர் ஆர்தர் கீத் என்பவர் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். இந்திய மக்களினத்தை ஆராய்ந்த எல்லாருமே இந்திய மக்களின் இனச்சிக்கலைத் தீர்ப்பதற்கு இந்திய முந்நீர் நிலத்திற்கு வெளியே இருந்த பழங்குடி மக்களைக் கொண்டு விளக்கம் பெறமுயல்வது வியப்பாக உள்ளது என்றும், எத்துணை அளவிற்கு இந்தியா தன்னுடைய மக்களினங்களைப் போற்றி வளர்த்துள்ளது என்பதைக் கண்டறிய அவர்கள் என்றுமே முயலவில்லை என்றும், நெடுங்காலத்திற்கு முன் நெடுந்தொலைவிற்கு அப்பால் இருந்த இனமே இங்கு வந்து வளர்ச்சியுற்றது என்னும் கற்பிதத் தற்கோளோடு அவர்கள் ஆராய்ந்தனர் என்றும் கீத் வருத்தத்துடன் தெரிவிக்கின்றார்.[87]

[87] Keith, Arthur: Review of B. S. Guha's '*Racial Affinities of the peoplé of India*', *Census of India*, 1319, (Delhi, 1933) I, 3, in '*Man*' (London), No.29 (1936).

அவருடைய கருத்துகளை மனத்திற் கொண்டு இனமரபியல் ஆராய்ச்சியில் ஈடுபடுவோமானால் பல புதிய உண்மைகள் வெளிப்படலாம்.

## 4. தமிழகத்தின் பண்டைய இனங்கள்

மேலே கண்ட இந்திய இனப்பாகுபாட்டைச் சற்றுக் கூர்ந்து நோக்கினால், தமிழகத்தில் மூவகை இனங்கள் தொல்பழங்காலம் முதல் வாழ்ந்துவருவது எளிதில் புலனாகும்.

1. நீக்கிரிட்டோ இனம்[88],
2. ஆஸ்திரிக் மக்களின் மூதாதையர்,
3. திராவிடர்.

தமிழகத்தின் பண்டை இனங்களுள் நீக்கிரிட்டோக்கள் முதன்மையானவர்.

**'நீக்கிரிட்டோக்கள்'**

'நீக்கிரிட்டோ' என்னும் சொல்லிற்குக் 'குறுகிய வடிவமுடைய நீக்கிரோ' என்பது பொருள். நீக்கிரோ என்ற சொல்லிற்குக் கரியோன் அல்லது மாயோன் என்பது பொருள். மேனி, மயிர், கண் ஆகியவை கருநிறம் கொண்டிருந்தமை பற்றிக் கிரேக்கச் சொல்லால், இவர்கள் இப்பெயரால் சுட்டப்பட்டனர். நீக்கிரிட்டோக்களின் மயிரிழை அமைப்பு மிக நேர்த்தியாகவும் சுருட்டையாகவும் இருக்கும். அவர்கள் குட்டை வடிவினர்; சிறிய தலையினர்; குமிழ்வடிவான நெற்றியினர்; வழுவழுப்பான புருவத்தினர்; மெலிந்த தாடையினர்; கரிய நிறத்தினர். அவர்கள் வேறுபட்ட வடிவங்களையுடைய தலையினர். சிலருடைய தலைகள் வட்டமாகவும், சிறிது நீண்ட வட்டமாகவும், நீண்டும் காணப்படும். உடலுறுப்புகள் நொய்மையானவை; கால்களைவிடக் கைகள் நீண்டிருக்கும்; குறுகிய முகம் முன்புறமாகத் துருத்திக்

[88] Negrito

கொண்டிருக்கும். மூக்கு அகன்றும் தட்டையாகவும் இருக்கும். உதடுகள் தடித்தும் பிதுங்கியும் இருக்கும்.

இந்திய மக்களிடத்தே நீக்கிரிட்டோ இனக்கூறுகள் காணப்படுகின்றனவா என்பது பற்றி அறிஞர்க ளிடையே உடன்பாடு இல்லை. கேரளநாட்டில் காணப் படும் காடர்களிடத்தில் நீக்கிரிட்டோ இனக்கூறுபாடுகள் காணப்படுகின்றன என்று பிரியஸ், செர்கி, ஹேடன், கூன் முதலான அறிஞர்கள்[89] கூறுகின்றனர். திருவிதாங் கூர், கொச்சி முதலான பகுதிகளில் வாழும் காடர், புலையர், தமிழகத்தில் வாழும் இருளர், வைநாட்டில் வாழும் சில பழங்குடிகள், ஆனைமலைப் பகுதியில் வாழும் மலாசரி (மலையரசர்) முதலான மக்களிடத்து நீக்கி ரிட்டோ இனக்கூறு காணப்படுவதாக லாபிக்கியூ[90] என் பவர் கூறுகின்றார்.[91] இவரது கூற்றினைத் தர்ஸ்டன் என்பவர் மறுக்கிறார்.[92] ஜியாபிரிட்டா ரக்கரி என்பவரோ தர்ஸ்டனின் கூற்றை மறுத்து, திராவிடருக்கு முற்பட்ட பழங்குடி மக்களிடம் நீக்கிரிட்டோ இனக்கூறுகள் காணப்படுகின்றன என்கிறார். மற்றும் ஹேடன் என் பவரோ இவர்களுக்கு இடைப்பட்ட நிலையில் தக்கா ணத்தின் மக்களிடையே நீக்கிரோ இனப்பண்புகள் படிந்திருப்பது போன்ற எண்ணம் உண்டாகிறது என் றும், அதைத் திட்டவட்டமாக உறுதிப்படுத்திக் கூறிய வர்கள் இல்லை என்றும் மொழிந்துள்ளார்.[93]

டாக்டர் ஹட்டன் என்பவர் தென்னிந்தியாவின் தென்கோடியில் வாழும் காடர், ஊராளியர் மக்களிடை யேயும், இந்தியாவின் கிழக்கு எல்லை ஓரத்தில் வாழும் மக்கள் சிலரிடையேயும், மணிப்பூர், சர்க்கார் மலைப்பகுதி யில் வாழும் அங்காமிநாகர் சிலரிடையேயும் நீக்கி ரிட்டோ இனக்கூறுடைய மக்களைத் தாம் நேரில்

---

[89] Preuss: Sergi; Haddon; Coon
[90] Lapique
[91] Mamoria, C. B.: *Op.cit.*, pp.8-9
[92] *Ibid*, p.9
[93] Haddon: *Op.cit.*, pp.24-25

கண்டறிந்ததாகக் கூறுகின்றார்.[94] இவர் முடிவாக வெளி யிடும் கருத்து எண்ணிப்பார்க்கத் தக்கதாகும்.

எவ்வாறு நோக்கினும், தென்கிழக்கு ஆசியாவின் முதல் பழங்குடி மக்களாக நீக்கிரிட்டோக்களே இருந் திருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. இவ்வினத் தின் தடயத்தைத் தென்னிந்தியாவின் கோடியிலுள்ள உயர்ந்த மலைகளில் வாழும் காட்டுமக்கள் சிலரிடையே நாம் இன்றும் காணலாம். இத்தகைய தடயத்தை அஸ்ஸாமிற்கும் பர்மாவிற்கும் இடையே உட்செல்ல இய லாத காடுகளடர்ந்த மலைப்பகுதிகளிலும் பார்க்கலாம். அந்தமான் தீவில் தூய நீக்கிரிட்டோக்களின் இனப் பண்பு வாய்ந்த மக்கள் உள்ளனர். இவர்களிடத்தும் இந்திய நிலப்பரப்பில் வாழும் பிற இனமக்களின் குருதிக் கலப்பு நாளடைவில் ஏற்பட்டிருத்தல் கூடும்.[95]

திருநெல்வேலி, கன்னியாகுமரி மாவட்டங்களில் வாழும் காணிக்காரர், மற்றும் செம்மாங்கு மக்கள் ஆகி யோரிடம் இவ்வினக்கூறுகள் இருப்பதாகவும் அறிஞர்கள் கூறுகின்றனர்.[96] பொள்ளாச்சிக் காடர் மக்களைக் கோலர் மக்களோடு ஒப்பிட்டு ஆய்ந்த மித்திரர், சாட்டர்ஜி ஆகிய அறிஞர்களும் இம்முடிவுக்கே வருகின்றனர்.[97]

இனப்பண்புச் சாயலில் குருதிக்கலப்பு இருப்ப தாகப் பொருள்படாது என்றும், நன்கு பயிற்சி பெற்ற ஆய்வாளர்களைக் கொண்டு விழிப்புடன் இச்சிக்கலை ஆராய்ந்துபார்த்தல் வேண்டும் என்றும் டி. என். மஜூம்தார் கருதுகிறார்.[98]

---

[94] Hutton, J.H. : *Man in India* p.7

[95] Hutton, J.H. : *Census of India* (1931), Vol. I; pt. III, pp.427 ff.

[96] *Nature*, May 19, 1928; p. 76 & June, 27, 1929, p. 123

[97] Mitra A.K. & Chatterjee, B.K. : "Dravidian and Mon-khmer Speakers or Austroloids, A study in Variation", *Indian Culture*, Vol. III, August 1942; p.362.

[98] Majumdar, D.N. : *Races and Cultures of India*, (Kitabistan, Allahabad, N.D.), p.36

இனப் பண்புகளிலோ உடலமைப்பிலோ தென்னிந்திய மக்களிடமிருந்து வேறுபட்டவராகத் தென்கிழக்கு ஆசியாவின் பெருவாரியான பழங்குடி மக்கள் தோன்றவில்லை என்பது டாக்டர் ஐயப்பனின் துணிபாகும். "காடரைப் போன்று சுருட்டை மயிருடைய சிறப்பற்ற பழங்குடி மக்களை நாம் விரல்விட்டு எண்ணிவிடலாம். அவர்கள் நம்முடைய குருதியோடு குருதியாகவும், சதையோடு சதையாகவும் உள்ளவர்களாவர். ஆகவே, அவர்களைச் சமவெளிப் பகுதியில் வாழும் மக்களிடமிருந்து இன அடிப்படையில் வேறுபட்டவராகக் கருதுவது தவறு என்று அவர் அறிவித்துள்ளார்.[99]

அபிமன்யூசர்மா என்பவர் காடர்களை அந்தமான் மக்களோடு ஒப்பிடல் பொருத்தமற்றதாகும் என்கிறார். மேலும், தக்காணத்தில் கிடைத்துள்ள மண்டை ஓடுகள் எதிர்பாரா வகையில் பழுதுபட்டுவிட்டன என்றும், பழுதுற்றதைக் கொண்டு ஒரு முடிவிற்கு வருவது பொருத்தமற்றது என்றும், தக்க சான்றுகள் கிடைப்பதற்குமுன் நீக்கிரிட்டோக்கள் தென்னிந்தியாவில் வாழ்ந்தனர் என்று கூறுவது எதிர்ப்புகளுக்கும் மறுப்புகளுக்கும் இடம் தருவதாக அமையும் என்றும் அறிவுறுத்துகிறார்.[100]

மேற்கண்ட கருத்துகளையெல்லாம் ஒப்புநோக்கின் ஓர் உண்மை புலனாகும். நீக்கிரிட்டோ இனத்தவர் தமிழகத்தில் வாழ்ந்திருக்கக்கூடும். அவர்கள் வெளிநாடுகளிலிருந்து வந்தவர்கள் என்று கொள்வதற்கான சான்றுகள் இல்லை. அவர்களும் தமிழகத்தில் தொல்பழங்காலத்தில் தோன்றிய மக்களாகவே இருக்கலாம்.

---

[99] Aiyappan A: *Report of the socio-economic conditions of Aboriginal tribes of the Province of Madras*, (Govt. Press, 1948,) p.3

[100] Bala Ratnam (Ed.): *Anthropology on the March*, pp. 97-98 & Abhimanyu Sharma's "A short Note on the need of Palace-anthropological search for fossil skulls in the Deccan" in the *Proceedings of the Asian Archaeology Conference* (Delhi, 1961).

## நீக்கிரிட்டோ பண்பாடு

முதன் முதலாக வில் செய்து பயன்படுத்தியமை,[101] அத்திமர வழிபாடு, இறந்தோர் வீடுபேறு அடையும் போது பழிவாங்கும் பூதம் காவல்புரிவதாக நம்புதல், மீன் விலங்குகள் செடிகொடிகள் போன்றவற்றைக் குலச் சின்னங்களாகக் கொள்ளுதல்[102] முதலான பழக்க வழக்கங்கள் நீக்கிரிட்டோ மக்களுடையன ஆகலாம்.

"நீக்கிரிட்டோ மக்கள் பேசிய மொழி இன்னது என்று நம்மால் உய்த்துணர முடியவில்லை. எனினும் அவர்களுடைய மொழி, திராவிட மொழிகளில் எத்தகைய தாக்குதலையும் உண்டாக்கவில்லை" என்று டாக்டர் எஸ்.கே. சாட்டர்ஜி கருதுகிறார்.[103] அவர்கள் இந் நாட்டிலேயே தோன்றியவர்களாக இருந்திருந்தால் பழைய திராவிடமொழியைப் பேசியிருக்கக் கூடும்.

## ஆஸ்திரிக் மக்களின் மூதாதையர்

இந்தியாவின் பண்டை மக்களினங்கள் யாவும் வெளி நாட்டிலிருந்து வந்தவை என்று கருதும் ஆராய்ச்சி யாளர்கள் தம் வழக்கப்படியே இவர்களையும் வெளி நாட்டிலிருந்து வந்தவர்களாகக் கருதுகின்றனர். இந்த ஆஸ்திரேலிய இனம் பாலஸ்தீனப் பகுதியில் தோன்றிய தாக ஹட்டன் கருதுகின்றார்.[104] சூவல் என்பவரோ இவ்வினத்தவர் ஆஸ்திரேலியாவிலேயே தோன்றியிருக்க வேண்டுமென்று குறிப்பிட்டுள்ளார். மற்றும் சிலர் இந்தோசீனாவில் அல்லது தென்சீனாவில் தோன்றி

---

[101] cf. *Census Report of India*, 1931, Vol. I, Part I, Delhi 1933, p.443

[102] Chatterji, S.K.: 'Contributions from different language culture groups' in the '*Cultural Heritage of India*' Vol. I; (The Ramakrishna Mission, Calcutta, 1970), p.78

[103] Chatterji, S. K.: Race movements and Pre-historic culture, *The Vedic Age*, (Majumdar, R. C. Edition) P. 147.

[104] Hutton, J.H. : *op. cit.*, Vol.I, Pt. III B.

யிருக்கலாமென்று நம்புகின்றனர். நடுநிலக்கடற் பகுதியின் பழைய கிளையினரே இவர்கள் என்று கருதுவாரும் உளர்.[105]

## உடற்கூற்று அமைப்பு

இந்த இனத்தைச் சேர்ந்த பழங்குடி மக்களின் உடற் கூற்றியல் அமைப்பினைக் காண்போம். இவர்கள் இருள் படர்ந்த பழுப்புநிறம் அல்லது கறுப்பு நிறம் கொண்டவர்; நீண்ட தலையினர்; அகன்ற தட்டையான மூக்கினர். அவர்களுடைய மூக்கின் அடிப்பகுதி அழுந்திப் போயிருக்கும். அவர்கள் அலையலையான தலைமயிரினை உடையவர். சிலரிடையே சுருட்டை மயிரும் உண்டு; தடித்தும் பிதுங்கியும் உள்ள உதடுகளை உடையவர்; குள்ள வடிவினர். இத்தகைய தோற்றத்தோடு தடித்த புருவமும், சப்பையான மூக்கின் அடிப்பகுதியும், உடல் முழுவதும் நிறைந்த மயிரும் உடைய ஆஸ்திரேலியப் பண்டை இன மக்களோடு இவர்கள் நெருங்கிய ஒப்புமை உடையவராக உள்ளனர். இதனால் இவ்வினத்தவரை ஆஸ்திரிக் மக்களின் மூதாதையர் என மக்களினமரபு நூலார் குறிப்பிடுகின்றனர்.

இப்பழங்குடி மக்கள் வரலாற்றுக்காலம் நெடுக வெவ்வேறு பெயர்களால் இந்தியநாட்டு அறிஞர்களால் (பின்வருமாறு) சுட்டப்பட்டனர்.

1. வேத காலம் — நிஷாதர்
2. வேதகாலத்திற்குப் பின் — சபரர், புளிந்தர்
3. கி.பி. ஆறும் நூற்றாண்டில் — கோலர், பில்லர்
4. இந்நூற்றாண்டில் — கோலாரியர், முண்டர்

உணவுப்பொருள்களைத் தேடித் திரிந்த நிலையில் புதிய கற்காலப் பண்பாட்டினையும் உடன்கொண்டு இந்தி

---

[105] Guha, B.S. : *op. cit.*, Vol. I, Pt. III, p.38.

யாவிற்குள் இவர்கள் நுழைந்திருக்கலாம் என்று அறிஞர்கள் கருதுகின்றனர்.[106]

தென்னிந்தியப் பழங்குடி மக்களான மலைவேடர், இருளர், குறும்பர், காடர், சோழகர், மற்றும் வேட்டை யாடிவாழும் நிலையிலே உள்ள பழங்குடி மக்கள், இலங்கை யில் வாழும் வேடர் ஆகியோரிடத்தில் இவ்வினப் பண்புக் கூறுகள் கலப்பற்ற நிலையில் காணப்படுகின்றன. பழனி மலைப்பகுதியில் வாழும் பழையரும் இவ்வினத்தைச் சேர்ந்தவராகலாம். இன்று இந்துக்களால் தாழ்ந்த வகுப்பினராக ஒதுக்கப்பட்டுள்ள தமிழக மக்கள் எல்லாருமே இந்த இனத்தைச் சேர்ந்தவராக இருக்கலாம்.

தர்ஸ்டன் என்பவர் கருத்துப்படி இவர்கள் உடற் கூற்றியலில் திராவிடரிடமிருந்து பெரிதும் வேறு பட்டவராகக் காணப்படுகின்றனர். நாளடைவில் இவர்கள் திராவிட இனத்தவரோடு கலந்துவிட்டனர் என்பதும் அவரது துணிவு.[107]

## ஆஸ்திரிக் மக்களின் பண்பாடு

ஆஸ்திரிக் மக்களின் பேச்சுமொழியானது கோலா ரிய மொழி, முண்டா மொழி, ஆஸ்திரிக் மொழி எனப் பல பெயர்களுடன் ஆங்காங்கே வழங்கப்படுகிறது. இம் மொழியின் சொற்கள்கூட பலவாகத் திராவிட மொழி களிலும் ஆரிய மொழிகளிலும் இடம் பெற்றிருக் கின்றன. கங்கை (ஆறு), தாம்பூலம் (வெற்றிலை), வழுதுணாங்காய் (கத்தரிக்காய்), மாதங்கம் (யானை), கஜம் (யானை), பாணம் (அம்பு), லிங்கம் (கந்து) என்னும்

---

[106] Gopalachari, K.: 'Country and People' *The Gazetteer of India, Vol. I:* (Govt. of India, Publication Division, Delhi, 1965), p. 142

[107] Thurston, E.: 'The Dravidian Problem', *Bulletin of the Madras Govt. Museum*, No. 3, pp. 11-12

சொற்கள் ஆஸ்திரிக் மொழியிலிருந்து ஆரியத்திற்கும், தமிழுக்கும் முறையே வந்து கலந்தனவாகலாம்.[108]

நெல், வெற்றிலை, கரும்பு போன்றவற்றைப் பயிரிடுதல், பருத்தியை நூற்று ஆடை நெய்தல், கரும்பிலிருந்து வெல்லம் செய்தல், யானைகளை அடக்கி வீட்டு விலங்குகளைப்போல் பயன்படுத்துதல், மஞ்சள் குங்குமம் ஆகியவற்றைப் பயன்படுத்துதல், நல்லதற்கும் கெட்டதற்கும் வெற்றிலை பாக்குக் கொடுத்தல், மகப்பேறு வேண்டி மகளிர் அரசமரத்தைச் சுற்றுதல், கண்ணேறு கழித்தல், தீட்டு விலக்கு, மதியை அடிப்படையாகக் கொண்டு திதி முறையால் காலத்தைக் கணித்தல் முதலான பழக்க வழக்கங்கள் இம்மக்களிடம் தோன்றியனவாகக் கருதப்படுகின்றன.[109]

பூமராங்கு என்னும் வளைதடி, ஊதுகுழல்கணை முதலான தொல்பழங்காலப் போர்க்கருவிகளை இவர்கள் முதன்முதலாகக் கண்டுபிடித்தனர் எனலாம்.

விலங்குகள் பற்றிய பழங் கற்பனைக் கதைகள், ஜாதகக் கதைகள், பஞ்சதந்திரக் கதைகள், இன்னுரை அறநெறிக் கதைகள் (இதோபதேசக் கதைகள்) போன்றவை இவர்கள் சிந்தனையில் அரும்பியவையாகலாம்.[110]

வேத காலத்திற்குப் பிற்பட்ட பிரமம் என்னும் கோட்பாட்டுக்கு மூலமான மனம்[111] என்னும் கோட்பாடும் இவர்களிடம் நிலவியிருந்தது. எங்கும் ஒரே காரிருள் பரவியிருந்தது. நிலமோ உயிர்களோ இல்லாத அந்தகாரத்திலிருந்து படிப்படியாகச் சடப் பொருள் சார்புடைய உலகம் தோன்றியது என்னும்

---

[108] Bagchi, P.C. (Ed.) : *Pre-Aryan and Pre-Dravidian in India* (University of Calcutta, 1929) pp. 124–136

[109] Majumdar, R.C. : *op.cit.*, pp. 150-151

[110] Mitra, P. : 'A Vedic Night of the Moon in Polynesia' *Oriental Journal*, Vol. I, Calcutta July 1934, p.128.

[111] '*Mana*'

உலகப் படைப்புப்பற்றிய பாலினீசிய, மாவோரிய கருத்துகள் ஆதிகாலத்தில் இவர்களிடம் இருந்திருக்க வேண்டும். மறுபிறப்புக் கொள்கை இவர்களிடமிருந்து பிற்காலத்தில் வளர்ச்சியுற்றதாகலாம். நாகவழிபாடும், நாககன்னிகள் ஆமை மகரமீன் முதலை அனுமான் விநாயகர் முதலான விலங்குத் தெய்வ வழிபாடும், சிவலிங்க வழிபாடும், இவைபோன்ற பலவும் இம்மக்களிடமிருந்து தோன்றியனவாகும். திருமாலின் பத்து அவதாரங்களுள் கூர்மாவதாரமும், மச்சாவதாரமும், வராக அவதாரமும் ஆஸ்திரிக் மக்களுடைய பழங் கதைகளின் வழிவந்தனவாகும்.[112]

இறந்தோரைப் புதைத்தல், தாழியிலிட்டுப் புதைத்தல், முன்னோரை வழிபடல் போன்றனவும் இவர்களது பழக்க வழக்கங்கள் எனலாம். இவர்களுடைய நாகரிகம் நாட்டுப்புறச் சார்புடையதாக இருந்தது. இவர்களது பழக்க வழக்கங்கள் தமிழர் பண்பாட்டில் இயைந்தும் இழைந்தும் உள்ளமையை நாம் மறுக்கவோ மறைக்கவோ இயலாது.

### நாகரும், ஆஸ்திரிக் மக்களின் மூதாதையரும்

'நாகர்' என்னும் சொல்லிற்குத் 'தேவர், நாக லோகத்தில் வாழ்பவர், நாகர் என்னும் ஒரு பழைய இனத்தைச் சேர்ந்தவர்' என்னும் பொருள்கள் தமிழில் வழங்கிவருகின்றன.[113] இவற்றுள் இரண்டாவது மூன்றாவது பொருள்கள் ஒன்றோடொன்று தொடர்புடையன. நாகருடைய மூலத் தாயகத்தையே 'நாகர் உலகம்' என்று பண்டைக்கால மக்கள் கருதினர் என்று நாம் கொள்ள இடமுண்டு. 'தேவர், மனிதர், நரகர்'[114] என்னும் மூவகைப் பொருள்களுள், 'நரகர்' என்பது

---

[112] Chatterji, S.K. : 'Austric Bases of Indian Civilization and Thought', *Bharata kaumudi*, 1945, pp. 193-208

[113] *Tamil Lexicon*, Vol. IV, p.2198

[114] நன்னூல் : 262

'நாகர்' என்னும் சொல்லின் திரிபாகும் என்பது அறிஞர் சிலரின் கருத்தாகும்.[115] பண்டைய பழங்குடி மக்கள் அனைவரையும் பொதுப்படையாகக் குறிப்பதற்கு 'நாகர்' என்னும் சொல் பண்டைத் தமிழில் வழங்கியதாகத் தெரிகிறது.

தமிழகத்தின் கிழக்குப் பகுதியில் நாகர் வாழ்ந்ததைப் பற்றிய குறிப்பு மணிமேகலையில் காணப்படுகின்றது. அவர்கள் ஆடையின்றி அலைந்து திரிந்தனராம்.[116] கொடுஞ்செயல் பலவற்றைச் செய்வதில் அவர்கள் வல்லவர் என்பதை வேறொரு குறிப்பு தெரிவிக்கிறது.[117] போகத்திற்குப் பேர்போனதாக 'நாகர் நாடு' பழைய தமிழ் இலக்கியங்களுள் சிறப்பித்துப் பேசப்படுவதும் இங்குக் கருதத்தக்கது.[118]

நாகர் மரபிலே தோன்றிய பீலிவளை என்ற பெண்ணிற்கும் தமிழகத்துச் சோழ அரசமரபைச் சேர்ந்த மன்னன் ஒருவனுக்கும் பிறந்த மகனைப்பற்றிய பேச்சு மணிமேகலையில் விரிவாகப் பேசப்படுகிறது.[119] இக்கதையைக் கருத்தில் கொண்டு பெரும்பாணாற்றுப்படையின் உரையில் நச்சினார்க்கினியர் தந்துள்ள விளக்கவுரை[120] அக்காலத்தில் நாகருக்கும் தமிழருக்கும் இருந்த தொடர்பைத் தெளிவுறுத்துகின்றது. இவருக்கு முன்னோடியாக,

> "..................................................ஆங்குப்
> பிலமதனிற் புக்குத்தன் பேரொளியால் நாகர்
> குலமகளைக் கைப்பிடித்த கோ"
>
> (விக்கிரமசோழன் உலா, 9 - 10)

என்று ஒட்டக்கூத்தர் இச்செய்தியைச் சுட்டியுள்ளார்.

---

115 Srinivasa Aiyangar, M. : *Tamil Studies*, p. 10
116 மணிமேகலை 16 : 15
117 *Ibid* 12 : 96
118 பரிபா (திரட்டு) 1 : 59
119 மணிமேகலை : 24 : 54-58
120 பெரும்பாணாற்றுப்படை : 31 உரை

கிறித்துவ நூற்றுண்டுத் தொடக்கத்திற்கு முன்னும் பின்னும் இலங்கையின் வடபகுதியில் நாகர்கள் வாழ்ந்த தற்குச் சான்றுகள் பல கிடைத்துள்ளன. இப் பகுதியையே நாகர் நாடாக நச்சினுர்க்கினியர் குறிப் பிடுகிருர்.

சோழநாட்டிற்கு வடக்கே உள்ள பகுதியைத் தொண்டைநாடு என்று குறிப்பிடுவது தேவார காலம் முதற்கொண்டு இருந்துவரும் மரபு. இப்பகுதியில் குறும்பர் அருவாளர் என்னும் மக்கள் வாழ்ந்ததாகப் பழந்தமிழ் இலக்கியமும்[121] மெக்கன்ஸி கையெழுத்துச் சுவடியும்[122] அறிவிக்கின்றன. இந்நாடு இருபெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவை அருவாநாடு, அருவாவடதலைநாடு என்பன.[123] தமிழ்மொழி பேசிய மக்களை 'அரவர்' என்னும் பெயரால் வடுகர் சுட்டினர். அரவர் அருவாநாட்டு மக்களாகலாம். 'அரவர்' என்னும் சொல்லிற்கு 'நாகர்' என்னும் பொருளும் உண்டு. ஒருகால் 'நாகர்' இனத்தவர் தமிழ்நாட்டின் வடபகுதியில் பேரளவில் வாழ்ந்ததால் இப்பெயர் வந்திருக்கக் கூடும்.

அருவாநாட்டிற்கு அருகில் 'ஓய்மான்நாடு' என்னும் நாடு கடைச்சங்க காலத்தில் இருந்தது. 'ஓவியர்' குடியைச் சேர்ந்தவர் ஆண்ட பகுதி ஓய்மான் (ஓவியர் மகன்) நாடு என்று வழங்கப்பெற்றிருத்தல் கூடும். ஓய்மான்நாட்டினை ஓய்மான் நல்லியாதன், ஓய்மான் வில்லியாதன் என்னும் இரு அரசர் ஓய்மான் நல்லியக் கோடனுக்கு முன்னர் ஆட்சிபுரிந்தனர்.[124] இவ்வோ வியர் குடி, நாகர் இனத்தைச் சேர்ந்ததாகத் தோன்று கிறது. இதனை டாக்டர் மா. இராசமாணிக்கனுர் கீழ் வருமாறு குறிப்பிடுகிருர்.

---

[121] பட்டினப்பாலை, 274-75

[122] Taylor's *Catalogue Raisonne of Oriental Manuscripts in the Government Library, III*, pp. 427-430.

[123] *S. I. I.* Vol.II, p.27

[124] புறநானூறு, 376, 379

" 'கோடன்' என்பது 'கோடகன்' என்பதன் மரூஉமொழி.

கார்க்கோடகன் என்பது கார்க்கோடன் என மருவி வழங்கும். கார்க்கோடன் என்பது எட்டுப் பெரிய நாகங்களுள் ஒன்றான கடவுட் பாம்புக்குப் பெயராகும். அதியமான் நெடுமான் அஞ்சி என்பது அஞ்சி என மருவி வழங்குதல் இயல்பாகும். அங்ஙனம் வழங்கப்பட்டதாகக் கொள்ளின், நல்லியக்கோடன் என்பது நல்லிய நாகன் எனப் பொருள்படும். அஃதாவது, நல்லியக்கோடன் நாகர் மரபினன் என்பது பெறப்படும்."[125]

இந்த அரசன் ஒவிய நாகர்குடியைச் சேர்ந்தவனாவான்.[126]

சங்ககாலத்தில் 'நாகன்' என்னும் பெயருடைய புலவர்கள் நான்குபேரும், நாகனார் என்னும் பெயருடையோர் பதினைந்து பேரும், 'நாகை' என்னும் பெயருடைய பெண்பாற் புலவர் மூவரும் இருந்ததாகத் தெரிகிறது.[127] 'நாலை கிழவன் நாகன்' என்னும் குறுநில மன்னன் பாண்டியநாட்டில் இருந்தான்.[128] மற்றும் ஊர்ப் பெயர்கள் பல நாகரோடு தொடர்புடையனவாக உள்ளன. இவற்றையெல்லாம் ஒருங்கிணைத்து நோக்குகின்றபொழுது 'நாகர்' இனத்து மக்கள் நாளடைவில் தமிழர்களாக மாறியிருக்க வேண்டும் என்பது புலனாகின்றது.

யவனருடைய குறிப்பேடுகள் இந்நாகரைப் பற்றிய செய்திகள் சிலவற்றைத் தந்துதவுகின்றன. தாலமி[129]யின்

---

125 இராசமாணிக்கனார், மா. : பத்துப்பாட்டு ஆராய்ச்சி (சென்னைப் பல்கலைக் கழகம், 1971), பக். 393

126 சிறுபாணாற்றுப்படை : 121-126

127 சங்க இலக்கியம், புலவர் அகரவரிசை, பகுதி 2 (பாரிநிலையம், சென்னை, 1966)

128 புறநானூறு, 169 : 12

129 Ptolemy

'நிலநூலில்' (கி. பி. 150) தமிழகத்தின் முக்கியப் பகுதிகள் சில குறிப்பிடப்பட்டுள்ளன. மாவிலங்கை (130°, 10°)யினைத் தலைநகராகக் கொண்ட 'அரௌரிணுய்'[130] நாட்டைப் பஸரொ–நாகோஸ்[131] ஆண்டான் என்று அதில் குறிக்கப்படுகிறது. அரௌரிணுய் என்பதை அருவா நாடெனக் கூறலாம்.[132]

மேற்கண்ட குறிப்பால் 'அரௌரிணுய்' எனப்படும் அருவா நாட்டிற்கு மாவிலங்கை தலைநகர் என்பதும், அதை 'பஸரொ–நாகன்' ஆட்சிபுரிந்தமையும் புலனுகின்றன. 'பஸரொ' எனும் பெயர் 'வச்சிர' அல்லது 'வர்ஷ' என்னும் சொல்லின் திரிபாகலாம்.[133] இவை யாவும் பண்டைத் தமிழகத்தின் வடபகுதியில் 'நாகர்' இனத்து மக்கள் சீரும் சிறப்பும் பெற்று விளங்கியமைக்குச் சான்று பகருகின்றன.

இத்தகைய சிறப்புடைய நாகர் வரலாற்றுக்காலத்தில் திராவிடரோடு இரண்டறக் கலந்துவிட்டனர். அதனுல், பிற்காலத்தில் அவர்கள் தமிழ்மக்களின் இனத்தவராகக் கருதப்பட்டனர். ஆனுல், திராவிடருக்கு முற்பட்ட ஆஸ்திரிக் பழங்குடி மக்களின் வழிவந்தவர்களாகவே அவர்கள் தோன்றுகின்றனர். இந்தியாவில் முதன்முதல் நாக வழிபாட்டை மேற்கொண்டவர்கள் ஆஸ்திரிக் பழங்குடி மக்கள் என்பதை நாம் முன்னர்க் கண்டோம். மேலும், நாகருடைய உடற்கூற்றுப் பண்புகள் பல ஆஸ்திரிக் பழங்குடி மக்களின் இனப் பண்புகளோடு பெரிதும் ஒத்துள்ளன. காலப்போக்கில் தென்னுட்டில் நாகர்கள் திராவிட இனத்துள் மூழ்கி மறைந்துவிட்டனர்.[134]

---

[130] Arourinoi
[131] Basaronagos
[132] Cunningham: *Ancient Geography of India*, p. 259. Caldwell, R.: *Op.cit.*, p.93
[133] Mahalingam, T.V.: *Nagas in Ancient History and Culture*, p. 20
[134] Srinivasa Aiyangar, M.: *Op. cit.*, p. 12

ஆதிச்சநல்லூர் அகழ்வாராய்ச்சியில் கண்டெடுக்கப் பட்ட மண்டை ஓடுகளுள் ஒன்று ஆஸ்திரிக் பழங்குடி மக்களுடைய மண்டையோட்டை ஒத்திருப்பதாக எலியட் ஸ்மித் மொழிந்துள்ளார்.[135] இதனால் ஆஸ்திரிக் பழங்குடி மக்களின் இனத்தவர் தமிழகத்தில் அன்று வாழ்ந்தனர் என்று கருதலாம். நாகரின் பல்வகைப் பண்புகள் ஆஸ்திரிக் மக்களின் பண்புகளோடு ஒத்துள்ளமையால், அம்மக்களின் ஒரு கிளையினரே தென்னாட்டு நாகர் இனத்தவராகச் சிறப்புற்றிருக்கலாம்.

## 5. திராவிடர்

திராவிட இனத்தின் தோற்றத்தைப் பற்றிப் பல வகைப்பட்ட கருத்துகளை அறிஞர் பெருமக்கள் தெரிவித் துள்ளனர். அவற்றை நாம் இரண்டுவகையாகப் பகுத்துக்காட்டலாம். அவர்கள் வெளிநாட்டிலிருந்து வந்தவர் என்பது முதல் கருத்து. இந்நாட்டில் தோன்றி வாழும் பழங்குடி மக்களே திராவிடர் என்பது இரண்டாவது கருத்து. இக்கருத்துகளைக் காண்போம்.

### 1. திபெத்திலிருந்து வந்தவர்

தமிழருடைய வரலாற்றை முதன்முதல் முறையாக ஆங்கிலத்தில் எழுதிய தமிழறிஞர் திரு. வி. கனகசபை பிள்ளை தமிழர் திபெத்திலிருந்து தென்னிந்தியாவிற்கு வந்தேறிய மங்கோலிய இனத்தைச் சேர்ந்தவர் என்று குறிப்பிட்டுள்ளார்.[136]

தென்னாட்டின் பழங்குடி மக்களான வில்லவர், மீனவர் முதலானவர்களை நடு ஆசியாவிலிருந்து வந்த நாகர்கள் என்னும் கூட்டத்தார் வென்று, அவர்களைக் காடுகளுக்கும் மலைகளுக்கும் விரட்டினர்; அதன் பிறகு

---

[135] Smith, Elliot G.: *The Diffusion of Culture* (London, 1938), p. 40

[136] Kanakasabhai Pillai, V.: *The Tamils 1800 years Ago* (Kazhagam, 1956), p. 74

திபெத்திலிருந்து வந்த மங்கோலிய இனத்தைச் சேர்ந்த தமிழர் நாகர்களை வென்று அடக்கினர் என்பது அவருடைய நம்பிக்கையாகும். தமிழர் நான்கு பிரிவாகத் தென்னாட்டில் நுழைந்தனராம். 'மாறர்' என்ற கூட்டத்தினர் முதன்முதல் தமிழகத்திற்கு வந்து பாண்டிய நாட்டில் தங்கினர் என்றும், அதன் பிறகு வந்த 'திரையர்' என்பார் சோழநாட்டில் வாழ வசதி செய்து கொண்டனர் என்றும், மூன்றுவதாக வந்த 'வானவர்' என்ற குழுவினர் சேரநாட்டைத் தமதாக்கிக் கொண்டார் என்றும், இம்மூவருக்கும் பின்னர் வந்த 'கோசர்' என்னும் கூட்டத்தார் கொங்குநாட்டைத் தங்களாட்சிக்குட்படுத்திக் கொண்டனர் என்றும் திரு. வி. கனகசபை பிள்ளை விளக்கியுள்ளார்.[137]

திராவிடருடைய உடற்கூறு மங்கோலியருடைய உடற்கூற்றிலிருந்து முற்றிலும் மாறுபட்டுள்ளமை இங்குச் சிந்தித்தற்குரியது. இவை அல்லாமல், சமூகப் பழக்கவழக்கங்களும், பண்பாட்டுநெறிகளும் இவ்விரு மக்களினத்தவரிடையே தொடர்பற்றுக் காணப்படுகின்றன. தமிழர் மங்கோலிய இனத்தைச் சேர்ந்தவர் என்னும் இக்கருத்து மக்களின் இனமரபு வரலாற்றின் போக்கிற்கு முரண்படுகிறது.

## 2. எகிப்திலிருந்து வந்தவர்

கி. மு. மூவாயிரம் முதற்கொண்டு பொதுவாகவும், கி.மு. 1800இல் அடுத்துப் பேரளவிலும் எகிப்தை விட்டுப் புறப்பட்ட மக்கள் கடல் வழியாக இந்தியாவிற்கு வந்திருக்கவேண்டும். இப்புதிய பண்பாட்டுக்குரிய மக்கள் திராவிடருக்கு முற்பட்ட பழங்குடிகளுடன் குருதிக்கலப்புற்று அதன் பயனாகத் திராவிடர்களாயினர் என்பது எலியட் ஸ்மித்தின் கருத்தாகும்.[138]

---

137 *Ibid.* pp. 74-75

138 Smith, Elliot, G. : *Migrations of Early Cultures* (London, 1916), pp. 79-80

இக்கருத்தை ஏற்றுக்கொண்ட டாக்டர் ஜே. டி. கார்னீலியஸ் திராவிடருக்கும் பண்டைய அரேபிய, தூனீசிய மக்களுக்கும் பழக்க வழக்கங்களிலும், தொழில் முறைகளிலும், மொழிவழக்குகளிலும், இடப்பெயர் களிலும் நெருங்கிய தொடர்பு இருந்துவருவதைச் சுட்டிக் காட்டியுள்ளார். இத்தகைய தொடர்பினால் திராவிடர் ஒரு காலத்தில் தூனீசியா, எகிப்து பகுதி களில் வாழ்ந்திருக்கவேண்டும் என்றும், பின்னரே அவர்கள் இந்தியாவை நோக்கிப் புடைபெயர்ந்திருக்க வேண்டும் என்றும் அவர் குறிப்பிடுகிறார்.[139] இவ்விரு வரும் நடுநிலக்கடல் பகுதியில் தோன்றிய மக்களே உலகெங்கும் பரவினர் என்னும் கொள்கையைக் கொண் டிருந்தமையால் இம்முடிவிற்கு வந்தனர்.

### 3. நடு ஆசியாவிலிருந்து வந்தவர்

திராவிடர் நடு ஆசியாவில் வாழ்ந்துவந்த சித்திய இனத்தைச் சேர்ந்தவர். அங்கிருந்தே அவர்கள் பலூசிஸ்தானம் வழியாக இந்தியாவிற்குள் நுழைந்தனர். அவர்கள் பலூசிஸ்தானத்தில் தங்கியிருந்ததற்குரிய தடயமாக இன்று 'பிராகுவி' மொழி பேசும் மக்கள் வாழ்ந்துவருகின்றனர் என்பது டாக்டர் கால்டுவெலின் கருத்தாகும்.[140] திராவிட மொழிகளுக்கும் பிராகுவி மொழிக்கும் இடையே உள்ள ஒற்றுமைப் பண்புகளைச் சுட்டிக்காட்டி, திராவிடர்கள் இந்தியாவின் வடமேற்கு எல்லைப்புறத்தின் வழியாக இந்தியாவிற்கு வந்திருக்க வேண்டும் என்று அவர் மொழிந்துள்ளார். எனினும் அவருடைய கருத்துகளே இதற்கு முரணாக உள்ளமை கருதத்தக்கது.

---

139 Cornelius, J.T. : 'The Graffiti on the Megalithic pottery of South India and Dravidian Origin' in *Tamil Culture*, XII, No. 4, pp. 287-300

140 Caldwell, R. : *Op. cit.*, p. 40

## 4. நடுநிலக்கடல் பகுதியிலிருந்து வந்தவர்

திராவிட இனத்தவர் மேற்காசியாவில் தோன்றியவர். சிறப்பாக நடுநிலக்கடல் பகுதியில் தோன்றிப் பையப்பைய அவர்கள் இந்தியாவை நோக்கிக் கடல் வழியாகவும் நிலவழியாகவும் புறப்பட்டு வந்திருக்க வேண்டும் என்னும் கருத்து மானிடவியல் வல்லுநராலும், வரலாற்று ஆராய்ச்சியாளர் பலராலும், மொழியியல் அறிஞர் சிலராலும் போற்றப்பட்டுவருகிறது.

இந்தியாவிற்கும் பாபிலோனியாவிற்கும் இடையே பண்டைக் காலத்தில் நடைபெற்ற வாணிகத்தைப் பற்றி ஆய்வு நடத்திய கென்னடி என்பார் திராவிடருக்கும் நடுநிலக்கடல் இனத்து மக்களுக்கும் இடையே காணப்படும் ஒப்புமைப் பண்புகளையும் தொடர்பினையும் சுட்டிக் காட்டித் திராவிடர்கள் நடுநிலக்கடல் பகுதியிலிருந்து இந்தியாவிற்கு வந்திருக்கவேண்டும் என்று கூறியுள்ளார்.[141]

"இந்தியப் படகு வடிவங்களின் தோற்றமும் அவை உணர்த்தும் இனமரபின் சிறப்பியல்புகளும்" என்னும் ஆங்கில ஆராய்ச்சி ஏட்டில் தமிழக அரசின் மீன்பிடிப்புத் துறை இயக்குநராகப் பணிபுரிந்த ஜேம்ஸ் ஹார்னெல் பல நுட்பமான கருத்துகளைத் தெரிவித்துள்ளார். முதலாவதாகத் திராவிடருக்கு முற்பட்ட காலத்தில் பழங்குடி மக்கள் தமிழகத்தில் வாழ்ந்ததாக அவர் கருதுகிறார். மேலும் "திராவிடர்கள் நடுநிலக் கடலினத்தைச் சேர்ந்தவர்களாகவே உள்ளனர். இக் காலத்தில் நடுநிலக்கடல் இனத்திற்கே உரிய பழக்க வழக்கங்கள் என்று கருதப்படும் பலவற்றைத் திராவிடர்கள் நன்கு அறிந்தவர்களாக உள்ளனர். அவர்கள் நடுநிலக்கடல் இனத்திலிருந்து தனித்ததொரு கிளையாகப் பிரியாத காலத்திலேயே, ஆற்றிலே செலுத்தக் கூடிய பலவகைப் படகு அமைப்புகளைச் செய்யக்

[141] Kennedy, S. : 'Early Commerce of Babylon with India', *Journal of Royal Asiatic Society*, 1898, pp. 248-257

கற்றிருந்தனர். சிறப்பாகக் காற்பங்கு அளவுள்ள சுக்கான் படகு செய்வதைக் குறிப்பிடலாம். சங்குச் சிப்பியைப் பயன்படுத்தும் முறையையும் அங்கே அவர்கள் அறிந்திருக்கலாம். மெசபடோமியாவில் வாழ்ந்த காலத்திலேயே திராவிடர் பரிசிலையும், நாணல் புல்லினால் செய்யப்பட்ட கட்டுமரத்தையும் புதிதாகக் கண்டுபிடித்தோ, கடன் வாங்கியோ பயன்படுத்தியிருக்கவேண்டும். வடமேற்கிலிருந்து அல்பைனரோ, மங்கோலியரோ விரட்டத் தொடங்கியமையாலும், தெற்கு அல்லது தென்மேற்குப் பகுதியிலிருந்து செமிட்டிக்குகள் நெருக்கியமையாலும் அவர்கள் கிழக்கு நோக்கிப் புறப்பட்டு, பலூசிஸ்தானம் வழியாக இந்தியாவிற்குள் நுழைந்திருக்கவேண்டும்" என்று சான்றுகள் பல காட்டி ஹார்னெல் விளக்கியுள்ளார்.[142] இவ்விருவரும் திராவிடரைப் பண்பாட்டியல் ஒப்புமையின் அடிப்படையில் ஆய்ந்து முடிவு கூறியுள்ளனர். பண்பாட்டுக் கலப்பினால் இவ்வொப்புமை உண்டாகியிருக்கலாம்.

மானிடவியல் கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு திராவிட இனத்தின் தோற்றத்தைப்பற்றி எப். ஜே. ரிச்சர்ட்ஸ் ஆராய்ந்துள்ளார். தம்முடைய ஆய்வுரையின் இறுதியில் "தென்னிந்தியாவில் வாழுகின்ற மக்கள் தொகையில் தலைமைக் கூறாக இருப்பவர்கள் திராவிடர்கள்; நடுநிலக்கடல் இனத்தின் பல்வேறு படிநிலைப் பண்புகளைக் கொண்ட ஓரினமாக அவர்கள் விளங்குகின்றனர்; பாம்புகளை வழிபடும் மரபுவழிப் புகழ் மிக்க 'நாகர்களும்' இந்நடுநிலக்கடல் இனத்தினரேயாவர்" என்று அவர் மொழிந்துள்ளார்.[143]

---

[142] Hornell, James: "The Origins and the Ethnograp--hical significance of Indian Boat Designs" in *the Memo'rs of the Asiatic Society of Bengal*, Vol. VIII, No. 1, 1918, pp. 252-256

[143] Richards, F. J.: "Some Dravidian Affinities and their sequel" in *the Quarterly Journal of Mythic Society* (Bangalore, July, 1917), p. 277

'இந்திய நாகரிகத்தில் திராவிடப் பண்பு' என்னும் ஆங்கில நூலில், டாக்டர் ஜி. சிலேட்டர், "திராவிட மக்களிடையே உள்ள தலைமை இனக்கூறு நடுநிலக்கடல் இனத்தின் ஒரு கிளையேயாகும்; ஆராய்ச்சி நுட்ப மில்லாத என்னுடைய பொது முடிவின்படி கூறுவதாயின் தலையோட்டு வடிவம், மயிர் அமைதிப் பண்பு, மயிர் நிறம், கண் நிறம், உறுப்பமைதி, உடலமைதிகள் ஆகிய வற்றில் அவ்வினத்தவருடன் திராவிடர் குறிப்பிடத்தக்க ஒற்றுமை உடையவர்கள் என்றே கூறத்தகும்" என்று துணிந்துள்ளார்.[144]

மொழியியல் வல்லுநரான எஸ். கே. சாட்டர்ஜி, வட இந்திய மொழிகளைப்பற்றிச் சிறப்பாகவும், திராவிட மொழிகளைப்பற்றிப் பொதுவாகவும் ஆராய்ந்துள்ளார். குறிப்பிட்ட மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த ஒரு மொழியைப் பேசும் மக்கள் எத்தகைய இனப்பண்புகள் உடையவர்கள் என்பதைக் கோடிகாட்டும் வகையில் அவர் திராவிட இனத்தின் தோற்றத்தையும், சிறப்பியல்பு களையும் விளக்கியுள்ளார். "சிறியஆசியாவில் தொல் பழங்காலத்தில் வாழ்ந்த லைசியர்[145] தங்களுடைய கல் வெட்டுகளில் 'திரம்மிலி'[146] என்று தங்களைக் குறிப்பிட் டுள்ளனர். அவர்கள் கிரீத்தி[147]லிருந்து வந்தவர்கள் என்று ஹெரடோடஸ் குறிப்பிடுகிறார். கிரீத்தில் ஹெலனிக்[148] இனமக்களுக்கு முன்பு வாழ்ந்த ஆசியச் சார்புடைய மக்களைக் கிரேக்கர் 'தர்மிலாய்'[149] என்று அழைத்தனர். நடுநிலக்கடற்பகுதியின் கீழ்த்திசையி லிருந்து முடிவாக இந்தியாவிற்குள் நுழைந்த திராவிட மொழி பேசிய மக்கள் கூட்டத்தினருள், சிறப்புமிக்க ஒரு

---

144 சிலேட்டர், கில்பர்ட் : இந்திய நாகரிகத்தில் திராவிடப்பண்பு (தமிழாக்கம்: கா. அப்பாத்துரை) (கழகம் 1955), பக்.8
145 Lycians
146 Trammli
147 Crete
148 Hellenic
149 Termilai

கிளையினர் தங்களுடைய தேசிய இனத்தின் அல்லது பழங்குடி மரபின் பட்டப்பெயரினைத் தங்களுடன் கொண்டுவந்திருக்கலாம் என்று கருதுவது தவறாகாது. அப்பட்டப்பெயரான 'தர்மிலாய்', 'திர்மிலாய்> திரிம்மிலி>திரமிழ' என்று திரிந்து, இன்றைய தென்னாட்டின் சிறப்புமிக்க மொழியான 'தமிழின்' பெயராக, கி. மு. முதலாயிரத்தின் இடைப்பகுதியில் மாற்றமுற்றிருக்கலாம் என்பது சாட்டர்ஜியின்[150] கருத்தாகும்.

இக்கருத்துகளுக்கு ஊட்டமும் உரமும் அளிக்கும் வகையில் பியூரர் கிறிஸ்டோபர் ஹெய்மெண்டார்ப்பு என்னும் லண்டன் பல்கலைக்கழகப் பேராசிரியர் புதியதொரு விளக்கம் தந்துள்ளார். 1952ஆம் ஆண்டில் உலக நாடுகளின் 'மானிடவியல், மக்களினமரபியல் ஆராய்ச்சிக் கழகத்தின்' நான்காவது மாநாடு வியன்னாவில் நடைபெற்றது. அம்மாநாட்டில் "திராவிடரின் தோற்றம் பற்றிய புதுக்கருத்து" என்னும் பொருள் பற்றி ஹெய்மெண்டார்ப்பு ஓர் ஆய்வுக் கட்டுரையைப் படித்தார். அதன் சுருக்கம் வருமாறு :

"பிரமகிரியிலும், பெல்லாரி மாவட்டத்தில் ஓரிடத்திலும் செய்யப்பெற்ற அகழ்வாராய்ச்சியால் அந்த வட்டாரங்களில் முதலில் நிலவிய புதிய கற்கருவி நாகரிகத்திலிருந்து இரும்பைப் பயன்படுத்திய பெருங்கல் கால நாகரிகம் வளர்ச்சியுறவில்லை என்ற உண்மை புலனாகின்றது. அதனால் பெருங்கல் கால நாகரிகம் இந்திய முந்நீர்நிலத்திற்கு வெளியே, வேறெங்கோ தோன்றி வளர்ந்திருக்க வேண்டுமெனத் தோன்றுகிறது. பிரமகிரியில் பெருங்கல் கால நாகரிகம் கி. மு. 300 அளவில் செழித்திருக்க வேண்டும். ஏனெனில், அதற்கருகில் அசோகரின் கல்வெட்டுகள் காணப்பெறுகின்றன. நாகரிக வளர்ச்சியடையாத புதிய கற்கருவிக் கால மக்களிடையே தம் கருத்துகளைப் பரப்புவதற்காக அசோகர் அப்பகுதியில் கல்வெட்டுகளைப் பொறித்திருக்க

[150] Chatterji, S.K. : *Dravidian*, p. 34

இயலாது. எனவே, கி. மு. 300 அளவிலேயே பிரம கிரியின் வட்டாரத்தில் பெருங்கல் கால நாகரிகத்தினர் வாழ்ந்திருக்க வேண்டும். ஆனால், தக்கணத்தில் இந்தப் புதிய பெருங்கல் காலப் பண்பாடு கி. மு. 500-க்குச் சற்று முன்பே தோன்றியிருக்க வேண்டும் என்று நம்பப் படுகிறது. எனவே, புதியதும் சிறப்பு மிக்கதுமான ஒரு பண்பாடு எத்துணை விரைவாகப் பரவுமோ அத்துணை விரைவாக அது தக்கணத்திலும் தென்னிந்தியாவிலும் வியக்கத்தக்க வகையில் மிக விரைவாகப் பேராற்றலுடன் பரவியிருக்க வேண்டும். இன்று திராவிட மொழிகள் பேசப்பெறும் பகுதிகளில் இத்தகைய பெருங்கல் காலக் கல்லறைச் சின்னங்கள் மிகப் பலவாகக் காணப்படு கின்றன. அக்கல்லறைகள் இறந்தோரை அடக்கம் செய்யும் வட்ட வடிவக் கல்லறைகளாகவும், கல் மேடைகளாகவும், நடுகற்களாகவும் அமைக்கப்பெற் றுள்ளன. அவற்றுள் இரும்பைத் தவிர வேறெந்த உலோகத்தையும் காணமுடியவில்லை. மேற்குப் பாக்கிஸ் தானில் கராச்சிக்கு அருகில் கற்பலகைகளால் மூடப் பெற்ற கல்லறைகளின் தொகுதி ஒன்று கண்டுபிடிக்கப் பட்டது. இதைத் தவிர, வட இந்தியாவில் வேறெந்தப் பகுதியிலும் இந்தப் பெருங்கல் காலப் பண்பாட்டின் சின்னங்களைக் காணமுடியவில்லை. இந்த இரும்புக் கருவிக்காலப் பெருங்கல் பண்பாடு வெளியிலிருந்து கொண்டுவந்து, தென்னிந்தியாவிற்குள் புகுத்தப்பெற்ற தாகும். இந்நாகரிகத்தைக் கொண்டுவந்த மக்கள் திராவிடர்களாக இருக்கவேண்டும் என்று நம்பப்படு கிறது. வட இந்தியாவில் வெண்கலக் கருவி நாகரிகம் சிறப்புற்று விளங்கியமையால் திராவிடர்கள் அங்கிருந்து தென்னிந்தியாவிற்கு வந்திருக்க இயலாது. ஏனெனில், திராவிடர்கள் வட இந்தியாவிலிருந்து அல்லது வட இந்தியாவின் வழியாக வந்திருந்தால் தங்களுடைய இரும்புக் கருவிகளோடு, அங்குச் சிறப்புற்று விளங்கிய வெண்கலக்கருவிகளுள் சிலவற்றையாகிலும் தங்களுடன் கொண்டுவந்திருப்பர். அவ்வாறு வெண்கலக் கருவிகளைக் கொண்டுவராமையால், அவர்கள் கடல் வழியாகவே

தக்கணத்திற்குள் நுழைந்திருக்க வேண்டும். பின்னர், இந்தியாவின் மேற்குக் கடற்கரை ஓரமாக அவர்கள் தெற்கு நோக்கிப் பையப்பையச் சென்றிருக்க வேண்டும்.

இந்தப் பெருங்கல் காலச் சமாதிகளுக்கும் நடுநிலக் கடல் பகுதியில் காணப்படும் பெருங்கல் காலச் சமாதி களுக்குமிடையே நெருங்கிய தொடர்பு இருப்பதை நாம் காணுகின்றோம். பலவகையான ஒப்புமைப் பண்பு களுள் முதன்மையானதும் நம்முடைய கருத்தைக் கவருவதுமாக இருப்பது இடுதுளைகள் அல்லது சாளரங்களோடு[151] கூடிய கற்பலகைகளால் மூடப்பெற்ற கல்லறைகளாகும். இதனால், இந்தப் பண்பாட்டிற்குரிய திராவிடர்களுக்கும் நடுநிலக்கடல் இனத்து மக்களுக்கும் தொடர்பு இருக்கவேண்டும் என்று தோன்றுகிறது. இவ்விரு நாடுகளிலும் காணப்பெறும் ஒரே வகையான பண்பாட்டிற்குரிய மக்கள் ஓரினத்தைச் சேர்ந்தவர்களாக இருக்கவேண்டும் என்று கருதுவது தவறாகாது. அவர்கள் கடல்வழியாகத் தென்னிந்தியாவிற்குக் கி. மு. முதலாயிரத்தின் இடைப்பகுதியில் வந்திருக்கலாம். அல்லது அவர்கள் ஈரானிலிருந்து பலூசிஸ்தானத்தின் மூலம் நிலவழியாக இந்தியாவிற்குள் நுழைந்து, மைசூர் மேட்டுநிலத்தை அடையும்வரை மேலைக்கடற்கரை ஓரமாக வந்து தென்னாட்டிற்குச் சென்றிருக்கலாம்.''[152] ஹெய்மெண்டார்ப்பின் இந்தக் கருத்து இன்றைய அறிஞர்கள் பலருடைய கருத்தினைக் கவர்ந்திருக்கிறது.

முப்பது ஆண்டுகளுக்கு மேல் திராவிடமொழி களுக்கும் பாஸ்க்கு[153] முதலான தெற்கு ஐரோப்பிய மொழிகளுக்கும் இடையேயுள்ள தொடர்புகளை டாக்டர் என். லகோவரி என்ற ருமேனிய நாட்டு அறிஞர் ஆய்ந்துள்ளார். "நடுநிலக்கடல் பகுதியிலேயே

---

151 Port-holes

152 Haimendorf, F.C. : 'New Aspects of the Dravidian Problem', *Tamil Culture*, II, No. 2; pp. 127-135

153 Basque

உலகத்தின் முதல் நாகரிகங்கள் அரும்பின; கி. மு. நாலாயிரம் அளவில் அவை மலர்ந்து மணம் பரப்பின; திராவிடர்களின் மூதாதையரும் கி. மு. நாலாயிரம் அளவில் மெசபடோமியாவிலிருந்து வெளியேறிப் பையப் பைய இந்தியா வரையில் சென்றிருக்கலாம் என்ற நம்பிக்கை எனக்குண்டு'' என்று அவர் கூறுகிறார்.[154]

தென்னிந்தியாவில் வாழும் மக்களுடைய உடற்கூற்று அமைப்பு நடுநிலக்கடல் இனத்து மக்களுடைய உடற்கூற்று அமைப்பிலிருந்து சிறிது வேறுபட்டிருக்கிறது என்றும், சிறிய தலையும் எடுப்பான குழிந்த மூக்கும், பிடரியிலிருந்து உயர்ந்த முகட்டையுடைய தலையும் உடையவர்களாகத் தமிழ் முதலான திராவிடமொழிகளைப் பேசுகின்ற மக்கள் உள்ளனர் என்றும் பேராசிரியர் கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் கருதுகிறார். மேற்கண்ட உடற்கூற்று அமைப்பினை உடையவர் தென்மேற்கு ஆசியாவைச் சேர்ந்த அர்மினொய்டு மக்களின் வகையைச் சேர்ந்தவராவர். தமிழரிடத்து இவ்வுடற்கூறே முதன்மையானதாகக் காணப்பெறுகிறது. இத்தகைய உடற்கூற்று இனத்தினர் தென்னிந்தியாவில் தோன்றியிருக்க முடியாது. இவ்வினத்தைச் சேர்ந்தவர் ஆசியாவில் பாமீர் முதல் லெவாண்ட் வரையிலுள்ள நிலப் பகுதியில் வாழுகின்றனர். வாணிகத் தொடர்பு காரணமாக அவர்கள் பண்டைக் காலத்தில் இந்தியாவிற்கு வந்திருக்கலாம் என்பது அவருடைய கருத்து. இனங்களின் முந்தைய வரலாற்றையும் மொழிகளின் முந்தைய வரலாற்றையும் இணைத்துப் பார்க்கின்றபொழுது திராவிடமொழியும், பண்பாடும் அர்மினொய்டு உடற்கூற்று அமைப்புடைய மக்களின் வாழ்நிலமான அனதோலியா, அர்மினியா, ஈரான் மேட்டுநிலப் பகுதிகளுக்கு நம்மைத் திரும்ப அழைத்துச்செல்கின்றன. கி. மு. மூவாயிரம் ஈராயிரம் ஆகிய ஆண்டுகளுக்கிடையே அங்கிருந்து ஒரு பண்பாட்டுப் பிழம்பு சிந்துவெளிக்கும் பின்னர்

---

[154] Lahovary, N. : Dravidian Origins and the West (Longmans, Madras, 1962), p. 16

தென்னிந்தியாவிற்கும் பாய்ந்தோடியது என்று கூறினால், அது தவறாகாது என்பது தமிழகத்தின் வரலாற்றுப் பேராசிரியரான கே.ஏ.நீலகண்ட சாஸ்திரியாரின் துணி பாகும். இக்கருத்தை அரண் செய்யும் வகையில் மெசப டோமியாவிலும், ஆப்கானிஸ்தானிலும், ஈரான் மேட்டு நிலங்களிலும் வாழ்ந்த மக்களுடைய மொழிகளுக்கும், பழக்க வழக்கங்களுக்கும், பண்பாட்டு நெறிகளுக்கும் திராவிடருடைய பண்பாட்டிற்கும் இடையே மிகச் சிறந்த ஒப்புமைப் பண்புகள் பல காணப்பெறுகின்றன. தாய் வழி மரபுரிமை, நாக வழிபாடு, சக்தி வழிபாடு, உண வினைத் தெய்வத்திற்குப் படைத்தல், தேவதாசி முறை, கோவில் அமைப்பு அரசருடைய அரண்மனை அமைப் பினை ஒத்திருத்தல், வண்ணம் பூசப்பெற்ற மட்பாண் டங்கள், பெருங்கல் காலச் சமாதிகள் முதலானவை சிறப்பு மிக்க ஒப்புமைப் பண்புகளாகும் என்று அவர் சுட்டிக் காட்டியுள்ளார்.[155]

## கருத்துகளின் மதிப்பீடு

இதுவரையில் நாம் கண்ட கருத்துகள் மூவகையான அடிப்படையில் அமைந்துள்ளன. அவை :

1. மக்களினமரபியல் அடிப்படையில் அமைந்தவை.
2. மொழியின் அடிப்படையிலோ, சொல் ஒப்புமை யாலோ அமைந்தவை.
3. பண்பாட்டு ஒப்புமையால் அமைந்தவை.

மக்களின் இன அடிப்படையில் ஆய்ந்து கண்ட உண்மைகள் எல்லாராலும் உடன்படத்தக்கவை. அதிலும் ஒரு சிக்கல் உண்டு. எண்ணிறந்த கலப்பிற்குப் பின் ஆய்ந்தமையாலும் ஓரினத்தவருள் குறிப்பிட்ட ஒரு சிலரே ஆயப்பட்டமையாலும் முடிவுகளில் தவறு நேர வாய்ப்புண்டு. அல்லாமலும் ஒப்புமைகளைக் கொண்டு

---

[155] Nilakanta Sastri, K.A. : *A History of South India* (O. U. P. Madras, 1956), pp. 55-60

இவர்கள் இன்ன இனத்தவர் என்று கூறமுடியுமேயன்றி இங்கிருந்துதான் இவர்கள் இங்குச் சென்றுர்கள் என்று மக்களின் இன அடிப்படையில் அறுதியிட்டு உறுதியாகக் கூறவியலாது.

எனவே உடலமைப்புப் பண்புகளால் நடுநிலக்கடல் பகுதி மக்களோடு ஒப்புமை உடையவர்களாகத் தமிழர் இருப்பதனுல் தமிழர் நடுநிலக்கடல் பகுதியிலிருந்து வந்தனர் என்று கொள்பவர் கருத்து எத்துணைப் பொருத்தமானதோ அத்துணைப் பொருத்தமானதாகத் தமிழகத்திலிருந்து நடுநிலக்கடல் பகுதிக்குச் சென்றனர் என்று கூறுவதும் அமையும்.

பண்டைய சுமேரியரோடு திராவிடரைத் தொடர்பு படுத்தி உரைப்பவர்களே, திராவிடர் எகிப்திலிருந்து வந்தனர் என்று கூறுகின்றனர். எகிப்து, மெசபடோமியா முதலான பகுதிகளில் அகழ்ந்தெடுக்கப் பெற்றுள்ள பல தொல்பொருள் சின்னங்கள் இந்தியாவின் தொல்குடிகளான திராவிடருடைய பெருங்கல் காலச் சின்னங்களோடு பெரிதும் ஒத்திருத்தலால் அவர்கள் இவ்வாறு கருதுகின்றனர்.

திராவிடர்கள் சித்தியமொழி பேசும் மக்கள் இனத்தைச் சேர்ந்தவர்கள் என்னும் கருத்து இக்கால இனமரபியல், தொல்பொருளியல், மொழியியல் சார்ந்த ஆராய்ச்சிகளால் தவருகப் போய்விட்டது. 'சித்திய மொழி இனம் என்று கூறுவதே ஒரு கற்பனை' என்பது மொழியியல், மானிடவியல் ஆராய்ச்சியால் புலனுகின்றது.[156]

மற்றும் மேற்காசியாவிலிருந்தும் நடுநிலக்கடற் பகுதியிலிருந்தும் திராவிடர்கள் இந்தியாவிற்கு வந்தனர் என்று சொல்லப்படும் கருத்தினை மறுப்பவருமுண்டு.

---

156 Grierson, J. A.: *Linguistic Survey of India* (Government Press, Calcutta, 1906), Vol. IV, p.282 & Chase, Stuart: *The Proper Study of Mankind* (Phoenix House, London, 1965), p. 117

இந்தியாவிலிருந்து சென்று தொல்பழங்காலத்திலேயே அந்நாடுகளில் திராவிடர்கள் குடியேறினர் என்று நாம் ஏன் கொள்ளக்கூடாது? இந்தியாவிற்கு வந்தார்கள் என்பதற்குரிய சான்றுகளையே இங்கிருந்து வெளி நாடுகளுக்குச் சென்றமைக்குரிய ஆதாரங்களாகக் காட்டலாமே என்பது அறிஞர் சிலருடைய கருத்தாகும்.

டாக்டர் ஹால் என்ற அறிஞர் சுமேரியருக்கும், திராவிடருக்கும் உள்ள உடற்கூற்று ஒற்றுமையைக் கொண்டு சுமேரியர் என்பார் திராவிட இனத்தைச் சேர்ந்தவர் என்றும், அவர்கள் இந்தியாவிலிருந்து பாரசீகத்தின் வழியாக டைக்கிரிஸ், யூப்பிரடிஸ் ஆறுகள் பாயும் சமவெளிக்குச் சென்று குடியேறினர் என்றும் தம் முடைய "அண்மைக் கிழக்ககப் பண்டைய வரலாறு" என்னும் நூலில் தெரிவித்துள்ளார்.[157]

இக்கருத்தினை வலியுறுத்தும் வகையில் டாக்டர் மக்லீன், "பிற்காலத்தில் திராவிடர் என்ற பெயரால் சுட்டப்பெற்ற மக்களினத்தவர் சிந்துவெளியில் வாழ்ந்து வந்தனர்; அவர்களுள் ஒரு பிரிவினர் கடல் வழியாகவும், நில வழியாகவும் மேற்கு நோக்கிச் சென்றனர்; கிழக்குப் பாபிலோனியாவில் உள்ள சூமர் மாநிலத்தில் அவர்கள் நிலையாகத் தங்கி வாழ்ந்தனர்; அப்பொழுது அவர்கள் சுமேரியர் என்ற பெயரைப் பெற்றனர்; முதலில் அவர்கள் புனித பூமியான பாலஸ்தீனம் எருசலேம் வரைக்கும், பின்னர் அங்கிருந்து ஆப்ரிக்காவிற்கும் ஐரோப்பாவிற்கும் சுமேரிய–திராவிட நாகரிகத்தைக் கொண்டுசென்று பரப்பினர் என்று கருதலாம்; இதை மறுப்பதற்குத் தக்க காரணங்களில்லை"[158] என்று அறிவித்துள்ளமை இங்குக் குறிப்பிடத் தக்கதாகும்.

---

[157] Hall, H.R. : *The Ancient History of the Near East* (Methuen & Co., London, 1952), p. 173

[158] *Quarterly Journal of the Mythic Society*, Vol. XIX, No. 3, p. 17

### ஹெய்மெண்டார்ப்பின் கருத்துகளில் காணப்பெறும் குறைகள்

திராவிட இனத்தவர் கி.மு. ஐந்தாம் நூற்றாண்டு அளவில் தென்னிந்தியாவில் குடியேறினர் என்னும் ஹெய்மெண்டார்ப்பின் கருத்து ஆராய்ச்சிக்குரியதாகும். பிரமகிரியின் பழம்பொருள் சின்னங்களை இந்தியத் தொல்பொருள் ஆராய்ச்சித்துறையின் தலைமை இயக்குநராக (டைரக்டர் ஜெனரலாக) இருந்த சர் மார்ட்டிமர் வீலர் நேரில் ஆராய்ந்தவராவர். அங்குக் கிடைத்துள்ள பெருங்கல் காலப் பண்பாட்டுச் சின்னங்களில் உள்ள பொருள்கள் யாவும் கி.மு. 200 அளவில் தென்னிந்திய மக்கள் பயன்படுத்தியவை என்று அவர் அறிவிக்கின்றார்.[159] நாம் பிரமகிரிச் சின்னத்தின் காலத்தைக் கி. மு. 500-க்கும் 200-கும் இடைப்பட்டதாகக் கொள்ளலாம். இக்காலத்தில்தான் தென்னிந்தியாவிற்குள் திராவிடர்கள் நுழைந்தனர் என்னும் கருத்து நமக்குக் கிடைத்துள்ள வேறுபல சான்றுகளுக்கு முரணாகத் தோன்றுகிறது. கி.மு. 500 அளவில் திராவிடர்கள் இந்தியாவிற்கு வந்தனர் என்றால் இன்று வரை போற்றப்பட்டுவரும் வரலாற்று முறையை முதலில் மாற்றியமைக்க வேண்டும். ஆரியர் இந்தியாவிற்கு வந்தது கி.மு. 2000 அளவில் என்பதை வரலாற்று அறிஞர்கள் ஒப்புக்கொண்டுள்ளனர்.[160] ஆரியர்கள் இந்தியாவிற்கு வந்தபொழுது இந்நாட்டில் வாழ்ந்த மக்கள் திராவிடர், ஆஸ்திரேலிய பழங்குடி மக்கள், முண்டர்கள் முதலானோராவர். இருக்கு வேதத்தில் இருபது திராவிடமொழிச் சொற்கள் இடம் பெற்றிருப்பதை டாக்டர் பர்ரோ சுட்டிக்காட்டியுள்ளார்.[161] கி.மு. 500 அளவில் திராவிடர்கள் இந்தியாவிற்கு

---

159 *Ancient India*, No. 4, pp.180-202; *Indo-Asian Culture* (January 1954), pp. 238-247

160 Majumder, R.C. (Ed.) *Op. cit.*, p. 206

161 Burrow, T. : *The Sanskrit Language* (Faber, London, 1954), p. 387

வந்தனர் என்றால், ஆரியருக்குப் பின்பு நெடுங்காலம் கழித்துத் திராவிடர்கள் இந்தியாவிற்கு வந்தனர் என்று பொருள்படும். இது வரலாற்று நிகழ்ச்சிக்கு மாறு பட்டது; வரலாற்று வழுவுடையதாகும்.

கி.மு. மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த அசோகனின் கல்வெட்டுகள் தென்னாட்டில் சேர, சோழ, பாண்டியரு டைய ஆட்சியைப்பற்றிக் குறிப்பிடுகின்றன. நாடோடி களாக இருந்த மக்கள் நிலைத்து வாழத் தொடங்கி, நாகரிகத்தில் சிறப்புற்று விளங்கக் குறைந்தது ஆயிரம் ஆண்டுகளாகிலும் தேவைப்படுவதைப் பிறநாட்டு வரலாற்று ஏடுகளும் எடுத்தியம்புகின்றன. தமிழகத்தில் மூவேந்தர்களுடைய ஆட்சி கி.மு. மூன்றாம் நூற்றாண்டு அளவில் சிறப்புற்று விளங்கியது என்றால், அதற்கு முன்னர் பல நூறு ஆண்டுகள் தமிழருடைய நாகரிகம் வளர்ச்சியுற்றிருக்க வேண்டும் என்பதை நாம் கோடி காட்ட வேண்டியதில்லை. கி.மு. 500 அளவில் திராவிடர் கள் தென்னாட்டிற்கு வந்தனர் என்பது மெய்மையானால், 'இருநூறு ஆண்டுகளாகிய மிகக் குறுகிய காலத்தில் தமிழர் இனம் நாகரிகத்தில் சிறப்புற்றிருக்க முடியுமா? சிறந்ததோர் இலக்கிய வளர்ச்சியைத் தமிழ்மொழி அடைந்திருக்க முடியுமா?' என்ற ஐயங்கள் உலக வரலாற்றை அறிந்தவர்களிடத்து எழாமற் போகா.

"ஆரியர்கள் வட இந்தியாவிற்கு வந்த பின்னரே, கிழக்கு ஈரானிலிருந்து திராவிடர்கள் தென்னிந்தியா விற்குள் நுழைந்தனர் என்னும் ஹெய்மெண்டார்ப்பின் கருத்து பல்வேறு காரணங்களினால் வரலாற்று நிகழ்ச்சி களுக்கு முரண்பட்டதாகத் தோன்றுகிறது. இந்தியா வின் பெருங்கல் கால நாகரிக மக்கள் நடுநிலக்கடல் இனத்தைச் சேர்ந்தவர்கள் என்பதை நாம் வேறு வகையில் நிலைநாட்டலாம். திராவிட மொழிகளின் எண்ணுப் பெயர்களும் மூவிடப் பெயர்களும் பேரளவிற்கு அமிதோ-செமிடிக் (அல்லது சில ஆப்பிரிக்க மொழி களோடும், பாஸ்க்) மொழிகளோடும் நெருங்கிய ஒற்றுமையுடையனவாகக் காணப்பெறுகின்றன. ஆனால்,

அவற்றிற்கும் சுமேரிய மொழிக்கும் இடையே மிகமிகக் குறைந்த அளவே ஒற்றுமைப் பண்புகள் உள்ளன. இதனால், நெடுங்காலத்திற்கு முன்பே, திராவிடர் மெசபடோமியாவில் அமிதோ-செமிடிக் மக்களின மூதாதையரோடு நெருக்கமான தொடர்புடன் வாழ்ந்திருக்க வேண்டும் என்பதும், ஆனால், சுமேரியர் அங்கு வருவதற்கு முன்னரே அவ்விடத்தை விட்டுத் திராவிடர் புறப்பட்டிருக்கவேண்டும் என்பதும் புலனாகின்றன என்று லகோவரி கூறும் கருத்து இங்குக் கருதத்தக்கது.[162]

திராவிடர் மேற்குக் கடற்கரையோரமாகத் தென்னிந்தியாவிற்குள் நுழைந்தனர்; அவர்கள் வட இந்தியாவில் குடியேறாது தென்னாட்டிலேயே முதன்முதல் நிலைத்து வாழத் தொடங்கினர் என்னும் ஹெய்மெண்டார்ப்பின் கருத்து உண்மைக்கு மாறானதாகும். வேதகால வட மொழி இலக்கியங்களுள் வட இந்தியாவில் வாழ்ந்த பழங்குடி மக்களைப்பற்றிய குறிப்புகள் பல காணப் பெறுகின்றன. நிஷாதர்கள், விராடர், தஸ்யூக்கள் என்னும் பல பெயர்களால் அவர்களை ஆரியர் சுட்டியுள்ளனர். அப்பெயர்களுக்கு உரியவர்களுள் திராவிடர்களும் ஒருவராவர். பிற்காலச் சமஸ்கிருத மொழி நூல்களுள் 'திராவிடர்' என்னும் சொல்லாட்சியும், அவர்களுடைய நாகரிகத்தைப் பற்றிய குறிப்புகளும் இடம் பெற்றிருப்பதை நாம் எளிதில் புறக்கணித்துவிட முடியாது. காத்தியாயனர் சோழ, பாண்டிய மன்னர்களைப்பற்றிப் பேசுகிறார் (பாணினியம், IV i-168, 175 உரை). மாபாரதத்திலும் மனுதரும சாத்திரத்திலும் திராவிடரைப் பற்றிய குறிப்புகள் காணப்பெறுகின்றன. இவை யாவற்றையும்விட மொகஞ்சதாரோ, ஹாரப்பாப் பகுதிகளில் சிறப்புமிக்க நாகரிக நிலையில் வாழ்ந்த மக்களுள் ஒரு பகுதியினரேனும் திராவிடர்களாக இருந்திருக்க வேண்டும் என்பதை மறுக்க இயலாது. எனவே, ஆரியருக்கு முன்பே வட இந்தியாவிலும், தென்னிந்தியாவிலும் திராவிடர்கள் வாழ்ந்திருக்க

---

162 N. Lahovary; *op. cit.*, p. 370

வேண்டும் என்று கருதுவதற்கு வலிமையான சான்றுகள் பல உள்ளன. அவற்றை யாரும் எளிதில் புறக்கணிக்க முடியாது[163] என்று டாக்டர் டி.சி. சர்க்கார் மொழிந்துள்ளமை இங்கு நினைவுகூர்தற்குரியதாகும்.

வட இந்தியாவில் திராவிடமொழிக் குடும்பத்தைச் சேர்ந்த திருத்தமடையாத மொழிகள் பல இன்றும் பழங்குடி மக்களால் பேசப்பட்டுவருகின்றன. குறிப்பிட்ட சில மலைப்பகுதிகளிலும், காட்டுப்பகுதிகளிலும் வாழுகின்ற நாகரிக வளர்ச்சியுறாத மக்களால் அவை பேசப்பட்டுவருகின்றன. மொழியியல் பேராசிரியர் டாக்டர் எமனோ அம்மொழிகளை ஆராய்ந்துள்ளார். வட இந்தியாவிலும் நடு இந்தியாவிலும் மட்டும் பதினொன்கு திராவிடமொழிகள் வழங்கிவருகின்றன. அவற்றுள் பீகாருக்கும் வங்காளத்திற்கும் இடையில் உள்ள காடுகளிலும் மலைகளிலும் கூய், கூவி, குரூக், மால்டோ (இராஜ்மஹால்) என்னும் மொழிகள் பெருவழக்காக உள்ளன. இத்தகைய திராவிட மொழிச் சின்னங்கள் வட இந்தியாவில் இன்றுவரை நிலைத்த வாழ்வைப் பெற்றிருக்கின்றன. இவையனைத்தும் தொல்பழங் காலத்தில் திராவிடர்கள் தென்னிந்தியாவில் மட்டு மல்லாமல் வட இந்தியாவிலும் வாழ்ந்திருக்க வேண்டும் என்ற உண்மையை உணர்த்துகின்றன.[164] டாக்டர் ஆரியேந்திர சர்மா இது முற்றிலும் பொய் என்று கூறுவது அவருடைய விழைவார்வத்தையே காட்டுகிறது.[165]

சென்னைப் பல்கலைக்கழகத்தில் தொல்பொருள் ஆராய்ச்சித்துறைத் தலைவராக விளங்கிய டாக்டர் டி. வி.

---

[163] **Sircar, D. C. :** *Studies in Society and Administration of Ancient and Medieval India* (Mukhopadhyay, Calcutta, 1967), pp. 31-40

[164] *Proceedings of the American Philological Society*, Vol. 98, No. 4 (August 16, 1954), p. 287

[165] *Proceedings of the All India Oriental Languages Conference* (Delhi 1959), p.196.

மகாலிங்கம் அவர்கள் டாக்டர் ஹெய்மெண்டார்ப்பு வெளியிட்டுள்ள ஆராய்ச்சிக் கருத்தினை மதிப்பீடு செய்கின்ற வகையில் 'தென்னிந்தியாவில் தொல்பொருள் ஆராய்ச்சி' என்னும் கட்டுரையில் பின்வருமாறு வரைந்துள்ளார் :

"பிரமகிரியில் கண்டெடுக்கப்பெற்ற படிவுப் பொருள்களைக் கொண்டு கிறித்தோபர் பியூரர் ஹெய்மெண்டார்ப்பு இந்நாகரிகத்தினை உருவாக்கிய மக்கள் திராவிடர்களாக இருக்கலாம் என்றும், அசோகனின் காலத்திற்கு முன்பு அதாவது கி. மு. 700-க்கும் கி. மு. 400-க்கும் இடையில் தென்னிந்தியாவினுள் அவர்கள் குடியேறியுள்ளனர் என்றும் கருதுகிறார். கிறித்துவ ஊழியின் முதலிரு நூற்றாண்டுகளில் சீரும் சிறப்பும் பெற்று, இலக்கிய வளத்துடன் திகழ்ந்த தமிழ்மொழி பெருங்கல் காலச் சமாதி நாகரிகக் காலத்திய மக்களிடையே திருத்தம் பெறாத குழுவின மொழியாக[166] வழங்கியிருக்க வேண்டும் என்பது இங்கு நினைவுகூர்தற்குரியதாகும். எனவே, தொல்பழங்காலத் தமிழ்மொழி 'செந்தமிழ்' மொழியாக வளர்ச்சி அடைவதற்குச் சில நூற்றாண்டுகளாகிலும் தேவைப்பட்டிருக்கும். இக்காரணத்தினால், பெருங்கல் காலப் பண்பாட்டின் தொடக்கக் காலத்தை இன்னும் சிறிது முற்பட்ட காலமாக அதாவது கி. மு. 1000 என்ற அளவிற்காகிலும் தள்ளமுடியாதா என்பதை முக்கியமாக நாம் ஆராயவேண்டியவர்களாக இருக்கிறோம்[167]".

இந்தக் கருத்தினை யாரும் எளிதில் புறக்கணிக்க முடியாது. இவ்வாய்வினால் ஹெய்மெண்டார்ப்பின் கருத்து முடிந்த முடிவாகக் கொள்ளத்தக்கது அன்று என்பது புலனாகின்றது.

166 Patois

167 *Journal of Madras University*, Sec. A : Humanities Centenary Number, 1958, p. 148

## 5. தமிழகத்தின் பழங்குடி மக்களே திராவிடர்

சென்ற நூற்றாண்டின் இறுதியிலும், இந்நூற்றாண்டின் தொடக்கத்திலும் மேலைநாட்டு அறிஞர்களுள் பலர் மக்களினம் உலகத்தின் பல பகுதிகளுள் தோன்றியுள்ளதை ஆராய்ந்து கண்டனர். மக்களினம் தோன்றிய பகுதிகளுள் தென்கிழக்கு ஆசியப்பகுதியும் ஒன்றாகு மென அவர்கள் மொழிந்துள்ளனர்.

### லெமூரியா அல்லது குமரிக்கண்டம்

ஸ்காட் எலியட் என்ற அறிஞர் 'அழிந்துபோன லெமூரியா' என்னும் நூலில் "ஆப்ரிக்காக் கண்டம் முதல் ஆஸ்திரேலியாக் கண்டம் வரையிலும், விந்தியம் முதல் கிழக்கிந்தியத் தீவுகள் வரையிலும் பரந்ததொரு நிலப்பரப்பு அமைந்திருந்தது; அங்கு மனிதனைப் போன்ற குரங்குகள் பேரளவில் இருந்தன; அவற்றை 'லெமூர்'[168] என்று ஸ்கிலேட்டர்[169] குறிப்பிடுவதனால் அவை வாழ்ந்த நாட்டை 'லெமூரியா' என்ற பெயரால் அழைக்கலாம்" என்று குறிப்பிட்டுள்ளார்.[170] அந்நிலப் பரப்பு தெற்குப் பெருங்கடலில் இருந்தது என்றும், முதன்முதல் மனிதஇனம் அவ்விடத்தில் தோன்றியிருக்க வேண்டும் என்றும் அவர் பல சான்றுகள் காட்டி நிறுவி யுள்ளார். அவருடைய கருத்தை அரண்செய்யும் வகையில் சர் வால்டர் ராலே லெமூரியாவே மக்க ளினம் தோன்றிய முதல் நிலப்பரப்பு என்னும் கருத்தினை நிலைநாட்ட முயன்றுள்ளார். கடல் கொண்டதனால் அந் நிலப்பரப்பு அழிந்தபொழுது, அங்கிருந்த மக்கள் இந்தி யாவின் எஞ்சிய பகுதியில் குடியேறினர் என்பதற்குப் பல ஆதாரங்களை அவர் காட்டியுள்ளார்.[171]

பேராசிரியர் ஹெக்கல் என்பார் 'படைப்பின் வரலாறு' என்னும் நூலிலும், 'மனித இனத்தின்

---

[168] **Lemur**

[169] **Sclater**

[170] **Elliot, Scott;** *Lost Lamuria,* **pp. 23-38**

[171] **Raleigh, Sir Walter:** *History of the World,* **p. 99**

மரபுக் குடிவழி' என்னும் நூலிலும் இந்தியப் பெருங் கடல் இருக்குமிடத்தில் நீண்டநெடுங் காலத்திற்கு முன்பு சுந்தாத் தீவுகளிலிருந்து ஆசியக் கடற்கரை வழியாக ஆப்ரிக்காவின் கீழைக்கரை வரையிலும் பெரு நிலப்பரப்பு ஒன்று இருந்தது என்பர். இந்த நிலப் பரப்பின் ஒரு பகுதியில்தான் மனிதன் தோன்றியிருக்க வேண்டும் என்னும் கருத்தை அவர் தெளிவுபடுத்தி யுள்ளார்.[172]

இக்கருத்துகளின் வன்மை மென்மைகளை ஆராய்ந்த சர் ஜான் எவான்சு கடல்கொண்ட லெமூரியா நாட்டைப் பற்றிய செய்திகளை உடன்படுவதோடு, தமக்குக் கிடைத்த பலவகையான சான்றுகளாலும் தென் னிந்தியாவே மனித இனத்தின் மூலத் தாயகமாக இருக்க வேண்டும் என்று தாம் நம்புவதாகத் தெரிவித் துள்ளார்.[173]

நிலப்பொதியியல் ஆராய்ச்சியில் ஈடுபட்ட அறிஞர் சிலரும் 'லெமூரியா' என்னும் நிலப்பரப்பு கடலில் மூழ்கிய பின்னர் இந்திய நிலப்பரப்பில் உண்டான மாற்றங்களைச் சுட்டுகின்றனர். அந்நிலையில் மனித இனம் அக்கடல்கொண்ட நிலப்பரப்பின் ஒரு பகுதி யாகிய தமிழகத்தில் தோன்றியிருக்க வேண்டும் என்ற கருத்தினைத் தெளிவுறுத்தியுள்ளனர்.

"கங்கையாறு பாயும் நிலப்பரப்பு, இமயமலைப் பகுதி ஆகியவற்றிலிருந்து தென்னிந்தியா நிலப்பொதி யியல் அடிப்படையில் வேறுபட்டது. இப்போது இந்தியப் பெருங்கடல் இருக்கின்ற இடத்தில் ஆப்ரிக்கா வரையிலும் தொடர்ச்சியாக நீண்டிருந்த பழைய கண்டத்தின் எஞ்சிய பகுதி இன்றைய தென்னிந்தியா வாகும். இதன்கண் உள்ள பாறைகளும் குன்றுகளும்

---

172 Hackel: (1) *History of Creation*, Vol. I, p. 361; Vol. II, pp. 325-326. (2) *The Pedigree of Man*, p. 99

173 Evans, Sir John : 'The Home of Mankind' in the *Science of Man*, August, 1901, p. 48

உலகத்திலுள்ள மிகப் பழைய பாறை அமைப்பைச் சார்ந்தவை. இக்குன்றுகளின் பலவிடங்களில் கருங்கற் பாறை படிவுப்பாறையாகப் பரவியிருக்கிறது. ஆகையால், உலகில் தொல்பழங்காலத்தில் உயிர்கள் தோன்றுவதற்கு முன்னர் அது எவ்வாறு இருந்ததோ, அவ்வாறே தென்னிந்தியாவில் இன்றுவரை இருந்துவருகின்றது. சிந்து–கங்கைச் சமவெளி சிந்து ஆறு முதல் கங்கைக் கழிமுகம் வரையில் 2,000 கிலோ மீட்டர் இடைவெளியின்றி நீண்டிருக்கிறது. மண்ணுலகு பதப்பட்டுக் கொண்டிருக்கும்போது, இமயமலை கிளம்பும் முன்னர், கங்கையாற்றுவெளி இருக்குமிடம் கடலாயிருந்தது. இமயமலை கிளம்பியபோது கடல் மறைந்தது. இம்மலையிலிருந்து ஓடிவரும் ஆறுகள் வாரிக்கொண்டு வந்த வண்டல் மண்ணினால் இப்போதுள்ள சமவெளி உண்டாயிற்று'' என்று நிலப்பொதியியல் ஆராய்ச்சியாளர்கள் அறிவித்துள்ளனர்.[174]

இக்கருத்துகள் அனைத்தும் திராவிடர்கள் தமிழகத்தின் தெற்கே இருந்த நிலப்பரப்பு ஒன்றில் தோன்றியவர்கள்; அந்நிலப்பரப்பு பெருவெள்ளத்தினால் கடலினுள் மூழ்கியபொழுது, அவர்கள் வடக்குநோக்கிக் குடியேறினர்; அவ்வாறு அவர்கள் குடியேறிய பகுதி இன்றைய தமிழகத்தின் தெற்குப் பகுதியாகும் என்பனவற்றைத் தெரிவிக்கின்றன. இக்கருத்துகளை வெளியிட்ட அறிஞர்கள் வெறும் இலக்கிய ஆராய்ச்சியாளர்களோ, வரலாற்றாசிரியர்களோ அல்லர். தங்களுடைய காலத்தில் சிறப்புமிக்க நிலப்பொதியியல் ஆராய்ச்சியாளர்களாகவும்[175], இனமரபியல் அறிஞர்களாகவும்[176], மானிடவியல் வல்லுநர்களாகவும்[177] அவர்கள் விளங்கினர் என்பதை நாம் நினைவுகூர்தல் வேண்டும்.

---

[174] Holderness, J.W. : *Peoples and Problems of India*, (London, 1901), pp. 23-24

[175] Geologists

[176] Ethnologists

[177] Anthropologists

இந்தியாவின் பண்டைக்கால வரலாற்றிலும், சிந்து வெளி நாகரிகத்தைப் பற்றிய ஆராய்ச்சியிலும் சிறப் பாகப் பேரீடுபாடு கொண்டு விளங்கியவர் ஹீராசு அடிகளாவர். அவர் திராவிடருடைய தோற்றத்தைப் பற்றியும் ஆராய்ந்துள்ளார். "லெமூரியா எனப்படும் நாட்டில் தோன்றிய மக்கள் அந்நாடு கடல்வாய்ப் பட்ட பொழுது சிதறுண்டு, பல்வேறு திசைகளில் சென்று, அங்கங்கே தங்கி வாழ்ந்தனர். ஆப்ரிக்காவில் சிதறுண்டு தங்கியவர் 'ஆப்ரிக்கர்' என்றும், இந்தியாவைச் சேர்ந்தவர் 'திராவிடர்' என்றும், ஜாவா சுமத்திரா வழியாகச் சீனு போன்ற பகுதிகளுக்குச் சென்றவர் 'மங்கோலியர்' என்றும் பலவகை மக்களாக வாழ நேரிட்டது. இந்நாட்டில் திராவிடர் நன்கு நாகரிக வளர்ச்சி அடைந்தனர். பின்னர், அவர்கள் மேற்குத் திசை நோக்கிப் பயணம் செய்தனர். பல்வேறு நாடு களில் தங்களுடைய குடியிருப்புகளை அமைப்பதில் அவர்கள் வெற்றியும் கண்டனர். மெசபடோமியாவி லிருந்து பிரிட்டீஷ் தீவுகள் வரையில் அவர்கள் பயணம் செய்ததோடு, தங்களுடைய இனத்தை மேலைநாடு களிலும் பரப்பினர். பின்னர் வாழ்ந்த இடத்தின் பெய ரால் 'நடுநிலக்கடல் இனத்தினர்' என்ற பெயரையும் அவர்கள் பெற்றனர். தங்களுடைய நாகரிகத்தை இரு பெருங்கண்டங்களில் பரவச்செய்ததோடு இன்றைய உலக நாகரிகத்தினையும் அவர்கள் தோற்றுவித்தனர்"[178] என்று அவர் மொழிந்துள்ளமை இங்குக் கருதத்தத்தது.

தமிழகத்தின் தொன்மையைப்பற்றி ஆராய்ந்த நிலப் பொதியியல் வல்லுநர்களும், தொல்பழங்கால வரலாற் றில் தேர்ச்சிமிக்க ஆராய்ச்சியாளர்களும், "வட இந்தி யாவில் காணப்படுவதுபோல் எரிகுழம்பு எழுந்து படிந்த மைக்கோ, நிலநடுக்கங்கள் ஏற்பட்டமைக்கோ அறிகுறி கள் ஒன்றும் தென்னிந்தியாவில் காணப்படவில்லை; ஆதலால், உலகம் தோன்றிய காலத்தில் குழம்பாக

---

[178] Heras Rev. Fr.: *Studies in the Proto-Indo Mediterranean Culture*, Vol. I (Bombay, 1953), p. 21.

இருந்த மண் முதலில் குளிர்ந்து அமைந்த நிலப்பகுதி தென்னிந்தியாவாகும்; இவ்விடத்தில் மனிதன் தோன்றி யிருக்கலாம்" என்று குறிப்பிடுகின்றனர்.[179] இவ்வாறு பல்வேறு கோணங்களில் தமிழகத்தின் தொன்மையை— தென்னிந்தியாவின் காலங்கடந்த பழமையை அறிஞர் பெருமக்கள் தங்களுடைய ஆராய்ச்சியின் மூலம் உலகிற்கு உணர்த்த முயன்றுள்ளனர்.

இவ்வாராய்ச்சியாளருடைய கருத்துகளையெல்லாம் கோவைப்படுத்திப் பார்க்கின்றபொழுது, 'லெமூரியா' எனப்படும் குமரிக் கண்டமே திராவிடர்களுடைய மூலத் தாயகமாகும். நடுநிலக்கடல் இனத்தவர் என்று அழைக்கப்பெறும் அந்த இன மக்கள், இந்தியாவின் தென்பகுதியில் தோன்றியவர்களாவர். அப்பகுதி கடல்வாய்ப் பட்ட திராவிடருடைய மூலத்தாயகத்தின் ஒரு பகுதியாகும். அம்மூலத்தாயகம் கடல் கொள்ளப் பட்ட லெமூரியாவில் இருந்தது. அங்கு அரும்பிய நாகரிகமே வடமேற்கு இந்தியப் பகுதியில் சிந்து வெளி நாகரிகமாக மலர்ந்தது. மொகஞ்சதாரோவில் வளர்ந்த திராவிடரின் நாகரிகமே நடுநிலக் கடலை அடுத்த பகுதிகளில் எகிப்திய நாகரிகம் போன்ற பல நாகரிகங்கள் தோன்றக் காரணமாக இருந்திருக்கக் கூடுமெனத் தோன்றுகிறது.[180]

### கடற்கோளும் முச்சங்க காலமும்

தமிழகத்தின் தெற்கே இருந்த ஒரு பெருநிலப் பரப்பு கடற்கோளினால் அழிவுற்றது என்னும் மேலை நாட்டு ஆராய்ச்சியாளர்களுடைய கருத்தினைப் பழைய தமிழ் இலக்கியங்களிலிருந்து சான்றுகள் காட்டி, 'திராவிடர் இந்நாட்டின் பழங்குடி மக்களே' என்னும் கருத்தை நிலைநாட்டத் தமிழகத்தின் மூதறிஞர்கள் பலர் முயன்றுள்ளனர்.

---

179 Ramachandra Dikshitar, V.R. : *Op. cit.*, p. 234

180 Ramachandra Dikshitar, V.R. : *Ibid*, p. 170 & *Origin and Spread of the Tamils* (Kazhagam, Madras, 1971), pp. 35-36

இன்றைய தமிழகத்தின் தெற்கே இருந்த ஒரு பெரிய நிலப்பரப்பு கடல்வாய்ப் பட்டது என்பதற்குப் பழைய தமிழ் இலக்கியத்துள் சான்றுகள் பல உள்ளன. கடல்கொண்ட தென்னாட்டைக் 'குமரிநாடு' என்று அழைத்து வருவதற்குரிய காரணத்தையும் ஆராய்ச்சியாளர்கள் விளக்கியுள்ளனர்.[181] அந்நிலப்பகுதி பல நூறாயிரம் ஆண்டுகள் தமிழ்நாட்டின் ஒரு கூறாயிருந்து, பின்னர்ப் பையப்பையக் கடலுள் மூழ்கிவிட்டது என்பதைப் பண்டைக்காலப் புலவர்களும் பழைய உரையாசிரியர்களும்[182] தெளிவுறுத்தியுள்ளனர்.

இவற்றை ஆராய்கின்றபொழுது சில உண்மைகள் தெரியவருகின்றன. தமிழகத்தைக் கடல்கொண்ட மரபு வழிச் செய்தியோடு, தமிழ் வளர்ச்சியில் ஈடுபட்டிருந்த

---

181 கந்தையா பிள்ளை, ந. சி.: தமிழகம் (ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1943) பக். 7

182 இக்கடற்கோள் நிகழ்ச்சியைச் சங்ககாலப் புலவர் சிலரும், இடைக் காலத்திய உரையாசிரியர் சிலரும் தெளிவாகவும், விரிவாகவும் விளக்கியுள்ளனர். அவர்களுடைய கருத்துகளை யாரும் எளிதில் பொய்யுரை என்று புறக்கணித்து விட முடியாது. மறக்க முடியாத சிறப்பு மிக்க நிகழ்ச்சியாக அவர்கள் அதை மரபு வழியாகப் போற்றி வருகின்றனர் என்பது பின்வரும் பாடற்பகுதிகளின் உரைகளால் தெரிய வருகிறது.

(1) "செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீந்த
முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே" (புறநா. 9)

(2) "வடிவேல் எறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கையும் இமயமும் கொண்டு
தென்திசை யாண்ட தென்னவன் வாழி"
(சிலப். 11 : 18-22)

(3) "மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வௌவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார்நா டிடம்படப்
புலியொடு வில்நீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை
வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்"
(கலி. 104)

முச்சங்கங்களின் வரலாறும் இணைந்து காணப்படுகிறது என்பர் கா. அப்பாத்துரையார். அவர் கூறுவன வருமாறு :

அந்நாடு "தமிழகத்தின் ஒரு பகுதி மட்டுமன்று; தமிழினம், தமிழ் நாகரிகம் ஆகியவற்றின் தாயகம் என்றே கூறவேண்டும். ஏனெனில் தமிழைத் தோன்றுதொட்டு வளர்த்த சங்கங்கள் மூன்றனுள் தலைச்சங்கம் நடைபெற்ற தென் மதுரையும், இடைச்சங்கம் நடைபெற்ற கவாடபுரமும் இக் குமரிப் பகுதியிலேயே இருந்தன.

எனவே, தலைச்சங்க காலமாகிய முதல் ஊழியிலும் இடைச்சங்க காலமாகிய இரண்டாம் மூன்றும் ஊழிகளிலும் இக்குமரிப் பகுதியிலேயே தமிழர் ஆட்சியும் நாகரிகமும் மொழிவளர்ச்சியும் ஏற்பட்டன என்பதும், தெற்கிலிருந்து கடல் முன்னேறி வரவர அவர்கள் (தமிழர்கள்) வடக்கு நோக்கிப் பரந்து சென்றனர் என்பதும் விளங்குகின்றன.

தமிழ் நூல்களில் மூன்று கடற்கோள்களைப் பற்றித் தெளிவான குறிப்புகள் காணப்படுகின்றன. முதல் கடற்கோளால் பஃறுளியாறும் குமரிக்கோடும் கடலால் கொள்ளப்பட்டன. பஃறுளியாற்றின் கரையிலிருந்த தென்மதுரையே பாண்டியரின் தலைநகரும் தலைச்சங்கமிருந்த இடமும் ஆகும். இக் கடற்கோள் நிகழ்ந்த காலத்திலிருந்த பாண்டியனே நெடியோன் என்று புறநானூற்றிலும், நிலந்தரு திருவிற் பாண்டியன் என்று தொல்காப்பியப் பாயிரச் செய்யுளிலும் குறிக்கப்பட்டவனாவான்.

கடல்கோளின் பின்னர் இவன் வடக்கே போய்க் கவாடபுரத்தைத் தலைநகராக்கிக் கொண்டான். இங்கேதான் இடைச்சங்கம் நடைபெற்றது.

தலைச்சங்க நாள்களில் பஃறுளியாற்றிற்கும், குமரியாற்றிற்கும் இடைப்பட்ட பகுதி அளவிலும் சிறப்பிலும் பாண்டிய நாட்டின் மிகச் சிறந்த பாகமாய்

இருந்திருக்க வேண்டும். அது 49 நாடுகளாக வகுக்கப்பட்டிருந்ததென்றும், இரண்டு ஆறுகளுக்கும் இடையே 700 காத இடைவெளி அகன்று கிடந்ததென்றும் அறிகிறோம்.

இரண்டாவது கடற்கோளால் கவாடபுரம் கடல் கொள்ளப்பட்டது. அதன்பின் சிலகாலம் மணலூர் பாண்டியனின் தலைநகராக இருந்தது. பின் மூன்றும் முறைக் கடற்கோளால் அம்மணலூரும் குமரியாறும் அழியவே, பாண்டியன் மதுரை வந்து அங்கே கடைச்சங்கத்தை நிறுவினான்.

சிலப்பதிகாரத்தில் மாடலன் குமரியாற்றில் நீராடியதாகக் கூறப்பட்டிருக்கிறது. ஆனால் கதை முடிந்தபின் எழுதப்பெற்ற நூலினுள் தொடியோள் பௌவமெனக் குமரி கடலாகக் கூறப்பட்டுள்ளது. இவ்விரு காலப் பகுதிகளுக்கும் இடையே, அதாவது கோவலன் இறந்த சில நாட்களுக்குப் பின்னாகக் குமரியாறு கடல்கொள்ளப்பட்டுக் குமரிக்கடலாயிற்று.''[183] *

[183] அப்பாத்துரை, கா., குமரிக்கண்டம் அல்லது கடல்கொண்ட தென்னாடு (கழகம், சென்னை, 1941), பக். 2-3

* கோவலன் காலத்திற்கு முன்பே, ஏறத்தாழக் கி. பி. முதல் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே குமரியாறு கடலால் கொள்ளப் பட்டதாகச் சிலப்பதிகாரம் கூறுகிறது.

"மாமறை முதல்வன் மாடலன் என்போன்
மாதவ முனிவன் மலைவலங் கொண்டு
குமரியம் பெருந்துறை கொள்கையிற் படிந்து"
(சிலம்பு. அடைக்கலக்காதை 13-15)

சிலம்பு 'குமரியம் பெருந்துறை' என்று கூறுகிறது. அதாவது குமரிக் கடலின் துறை என்று கூறுகிறது. உரையாசிரியர் அடியார்க்குநல்லார் 'குமரியாற்றுத்துறை' என்று பொருள் கூறுகிறார். "குமரியாற்றில் தீர்த்தமாடு முறைமையின் ஆடி" என்று பொருள் கூறுகிறார். உரையாசிரியர் கூறுவது பிழை. குமரியம் பெருந்துறை என்பதற்குக் கன்னியாகுமரியின் (குமரிக் கடலின்) துறைமுகத்துறை என்பது பொருள். அக்காலத்து யவன வாணிகரும் குமரிக்கடல் துறைமுகத்தைக் கூறுகின்றனர். ஆகவே கோவலன் காலத்துக்கு முன்னமே குமரியாறு மறைந்து போய்க் குமரிக்கடல் துறைமுகம் ஏற்பட்டுவிட்டது.

—திரு மயிலை சீனி வேங்கடசாமி.

இக்கடற்கோள்களைப் பற்றிய செய்திகள் இலங்கையின் காலவழிச் செய்திக் கோவைகளான தீபவமிசம், மகாவமிசம், இராசாவளி முதலான நூல்களிலும் காணப் படுகின்றன. இந்நூல்களை ஆராய்ந்து, இலங்கையின் வரலாற்றை முறையாக முதன்முதல் எழுதிய ஜே. இ. டென்னண்ட்[184] என்பவர், "இந்தியாவிலிருந்து இலங்கையானது கடலோரத்தில் உண்டாகியதோர் கலக்கத்தால் கிறித்து பிறப்பதற்கு முன் 2387ஆம் ஆண்டில் பிரிவுற்றதாகப் பௌத்தர்களால் சொல்லப்படுகின்றது; மற்றுமொரு முறை கி. மு. 504ஆம் ஆண்டில் பாண்டுவாசா (இலங்கை அரசர்களில் ஒருவன்) காலத்தில் அவ்வாறே ஒரு கடற்கோள் உண்டாயிற்று; இதற்கு 200 ஆண்டுகளுக்குப் பிறகு கி. மு. 306-ல் ஆட்சிபுரிந்த தேவனும்பிரிய திஸ்ஸாவின் காலத்தில் கொழும்புக்கு அருகில் நிலமானது தன்மட்டத்தில் தாழ்ந்து கடலினுள் மூழ்கியது" என்று வரைந்துள்ளார்.[185] கி. மு. இரண்டாயிரத்துக்கு முன்பு ஒரு கடற்கோளும், கி. மு. ஆறும் நூற்றாண்டில் மற்றொரு கடற்கோளும், கி. மு. நான்காம் நூற்றாண்டில் வேறொரு கடற்கோளும் உண்டாகியிருக்க வேண்டும் என்பது அவருடைய கருத்து. அவ்வாறாயின் இன்றைக்கு 4,300 ஆண்டுகளுக்கு முன்பு நிகழ்ந்த முதல் கடற்கோள் இன்றைய தமிழகத்தில் தெற்கே இருந்த நிலப்பரப்பினை—லெமூரியாக் கண்டத்தினை விழுங்கியிருக்க வேண்டும் என்று சில அறிஞர்கள் கருதுகின்றனர்.

வரலாற்றறிஞர்கள் இக்கருத்தை ஒப்புக் கொள்ளத் தயங்குகின்றனர். லெமூரியாவைப் பற்றி இப்பொழுது நமக்குக் கிடைத்துள்ள செய்திகள் அரைகுறையானவை. அவை சரியானவையும் அல்ல. இன்றைய தமிழ்நாட்டிற்குத் தெற்கே சிறிதளவு நிலப்பரப்புக் கூட இருந்திருக்க இயலாது என்று கூறுவது

---

184 **Sir. J.E. Tennent**

185 **Kanakasabhai Pillai, V.** *Op. cit.*, **p. 21 f.n.**

தவறாகும். கன்னியாகுமரிக்குக் கிழக்கே பண்டைக் காலத்தில் நிலப்பரப்பு இருந்திருக்கலாம். வரலாற்றுக் காலத்திற்குச் சற்று முன்பும், வரலாற்றுக் காலத்தின் தொடக்கத்திலும் நிகழ்ந்த கடற்கோள்களினால் அது கடலினுள் மூழ்கியும் இருக்கலாம். ஆனால், மூன்று தமிழ்ச் சங்கங்களின் வரலாற்றில் குறிப்பிடப்பெறும் கடற்கோள்களை வரலாற்றுக் காலத்தில் நிகழ்ந்தனவாகக் கொள்ளுதலே பொருத்தமுடையதாகும். லெமூரியாக் கண்டம் அழிவுற்றது தொல்பழங் காலத்திலேயேயாகும். இந்தியத் துணைக்கண்டம் இன்றைய வடிவத்தையும், நிலையையும் பெற்றது இற்றைக்கு ஐந்து கோடி ஆண்டுகளுக்கு முன்னராகும். அக்காலத்தில் மனிதனே இம்மண்ணுலகில் தோன்றவில்லை. எனவே, வரலாற்றுக் கதிர்கள் சென்று ஒளி வீசமுடியாத தொல்பழங் காலத்தில் இந்தியாவின் தென்பகுதி கிழக்கு மேற்காகப் பரந்துகிடந்த ஒரு பெருநிலப் பரப்போடு தொடர்புடையதாக இருந்திருக்கலாம். ஆனால், மனிதஇனம் தோன்றுவதற்கு முன்னரே இயற்கையில் உண்டான பெருமாற்றங்களாலும், கடற்கோள்களாலும் அந்நிலப் பரப்பு சிதறுண்டு போயிருக்கலாம். ஆதி மனிதன் ஜாவாவில் தோன்றியதாக நம்பப்படுகிறது. அதே காலத்தில் இந்திய முந்நீர் நிலத்திலும் மனிதன் தோன்றி யிருக்கக்கூடும். ஆனால், வரலாற்றுக்காலத் தமிழ் மக்களைத் தொடக்க காலத்திய பழங்குடி மக்களோடு தொடர்புபடுத்துவது மிகைப்படுத்திக் கூறுவதாகும் என்று அந்த வரலாற்றறிஞர்கள் மொழிந்துள்ளனர்.[186]

மற்றொரு சாரார், "மேலே கூறிய அறிஞர்களின் கூற்றுகளையே ஆதாரமாகக் கொண்டு தமிழர்களின் முன்னோர்கள் மறைந்துபோன லெமூரியாக் கண்டத்தைச் சேர்ந்தவர்கள்; வட இந்தியாவும் இமயமலையும் தோன்று

---

[186] Pillay, K. K.: *A Social History of the Tamils* (University of Madras, 1970) pp. 43-44

வதற்கு முன்னரே லெமூரியாக் கண்டத்தின் ஒரு பகுதி யாகத் தமிழ்நாடு விளங்கியது; தமிழர்கள் அங்கு வாழ்ந்துவந்தார்கள் என்னும் சித்தாந்தங்கள் செய்யப் பெற்றிருக்கின்றன; இரண்டு தலைமுறைகளுக்கு முன் னிருந்த தமிழறிஞர்கள் இவ்விதக் கொள்கைகளைக் கொண்டிருந்ததில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை; ஆனால், இன்றும் சிலர் இவைகளைக் கூறிவருவது சற்று விந்தையாயிருக்கிறது" என்று கருதுகின்றனர்.[187]

## புது விளக்கம்

திராவிடர்கள் லெமூரியாக் கண்டத்தில் தோன்றிய வர்கள் என்னும் கொள்கையை மறுப்பவர்கள் காட்டும் காரணங்கள் சில. அவற்றுள் முதன்மையானதாகவும், ஆராய்ச்சியாளர்கள் அனைவராலும் கருதத்தக்கதாகவும் உள்ளது ஒன்றே ஒன்றுதான். மனிதஇனம் தோன்று வதற்கு முன்னரே, லெமூரியாக் கண்டம் கடலினுள் மூழ்கிவிட்டது என்பதே அக்காரணமாகும். இக்கருத் தினை உண்மையென நாம் ஒப்புக்கொள்ளலாம். அவ் வாறு ஒப்புக்கொள்ளுவதால் திராவிடர்கள் தென்னிந்தி யாவில் தோன்றியவர்கள் என்னும் கருத்து பொய்த்து விடாது.

தமிழகத்தில் வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட மக்களுடைய வாழ்க்கையைப்பற்றி ஆராய்ந்த அறிஞர் பெருமக்கள், "தென்னிந்தியாவின் வரலாற்றுக் காலத் திற்கு முற்பட்ட தொல்பொருள் சின்னங்களைக் கருத் துடன் ஆராய்வோமானால் ஓர் உண்மை எளிதில் புல னாகும்; தொல்பழங்காலத்தில் இங்குச் சிறப்புற்று விளங்கிய பண்பாடு ஒரு நிலையிலிருந்து மற் றொரு நிலைக்கு மாறுகின்றபொழுது—வளர்ச்சியுறுகின்ற

---

187 சுப்பிரமணிய ஐயர், ஏ. வி. பண்டைத் தமிழ்நாடு (எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை, திருநெல்வேலி, 1970), பக். 70

பொழுது அமைதியாகவும் படிப்படியாகவும் வளர்ச்சி யுற்றிருப்பதைக் காணுகின்றோம்; பண்டை மக்களோடு புதிதாக இந்நாட்டினுள் நுழைந்த மக்கள் தங்கள் நாகரிகத்தைத் திணித்துப் பழைய பண்பாட்டிற்குப் பேரழிவு உண்டாக்கியதற்கு யாதோர் அறிகுறியும் இது வரை இங்குக் கிடைக்கவில்லை; புதிய கற்கருவிக் காலத் திய இந்தியாவின் படத்தை நாம் ஆய்ந்து பார்ப்போ மாறல் ஒரேவகையான பண்பாடுடைய மக்கள் நாடு முழு வதிலும் நெருக்கமாக வாழ்ந்துவந்ததை நாம் காண் போம்; மேலும், அம்மக்கள் இந்நாட்டின் தொல்பழங் குடிகளாகவே தோன்றுவர்; பழைய தமிழ் இலக்கியத்தில் போற்றப்பட்டுவரும் மரபும் இக்கருத்தினை அரண் செய் கிறது; தமிழ்மொழியின் மிகப் பழைய அடுக்குகளில் புதிய கற்கருவிக் காலத்திற்குரிய சுவடுகள் மிகப் பல வாகக் காணப்படுகின்றன; அதையடுத்துத் தோன்றிய இரும்புக்கருவிக் காலப் பண்பாடு அரும்பியமைக்குரிய தடயங்களையும் நாம் அவற்றில் கண்டறிய முடிகிறது" என்று அறிவித்துள்ளமை[188] இங்குச் சிந்தித்தற்குரிய தாகும்.

தென்னிந்தியாவில் கற்காலத்திற்குப் பிறகு அயல் நாடுகள் பலவற்றில் காணப்படுவதைப்போன்று செம்பு, வெண்கலக்கருவிக் கால நாகரிகங்கள் தோன்றாது நேரடியாக இரும்புக்கருவிக் கால நாகரிகமே தோன்றி யது. புதிய கற்கருவிக் காலப் பழம்பொருள் சின்னங் களை ஆராய்ந்ததன் பயனாகக் கற்கருவிக் கால நாகரிகத் திற்கு எத்தகைய பேரழிவும் உண்டாகவில்லை என்பது புலனாகின்றது.

இவ்விரு நாகரிகங்களும் ஒன்றன்மீது மற்றொன்று படிந்தும் காணப்படுகின்றன. இரும்பினால் கருவிகள் செய்யப்பெற்ற காலத்திலும் கற்கருவிகள் புழக்கத்தில்

---

[188] **Iyengar, P. T. S.:** *The Stone Age in India* **(Government Press, Madras, 1926), pp. 41-42**

இருந்ததை இரும்புக் காலத்தைச் சேர்ந்த கல்லறைகளில் நாம் காணுகின்கிறோம்.[189]

உலகச் சிறப்புமிக்க மாபெரும் உலோகத்தொழிற் கலையியல் வல்லுநரான பேராசிரியர் கௌலாந்து,[190] "ஐரோப்பாவில் இரும்புத் தொழில் தொடங்குவதற்கு முன்பே தென்னிந்தியாவில் இரும்புத் தொழில் செய்யப் பட்டு வந்ததாக அறிஞர்கள் கருதுகின்றனர்; அங்கு இரும்பை உருக்கிக் காய்ச்சுவதைத் தற்செயலாகவே ஆதிகாலத்திய மக்கள் கண்டறிந்திருக்கவேண்டும்; கற்கருவிக் கால மக்கள் பெரிதும் குன்றுகளிலும், மலைச் சரிவுகளிலும், வளமிக்க செறிந்த காடுகளின் ஓரங் களிலும் வாழ்ந்தனர்; இரும்பினைக் கண்டறிந்த பிறகே, ஆதி மனிதர் காட்டினைத் தம்முடைய வாழ்விடமாகக் கொண்டிருக்கலாம் என்று கருதுவதே பொருத்தமாகத் தோன்றுகிறது; இரும்புக் கருவிக் கால நாகரிகமே குன்றுகளில் வாழ்ந்த மக்களைக் காடுகளில் சென்று வாழு மாறு தூண்டியது; மிகப் பழைய காலம் முதல் இரும் பைப் பயன்படுத்திவருவதற்குரிய தடயங்கள் இந்தியா வில் கிடைத்துள்ளன; மேலும் துருப்பிடிக்காத வகை யில் இரும்பைச் செய்யும் சிறப்பு மிக்கதோர் முறையை யும் அவர்கள் அறிந்திருந்தனர்" என்று இரும்புக் கருவிக் கால நாகரிகம் தென்னிந்தியாவில் தோன்றிய வரலாற்றைக் குறிப்பிட்டுள்ளார்.[191] அவருடைய கூற்று, தமிழகத்தில் குறிஞ்சி நிலத்தில் நாகரிகம் அரும்பி, முல்லை நிலத்தில் போதாகி, மருத நிலத்தில் மலர்ச்சி யடைந்ததைக் கோடிகாட்டுகின்றது. இவ்வடிப்படையில் நோக்குகின்றபொழுது, பேராசிரியர் சீனிவாச ஐயங்கார் கருதுவதைப்போன்று இரும்புக்கருவிக் கால நாகரிகம் தமிழகத்தில் குறிஞ்சி நிலத்தின் கற்கருவிக் கால

---

[189] **Iyengar, P. T. S.:** *Pre-Aryan Tamil Culture*, **p. 5 (Reprint from the** *Journal of Indian History*, **Vol. III)**

[190] **Prof. M. Gowland**

[191] *Anthropology on the March*, **p.** 79

நாகரிகத்திலிருந்து படிப்படியாக வளர்ச்சியுற்றதாகவே தோன்றுகிறது.

தென்னிந்தியாவில் வாழ்ந்துவந்த திராவிட இனத்து மக்களுள் ஒரு சாரார் கி. மு. ஐயாயிரம் அளவில் வாணிகத்தின் பொருட்டுக் கடல்வழியாகவும், நிலவழியாகவும் மேற்காசிய நாடுகளோடு தொடர்பு கொண்டிருக்கலாம். இத்தொடர்பினால் நடுநிலக்கடல் பகுதியில் திராவிடருடைய குடியேற்றங்கள் சில அமைக்கப்பெற்றிருக்கலாம் என்றும் நாம் கருத இடமுண்டு.[192]

சற்றேறக்குறைய ஆயிரம் ஆண்டுகள் அங்குத் திராவிட இனத்தவர் நிலைத்து வாழ்ந்திருக்கக்கூடும். செமிடிக்கு இனத்தவரின் தாக்குதல் காரணமாகத் திராவிட இனத்தவருள் ஒரு குழுவினர் தங்கள் கருத்துகளும் கருவிகளும் நிறைந்த பண்பாட்டோடு கிழக்கு நோக்கிப் புறப்பட்டுப் பையப்பைய ஈரானைக் கடந்து, இந்தியாவின் வடமேற்கு எல்லைப்புற வழியாக இந்தியாவிற்குள் நுழைந்திருக்கலாம். வடஇந்தியாவில் அவர்கள் பரவலாகத் தங்கியிருக்கலாம். பின்னர், அவர்களுள் ஒரு கிளையினர் மேற்குக் கடற்கரை ஓரமாகத் தென்னிந்தியாவை அடைந்திருக்கக்கூடும். அந்நிலையில், தங்களுடைய பண்பாட்டோடு நெருங்கிய தொடர்புடைய தென்னிந்திய திராவிட மக்களோடு புதியதாக வந்தவர்கள் இரண்டறக் கலந்துவிட்டனர் என்று கூறினால் அது தவறாகாது. தென்னிந்தியத் திராவிட இனத்தவர் புதிய கற்கருவிக் காலப் பண்பாட்டிலிருந்து

192 D. H. Gordon, *The Pre-historic Background of Indian Culture* என்னும் நூலில் இந்தியாவிற்கும் நடுநிலக்கடல் பகுதிக்கும் நெருங்கிய வாணிகத் தொடர்பு இருந்துவந்ததைத் தெளிவாக விளக்கியுள்ளார். கி. மு. ஆயிரத்திற்கு முன்பே தென்னாட்டின் மேலைக் கடற்கரைப் பகுதிகளிலிருந்து தெற்கு அரேபியாவிற்கு அடிக்கடி மரக்கலங்கள் சென்று வந்தமைக்குரிய சான்றுகளை அவர் காட்டியுள்ளார். இச்சான்றுகளைத் தொல்பழங் காலத்திலேயே திராவிட இனத்தின் ஒரு கிளையினர் தென்னிந்தியாவிலிருந்து நடுநிலக்கடற்பகுதிக்குச் சென்று குடியேறியமைக்குத் தக்க அடிப்படைச் சான்றுகளாக நாம் காட்டலாம்.

பையப்பைய வளர்ச்சியுற்று இரும்புக் கால நாகரிகத்தைப் புதிதாக வந்த திராவிடரிடமிருந்து கற்றிருக்கலாம். இவ்வடிப்படையில் நோக்குவோமாஞல் திராவிடருக்கு முற்பட்ட பழங்குடி மக்கள் என்று சொல்லப்படுகின்ற ஆஸ்திரிக் மக்கள் இனத்தவரும் பண்டைத் திராவிட இனத்தின் நாகரிக வளர்ச்சியுருத ஒரு கிளையினராகவே இருந்திருக்கலாம் என்பது புலனுகும்.

## 6. திராவிடர் பண்பாடு

ஆரியர் வருகைக்கு முன்பே நாகரிகத்தில் திராவிடர் நன்கு முதிர்ச்சியுற்றிருந்தனர். திராவிடருக்கு முற்பட்டவர் என்று சொல்லப்படும் ஆஸ்திரேலிய பழங்குடி மக்களின் மூதாதையரைக் காட்டிலும் திராவிடர்கள் சிந்தனைத் திறனிலும் பண்பாட்டு வளர்ச்சியிலும் சிறந்த முறையில் முன்னேற்றம் அடைந்திருந்தனர். சிற்றூரைச் சார்ந்த பண்பாடாக ஆஸ்திரிக் மக்களுடைய வாழ்க்கை அமைந்திருந்தது. ஆனல், திராவிடருடைய நாகரிகம் நகரத்தை—மருத நிலத்தை மையமாகக்கொண்டு மாட்சியுற்றது.[193] வேளாண்மைத் தொழிலிலும் கடல் வாணிகத்திலும் திராவிடர் சிறப்புற்று விளங்கினர். சமஸ்கிருத மொழியில் பட்டணத்தைக் குறிக்கும் ' நகரம் ' என்னும் சொல்லே திராவிட மொழிச் சொல்லாகக் கருதப்படுகிறது.[194] இதனுல், ' நாகரிகம் ' என்னும் சொல் நகர் அகத்துச் சிறந்து விளங்கிய வாழ்வியலைச் சுட்டும் சொல்லாகத் தோன்றி, பின்னர் விரிந்த பொருளில் வழங்கத் தலைப்பட்டது எனலாம்.

திராவிடருடைய பண்பாட்டை டாக்டர் கால்டுவெல் மிகச் சுருக்கமாகவும், தெளிவாகவும் நூறு ஆண்டுகளுக்கு முன்னரே பின்வருமாறு வரைந்துள்ளார் :

" பண்டைத் திராவிடரைக் காட்டு மக்களாகவோ, கீழ்ப்பட்டவர்களாகவோ எவ்வகையிலும் கருது

[193] Majumdar, R. C. (Ed.) : *Op. cit.*, p. 154

[194] Chatterji, S. K. : 'Contributions from different languages' in *The Cultural Heritage of India*, Vol. I, p. 83

வதற்கு இல்லை. காட்டுப் பழங்குடி மக்களுடைய நாகரிகநிலை யாதாயினும், திராவிட மக்களைப் பற்றியவரை அவர்கள் ஆரியர் வருமுன்னரேயே, நாகரிகத்தின் நறுமணத்தை நன்கு நுகர்ந்து வாழ்ந்தனர்.

இன்றைய தமிழ்மொழியிலிருந்து வடசொற்களை அறவே நீக்கிவிட்டு நோக்கினால், மிகுந்துள்ள பண்டைத் திராவிடச் சொற்கள் ஆரியச் சார்பற்ற திராவிட நாகரிகத்திற்கு நல்லதொரு சான்று பகரும். அவ்வாறு வட சொற்களை நீக்கிப் பண்டைத் தமிழ்ச் சொற்களை மட்டும் ஆராய்ந்து, அதனால் புலனாகும் தமிழ்மக்களின் உள்ளநிலை, பழக்கவழக்கங்கள், சமய உண்மைகள் முதலானவற்றை இங்குக் காணலாம்.

திராவிடர்களுடைய அரசர் வலிமைமிக்க அரண்களில் வாழ்ந்து நாட்டை ஆண்டுவந்தனர். விழாக் காலங்களில் அவர்களிடையே பாணர்கள் பாட்டுகள் பாடி மக்களையும் மன்னர்களையும் மகிழ்வித்தனர். மக்கள் ஏட்டில் எழுத்தாணியால் எழுத்துகளை எழுதினர். அவ்வாறு எழுதப்பட்ட ஓலைகள் பல சேர்ந்த கட்டுக்குச் 'சுவடி' என்பது பெயர். அவர்கள் கடவுளை நம்பினர். கடவுளைக் 'கோ' அல்லது 'இறைவன்' என்ற பெயரால் சுட்டினர். நடைமுறைக்கு உகந்த இப்பட்டப் பெயரை வைதிக இந்து சமயம் அறியாது. வழிபடும் இடங்களும், மன்றங்களும் கோயில்கள் ஆயின. அவர்களிடம் சட்டங்களும், வழக்காற்று நெறிமுறைகளும் இருந்தன. அவற்றை அவர்கள் கடைப்பிடித்து ஒழுகினர். எனினும், வழக்குரைஞரோ, வழக்குரை அறிஞரோ அவர்களிடையே இல்லை. திருமண வாழ்க்கை முறையை அவர்கள் போற்றிப் பின்பற்றினார்கள். ஈயம், வெள்ளீயம், துத்தநாகம் நீங்கலாக மற்றக் கனிப்பொருள்களையும் அவற்றின் பயனையும் அவர்கள் நன்கு அறிந்திருந்

தனர். பண்டை உலக மக்களுக்குத் தெரிந்த கோள் களில் சனியும் புதனும் ஒழிய, மற்றக் கோள்கள் அவர்களுக்குத் தெரிந்திருந்தன. மருந்து, சிற்றூர், பேரூர், படகு, குடைமரக் கப்பல், அலங்கரிக்கப் பட்ட கப்பல் முதலானவற்றை அவர்கள் நன்கு அறிந்திருந்தனர்....... உழவும் போரும் அவர் களுடைய அன்றாட வாழ்க்கைத் தொழில். வில், அம்பு, ஈட்டி, வாள் ஆகியவை அவர்கள் பயன் படுத்திய போர்க்கருவிகள். வாழ்க்கைக்குத் தேவை யான நூற்றல், நெய்தல், சாயமிடல் முதலான தொழில்கள் யாவும் அவர்களிடத்துச் சிறப்புற்று விளங்கின. மண்பாண்டம் வனைதலில் அவர்கள் கைதேர்ந்த கலைஞராக விளங்கினர்.

பண்டைத் திராவிட மக்களின் நாகரிகம் சிறந்து விளங்கியமைக்கு இதுவே போதிய சான்றாகும்.''[195]

இத்தகைய சிறப்புமிக்க நாகரிகத்தின் தலைவர் களாகத் திராவிடர் விளங்கியதைத் தென்னிந்தியாவின் பல பகுதிகளில் அகழ்ந்தெடுக்கப்பட்ட தொல்பொருள் சின்னங்களும் தெரிவிக்கின்றன. திராவிடருடைய பண்பாட்டைப்பற்றி ஆராய்ந்த அறிஞர்கள் பலர் இந்திய நாகரிகத்தினை உருவாக்குவதில் திராவிடருடைய பங்கு எத்தகையது என்பதை அறிதின் முயன்று மதிப் பிட்டுள்ளனர்.

திராவிடர் உள்நாட்டில் அல்லது ஆற்றுவெளிகளில் வாழ்வதில் பெரிதும் நாட்டம் கொண்டிருந்தனர். இதனால் நீர்ப்பாசன முறையிலமைந்த வேளாண்மைத் தொழிலில் அவர்கள் சிறப்புமிக்க தேர்ச்சியினைப் பெற்றி ருந்தனர். வரலாற்றுக்காலம் நெடுக இக்கலையில் இந்தியா பெற்றிருக்கும் சிறப்பிற்கெல்லாம் மூலகாரணமாக இருந்துவந்தவர் திராவிடரே ஆவர்.[196]

---

[195] Caldwell, R.: *Op. cit.* pp. 113-114 & Iyengar, P. T. S., *Pre-Aryan Tamil Culture*

[196] Hornell, James: *Op. cit.* pp. 256

திராவிடர் பருப்பொருள் சார்பான வாழ்வியல் பண்பாட்டிலும் உணர்ச்சி வயமாகும் ஆன்மிகப் பண்பிலும் சிறப்புற்று விளங்கினர். சிறப்பாகக் கலைத்துறையிலும், புலனறி மெய்யுணர்விலும் அவர்களுக்கு இணையாக யாரையும் கூறவியலாது. இந்த மெய்யுணர்வுப் புலனெறிப் பண்பினை இறைவனோடு உள்ளத்தை ஒன்றுபடுத்துவதற்கு அவர்கள் மேற்கொண்ட வழிபாட்டு முறைகளிலும், 'யோக முறையை' அதற்குரிய ஒரு வகை வழியாகக் கொண்டு அவர்கள் ஒழுகியதிலும் நாம் காணலாம். இறந்தவரோடு தொடர்ந்து தொடர்பு வைத்துக்கொள்வதற்குச் செய்யப்படும் சடங்குகளில் திராவிடர் காட்டிய ஆர்வம், அவர்களுடைய உணர்ச்சிமயமான வாழ்க்கையின் ஒரு கூறாகும். இதை அடிப்படையாகக் கொண்டே பிற்காலத்தில் 'இறந்தவருக்குச் செய்யப்படும் நினைவுநாள் சடங்கு' என்னும் இந்து சமய வழக்கம் தோன்றியது.[197]

வேதச் சார்புடைய சமயம் பிற சமய வழக்குகளைத் தம்முடையதாக்கிக் கொண்டது; போற்றிக் காத்தும் வருகிறது. வேத காலத்திற்கு முற்பட்ட மக்களுடைய வழிபாட்டு முறைகள், சடங்குகள் பல வேதநெறியில் சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளன. அவற்றை அழித்தொழிப்பதற்குப் பதிலாகத் தன்னுடைய தேவைக்கு ஏற்ற வகையில் அவற்றைச் சிறிது மாற்றியும் திருத்தியும் வைதிகச் சமயம் அமைத்துக் கொண்டிருக்கிறது. திராவிடருடைய சமுதாய வாழ்விலிருந்து மிகுதியான பல பண்பாட்டுக் கூறுகளை அது எடுத்துக்கொண்டது; இதைப்போன்று பிற இனத்தவருடைய சில பழக்க வழக்கங்களைத் தமதாக்கிக் கொண்டது. எனவே, இன்றைய நிலையில் மூல ஆரியப்பண்புகள் எவையென்பதை வேறுபடுத்திக் காட்ட இயலாது என்றெல்லாம் டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணன் மொழிந்துள்ளமை[198] இங்குக் கருதத்தக்கன.

---

197 *Cultural Heritage of India*, Vol. I, p. 90
198 Radhakrishnan, S. : *Eastern Religions and Western Thought* (George Allen, London, 1937), p. 308

உபநிடதக் கொள்கைகள் வேதகால ஆரியர் அறியாதவை. அக்காலத்திய 'புதிய சிந்தனை'யாக அவை தோன்றின. அரசவைகளில் அப்புதிய கொள்கைகள் எடுத்துரைக்கப்பட்டபொழுது அரசர்களும் முனிவர்களும் வியப்புமிகு ஆர்வத்தோடு அவற்றைக் கேட்டனர். அவை நெடுங்காலச் சிந்தனையாலும், ஆன்மிக ஆற்றலின் முதிர்ச்சியாலும், மெய்யுணர்வுப் புலனறிவினாலும் கண்டறியப்பட்டனவாகும். ஆரியருக்குத்தான் அவை புதுமையானவை. இந்தியப் பண்பாட்டின் அடித்தளத்தை அமைத்துத் தந்த திராவிடருக்கு அவை மிகவும் பழமையானவையாகும். எனவே, திராவிடருடைய பண்டைச் சமயம், தத்துவம் ஆகியவற்றின் முதிர்ந்த நிலையில் உயர்ந்த பண்புகளே இக்கொள்கைகள் என்று நாம் துணிந்து கூறலாம். தங்கள் மரபுவழிச் சிந்தனையின் அடிப்படையில் அவற்றிற்கு ஆரியர் விளக்கம் கொடுக்க முயன்றனர். அம்முயற்சியின் பயனாக முகிழ்ந்தவையே உபநிடதக் கொள்கைகளும் கோட்பாடுகளுமாகும். இதனால் ஆரியர்கள் தனிப்பட்ட வகையில் அவற்றை உலகிற்கு வழங்கவில்லை என்பது எளிதில் புலனாகும். அவ்வுபநிடதக் கொள்கைகளுள் முதலிடம் வகிக்கும் ஆன்மா, பரம்பொருள், மறுபிறப்பு, வினைப்பயன் முதலானவற்றைப் பற்றிய கருத்துகள் யாவும் இந்தியச் சிந்தனைக்குத் திராவிடர் வழங்கிய கொடையென நாம் அறுதியிட்டு உறுதியாகக் கூறலாம்.[199]

இந்து சமயக் கருத்துகள், மெய்யறிவு, பழக்க வழக்கங்கள் சடங்குகள் யாவும் 'ஆகமநெறி', 'நிகமநெறி' எனும் இருபெரும் பிரிவுகளாகக் கொள்ளத் தக்கன என்னும் எண்ணம் இந்து சமயமரபில் நெடுங்காலமாக இருந்துவருகிறது. 'நிகமநெறி' என்பது தூய ஆரியச் சிந்தனைகளையும், சடங்குகளையும் சார்ந்த

199 Brown, C. : 'The Sources of Indian Philosophical Ideas' in *Studies in Honour of Maurice Bloomfield* pp. 82-83

வழிபாட்டு முறையைக் குறிப்பது. வேதச்சார்புடைய சடங்குநெறிகளை உணர்த்தும் கரும காண்டத்தினை அடிப்படையாகக் கொண்டது இது. இவ்வழிபாட்டு முறையில் முத்தீ வளர்த்து 'வேள்வி' செய்து தெய்வத்தை வழிபடுவது முதன்மையிடத்தைப் பெறுகிறது. மற்ருென்று 'ஆகமநெறி' எனப்படுவதாகும். தாந்திரிக நெறி முறைகளும், திருக்கோயில் அமைப்பு, வழிபாடு ஆகியவற்றின் பழக்க வழக்கங்களும் ஆகமநெறியின் அடிப்படையாகும்.

இவ்வாறு இந்தியாவில் இறைவழிபாட்டு முறை இரண்டு வகையாகத் தொன்றுதொட்டு வழக்கில் இருந்து வருகிறது. பூக்களைத் தூவி இறைவனை வழிபடுவது ஆகம நெறியாகும். இதனை ஆரியர் அறிந்தவர் அல்லர். வேதகாலம் முதற்கொண்டு ஆரியர் முத்தீ வளர்த்து வழிபாடு செய்யும் தீ வழிபாட்டையே போற்றிவந்தனர். முத்தீ வழிபாட்டில் தாங்கள் வழிபட்ட இயற்கைச் சக்தியான நெருப்பு, காற்று, கதிரவன், வருணன், இடி, மழை, நிலம், நீர் முதலானவற்றிற்குச் சினம் உண்டா காமல் தடுப்பதற்காகத் தங்களிடம் இருந்த ஆடு, மாடு, பார்லி, பால், வெண்ணெய், சோமபானம் முதலான பொருள்களை வேள்வித்தீயில் இட்டு, இவ்வியற்கைச் சக்திகளின் அருளை அவர்கள் வேண்டிநின்றனர். இத்தகைய வழிபாடு மிக எளிமையானதும், நாகரிகத்தின் தொடக்கக் காலத்தில் மக்கள் மேற்கொண்டு ஒழுகியது மாகும்.

பூவினைக் கொண்டு செய்யப்படும் வழிபாடு வேறு வகையானது. அது சிறந்ததோர் அடிப்படையில் எழுந்த வழிபாட்டு முறையாகும். இப்பேரண்டம் முழுவதும் ஒரு தெய்விக ஆற்றல் நிறைந்திருப்பதை உணர்ந்து, அம்மாபெரும் தெய்விக ஆற்றலோடு மனிதன் தான் ஒன்றுபடவும், கலந்து இன்புறவும் விரும்பும் நோக்கத்தோடு செய்யப்படும் வழிபாடே 'பூசை'யாகும். இறைவனுடைய இருப்பில் சிறிதும் ஐயுறாத திராவிட மக்கள், எங்கும் நிறைந்திருக்கும்

பரம்பொருளைத் தம் வழிபடு தெய்வவடிவங்களாக அமைத்து, அவற்றைத் தொழுது தூமலர் தூவி வழிபடுகின்றனர். 'பூஜை' என்னும் சமஸ்கிருத மொழிச் சொல் 'பூஜ்' என்னும் வேர்ச்சொல்லை அடிப் படையாகக் கொண்டது. அது 'பூ', 'செய்' என்னும் திராவிடச் சொற்கள் சேர்ந்து அமைந்த 'பூசெய்' என்னும் சொல்லின் திரிபாகும். இச்சொல்லிற்குப் 'பூப்பலி', 'பூ வழிபாடு' என்பதே பொருள். இத் திராவிட (தமிழ்) மொழிச் சொல் ஆகம நெறியின் உயிர்நாடியான வழிபாட்டு முறையை விளக்குகிறது என்பது எஸ். கே. சாட்டர்ஜியின் கருத்தாகும். இந்து சமயத்தில் சிறப்புற்றுவிளங்கும் சிவ வழிபாடு, சக்தி வழிபாடு, முருக வழிபாடு முதலானவை திராவிட ரிடத்துத் தோன்றியவை. திருமால் வழிபாட்டில் ஒரு பகுதி தென்னாட்டு மரபினை அடியொற்றியதாகும்.[200]

இந்திய நாட்டின் பொதுவான உடையமைப்பாக விளங்குவது வேட்டியும் சேலையுமாகும். இவ்வுடை முறைகூடப் பேரளவிற்குத் திராவிடரின் வழி வந்ததே யாகும்.[201] மற்றும் இந்துத் திருமணத்திலும், அன்றாட வாழ்க்கையிலும் இன்று காணப்படும் பழக்க வழக்கங் களுள் பல திராவிடர்க்கு உரியன. பண்டைக் காலத்தில் திராவிடர் 'தாய்வழி மரபுரிமை'யைப் போற்றினர். இன்று அதன் எச்ச மிச்சங்களை இந்தியப் பழங்குடி மக்கள் சிலரிடத்தில் நாம் காணுகிறோம். திராவிட ருடைய சமய, சமுதாய வாழ்க்கையின் பெரும் பகுதியைக் 'கலை'யுணர்வு ஆட்கொண்டிருக்கிறது. கலை நோக்கும், கலையுணர்வோடு எதையும் நுகர்ந்தின்புறு தலும் ஆரியரிடையே செல்வாக்குப் பெறவில்லை.[202]

சமஸ்கிருத மொழியில் வேதகாலத்திலேயே திராவிட எழுத்தொலிகளான ள, ட, ண போன்ற ஒலிகளின்

---

200 Chatterji, S.K.: 'Race Movements and Pre-historic Culture' in *The Vedic Age*, pp. 160-61

201 Chatterji, S. K. 'Indo-Aryan and Hindu' pp. 31-32

202 *Cultural Heritage of India*, Vol. I, p.84

தாக்குறவு உண்டாகியிருக்கிறது. மற்றும், பிற இந்திய-ஐரோப்பிய மொழிகளிலும் காணப்பெறாத 'தொழிற் பெயர்' வடமொழியில் பெருவழக்குப் பெற்றுள்ளமை திராவிட மொழித் தாக்குறவாலாகும்.[203] இவையல்லாமல் ஆயிரத்திற்கு மேற்பட்ட திராவிடமொழிச் சொற்கள் இருக்குவேதம் முதலான சமஸ்கிருத நூல்களில் இடம் பெற்றுள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.[204] திராவிடர் இந்நாட்டில் தோன்றிப் பையப்பைய நாகரிக வளர்ச்சியுற்றனர்; எண்ண வளர்ச்சியால் அறிவைப் பெருக்கிக் கருத்து வகையால் முன்னேற்றம் அடைந்தனர்; கலைகளைப் போற்றித் தங்கள் வாழ்க்கையையே கலைமயமாக்கிக் களித்து இன்புற்றனர். அக்காலத்தில் வட இந்தியாவில் திராவிடப் பண்பைப் பேரளவிற்குத் தழுவிய ஆரியர்கள் தமிழகத்திற்குச் சிறுசிறு கூட்டமாக வந்தனர். அவர்கள் இங்கு வந்தபொழுது தூய ஆரியராக இல்லை. 'திராவிட—ஆரியராகவே' விளங்கினர். வரலாற்று நூலின் தொடக்கக் காலத்தில் அவர்களுடைய வருகை பெருகியது. நாளடைவில் அவர்கள் இந்நாட்டு மக்களோடு நெருக்கமான உறவு கொண்டனர். அதன் விளைவாக அவர்களுடைய உடற்கூற்று அமைப்பில் மாற்றங்கள் உண்டாயின. இன்று தூய நார்டிக் (ஆரிய) இனப் பண்புகளைக் கொண்ட ஆரிய இனமக்கள் தமிழகத்தில் இல்லை. உடற்கூற்று அமைப்பிலும், பண்பாட்டிலும் கணிசமான அளவிற்குத் திராவிட இனச் சார்புடையவராகவே அவர்கள் தோன்றுகின்றனர்.[205]

இந்திய நாகரிகத்தையும் பண்பாட்டையும் முழு நிறைவுடையதாக்கிப் பொலிவுறச் செய்தவர்கள் திரா விடர்களேயாவர்.[206] இன்றைய இந்தியப் பண்பாட்டில் நூற்றுக்கு எழுபத்தைந்து விழுக்காடு ஆரியர் அல்லா தாரின் பண்புகளே சிறப்புற்று விளங்குகின்றன என்பது

---

[203] Burrow, T.: *Op. cit.* (Faber, London, 1954), pp. 373-374
[204] *Ibid*, pp. 380-387
[205] Ramachandra Dikshitar, V. R. : *Op. cit.*, p. 173
[206] Chatterji, S. K., *Op. cit.*, p. 50

டாக்டர் எஸ். கே. சாட்டர்ஜியின் கருத்தாகும்.[207] இவ் வெழுபத்தைந்து விழுக்காட்டில், அறுபத்தைந்து விழுக் காடு திராவிடருடைய பண்பாட்டுக் கூறுகளாக உள்ளன என்று கூறினுல், அது மிகையாகாது.

207 Chatterji, S. K., *Op. cit.*, p. 164

## இயல் 4

# பழைய கற்காலம்

## 1. முன்னுரை

### தொல்பழங்கால வரையறை

மனித இன 'வரலாற்றை', வரலாற்றுக் காலம்,[1] வரலாற்றுக்கு முந்திய காலம்[2] என்று இரண்டு வகையாகப் பிரித்து எழுதுவது வழக்கமாக இருந்துவருகிறது. எழுத்துச் சான்றுகள் தோன்றிய பிறகு கிடைக்கும் செய்திகளை வரலாற்றுக் காலத்தில் சேர்ப்பர். அதற்கு முந்திய காலத்தை எழுத்துச் சான்றுகள் இல்லாத வரலாற்றுக் காலம்[3] அல்லது தொல்பழங்காலம் என்று நாம் (இத்தொகுதியில்) குறிப்பிடுகிறோம். உண்மையில், வரலாற்றுக் காலத்தில் உட்படும் ஆண்டுகளைவிடப் பல மடங்கு ஆண்டுகள் தொல்பழங்காலத்தில் உள்ளன. ஏறக்குறைய இற்றைக்குமுன் 20 லட்சம் (20,00,000) ஆண்டுகளிலிருந்து, கி. மு. 4000 வரைக்கும் இருக்கக் கூடிய காலத்தைத் தொல்பழங்காலம் என உலக அளவில் குறிப்பிடலாம்.

தொல்பழங்காலத்தைப் பற்றிய அறிவு சென்ற நூற்றாண்டிலிருந்துதான் அதிகமாக வளர்ந்துவருகிறது. மற்ற நாடுகளுக்கு இணையாகவே இந்தக் காலத்தைப் பற்றிய ஆராய்ச்சி இந்தியாவிலும் முதலிலிருந்தே நடந்துவந்துள்ளது. இருப்பினும் இந்த நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்துதான் இக்காலத்தைப் பற்றிய

---

[1] Historical period

[2] Pre-historic period

[3] Pre-literary historical period

சான்றுகள் மிகுதியாகக் கிடைத்துள்ளன. வரலாற்றுக் காலத்திற்குப்போல் அல்லாது தொல்பழங்காலத்திற்குச் சான்றுகள் மிகக் குறைவு. காலம் மிகப் பரந்ததாக இருந்தாலும், இக்காலத்தில் வாழ்ந்த மனித சமுதாயம் விட்டுச்சென்ற சின்னங்கள் மிகமிகக் குறைவு. எனினும் வரலாற்றுக் காலத்தில் அல்லது தற்காலத்தில் நிகழும் எந்த நிகழ்ச்சிக்கும் தொடக்கம் தொல்பழங்காலத்திலேயே ஏற்பட்டதாலும், இன்றைய மனித சமுதாயத்தின் அறிவு வளர்ச்சி மனிதன் தொடங்கிய காலத்திலிருந்தே கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்துவந்த அறிவுவளர்ச்சியின் மொத்தத் திரட்சியாகக் காணப்படுவதாலும் தொல்பழங்காலத்தை மிகக் கூர்மையாக அணுகிப் பார்க்க வேண்டிய நிலையில் இருக்கிறோம். தொல்பழங்கால வரலாற்றில் பெரும்பாலும் குறிப்பிட்ட மனிதர்களைப்பற்றி அல்லாமல் பொதுப்படையான செய்திகளைப் பற்றியே நாட்டம் செலுத்தமுடியும். எந்த அரசன் அல்லது எந்த வீரன் எப்பொழுது என்ன செயல் புரிந்தான் என்று குறிப்பிட்டுச் சொல்லமுடியாது. செயல்கள் எல்லாம் மனிதஇனக் குழுக்களின் மொத்தக் கூறுகளைப் பற்றியனவாகவே இருக்கும். இந்தக் காரணத்தால் வரலாற்றுக் காலத்தில் ஏற்படுவதுபோல் குறுகிய நோக்கோ, அல்லது தேசிய இனஞ் சார்ந்த குறுகிய எண்ணங்களோ, பெரும்பாலும் தொல்பழங்காலத்தைப் பற்றிய ஆய்வில் இடம்பெறுவதில்லை. இக்கால வரலாற்றில் மனிதனின் எல்லா வகையான செயல்களும், அதாவது பண்பாட்டு, பொருளாதார, அறிவியல் செயல்கள் யாவும் ஒருங்கே இடம்பெறுகின்றன. தொல்பழங்காலக் கால எல்லைகள் மிகப் பரந்திருப்பதால், இயற்கைச் சூழலில் மனிதன் எவ்வாறு ஒன்றி வாழ்ந்துவந்தான்; இயற்கை மனித வாழ்க்கையை எப்படிப் பாதித்தது என்பனவற்றைத் தொல்பழங்கால வரலாற்றில் நன்கு அறிய முடிகிறது. இந்த நீண்ட கால நோக்கு எதிர்காலத்தில் இயற்கை மனிதஇனத்தை எப்படிப் பாதிக்கும் என்ற கேள்விக்கு ஓரளவு விடை பகரும் என எதிர்பார்க்கலாம்.

### தொல்பழங்காலப் பிரிவுகள்

சென்ற நூற்றுண்டில் தொல்பழங்காலத்தைக் கற் காலம்,[4] வெண்கலக் காலம்,[5] இரும்புக் காலம்[6] என்று மூன்று வகையாகப் பிரித்துக்கொண்டார்கள். (இப்பாகு பாட்டில் ஓரளவு வரலாற்றுக் காலமும் அடங்கியது.) இதற்குப் பின்னுல் இந்தப் பாகுபாட்டில் பல மாற்றங்கள் ஏற்பட்டன. இப்பொழுது பொதுவாகப் பழைய கற் காலம்,[7] இடைக் கற்காலம்,[8] புதிய கற்காலம்,[9] வெண்கலக் காலம், இரும்புக் காலம் என்ற பாகுபாடு ஏற்றுக் கொள்ளப்படுகிறது. இந்தப் பெரும்பிரிவுகளேயல்லா மல் பல உட்பிரிவுகளும் உள்ளன. இந்தப் பிரிவு உலகில் எல்லாப் பகுதிகளுக்கும் ஒரே வகையாகப் பொருந்தும் என்று சொல்லமுடியாது. ஒவ்வொரு பகுதியிலும் ஒவ் வொரு வகையான பகுப்பு செய்யவேண்டிய நிலே உள்ளது. நாகரிக வளர்ச்சியை அறிந்துகொள்வதற்கு வசதியாகச் செய்துகொள்ளப்படும் செயற்கைப் பகுப்பு இது. அதனுல் ஒவ்வொரு நாட்டிற்கும் ஏற்ற பகுப்பை அந்தந்த நாட்டுத் தொல்பழங்கால வரலாற்று ஆசிரி யர்கள் செய்துகொள்ளலாம். இந்த வகையில் ஐரோப்பா, ஆப்ரிக்கா போல அல்லாமல் இந்தியாவில் தொல்பழங் காலத்தைக் கீழ்வருமாறு பிரித்துக்கொள்கிறுர்கள். முதல் கற்காலம்,[10] இடைக் கற்காலம்,[11] கடைக் கற்காலம்,[12] புதிய கற்காலம், வெண்கலக் காலம், இரும்புக் காலம் என் பவை அவை. இதே சொற்ருெடர்கள் ஆப்ரிக்க அல்லது ஐரோப்பியச் சூழ்நிலேயில் வேறு பொருள்களேத் தரும். அதனுல் இச்சொற்ருெடர்களின் பொருள்களே அந்தந்த

---

[4] Stone Age
[5] Bronze Age
[6] Iron Age
[7] Palaeolithic
[8] Mesolithic
[9] Neolithic
[10] Early Stone Age
[11] Middle Stone Age
[12] Late Stone Age

நாட்டுச் சூழலிலேயே பயன்படுத்த வேண்டும். இப் பிரிவுகளை அப்படியே சில குறிப்பிட்ட காலக் கட்டங் களோடு இணைக்கமுடியாது. இவைகள் அந்தந்தப் பிரிவு மக்களின் தொழில்நுட்ப வளர்ச்சியின் கட்டங்களே.[13] விளக்கமாகச் சொன்னால், மிக அண்மைக்காலம்வரை ஆஸ்திரேலியாவில் சில பழங்குடிகள் கற்காலக் கருவிகளை மட்டும் பயன்படுத்திவந்தார்கள்; அதாவது கற்காலத்தில் வாழ்ந்துவந்தார்கள். உலகின் பெரும்பாலான பகுதி களில் இந்த வாழ்க்கைநிலை பல ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே முடிந்துவிட்டது. ஆகவே ஒவ் வொரு நாட்டுத் தொல்பழங்காலக் கட்டங்களையும் அந்தந்த நாட்டுச் சிறப்புச் சூழ்நிலைகளை வைத்தே ஆராயவேண்டும். பொதுவாகப் புதிய கற்காலத்திற்கு முந்தியுள்ள காலத்தில் வேட்டையாடும் வாழ்க்கைநிலை யிலும், புதிய கற்காலத்தின் தொடக்கநிலையில் அமைந்த வேளாண்மை வாழ்க்கைநிலையிலும், அதற்குப் பின்பு நிலையான வேளாண்மை வாழ்க்கைநிலையிலும் மனிதன் இருந்துவந்துள்ளான் என்று குறிப்பிட்டுச் சொல்லலாம்.

## பொது இயல்புகள்

தமிழ்நாட்டுத் தொல்பழங்கால வரலாற்றை விரி வாகக் காண்பதற்கு முன்பு கற்காலங்களைப் பற்றிய சில பொதுப்படையான செய்திகளைத் தெரிந்துகொள்வது நல்லது. இக்காலத்தைப்பற்றி அறிந்துகொள்ள நமக்குக் கிடைக்கும் சான்றுகள் மனிதன் செய்த கருவிகளான[14] கற்கருவிகள் மட்டுந்தான். ஆனால் சில சமயங்களில் மிகக் குறைந்த அளவில் எலும்பு, மான்கொம்பு, மரம் முத லான பொருள்களால் செய்யப்பட்ட கருவிகளுங்கூடக் கிடைக்கின்றன. இக்கருவிகளை மட்டும் வைத்துக் கொண்டு அக்கால மனித வாழ்க்கையைப்பற்றி முழுமை யாகத் தெரிந்துகொள்ளலாம் என்பது இயலாத செயல். சொல்லப்போனால், எழுத்துச் சான்றுகள் இருக்கக்கூடிய

---

[13] Technological stages
[14] Artifacts

காலங்களில்கூட மனித நடவடிக்கைகளைப் பற்றிய எல்லாச் செய்திகளையும் அறிந்துகொள்கிறோம் என்று சொல்லமுடியாது. கற்காலக் கருவிகளைக்கொண்டு ஓரள வுக்குத் தொல்பழங்கால வாழ்க்கைநிலைமையைப் பற்றி உய்த்துணர்ந்துகொள்ளலாம். கருவிகளைச் செய்த மனிதர்களின் தொழில்திறன், அவர்களுடைய பொருளா தார வாழ்க்கை, அவர்கள் வாழ்ந்துவந்த காலத்தின் தட்ப வெப்ப நிலை ஆகியவைகளையெல்லாம் ஒருவகையாக நாம் உய்த்துணரமுடியும். இக்கருவிகள் திறந்த வெளிகள்,[15] ஆற்றுப் படுகைகள்,[16] மலைக்குகைள்,[17] ஆகியவற்றில் காணப்படுகின்றன. ஆற்றுப் படுகை களில் அல்லது மலைக் குகைகளில் இக்கருவிகள் கிடைக் கும்போது நிலஅமைப்பியலின் அடிப்படையில் காலத் தைக்[18] கணிப்பது எளிதாக அமைகிறது.

குகைகளில் இந்தக் கருவிகளோடு பல்வகையான எலும்புகள் கிடைக்கின்றன. இந்த எலும்புகள் அங்கு வாழ்ந்த மனிதர்கள் பயன்படுத்திய உணவுப் பொருள் களின் எச்சங்களாக இருக்கலாம்; அல்லது கருவி களாகவும் இருக்கலாம். எப்படியிருந்தாலும் அந்த எலும்புகளை வைத்துக்கொண்டு அப்பொழுது வாழ்ந்த விலங்குகள் எப்படிப்பட்டவை, அந்த விலங்குகள் வாழ்ந்த காலத்தில் எவ்வகையான தட்பவெப்பச் சூழ்நிலை அமைந்திருந்தது, இயற்கைச் சூழல் அதாவது மரம் செடி கொடிகள் எப்படியிருந்தன என்பனவற்றை யெல்லாம் தொல்லுயிரியல் அறிஞர்கள்[19] சொல்ல முடியும். ஆகவே கற்கருவிகளைப் போலவே அவைகள் கிடைக்கும் இடங்களின் தன்மைகளும், இக்கால வரலாற் றுக்கு மிகவும் பயன்படுவன. இவ்வுண்மை ஆற்றுப் படுகைகளை நோக்கும்பொழுது மேலும் விளக்கமுறும். ஆற்றுப் படுகைகளைப் பற்றிய ஆராய்ச்சி பெரும்பாலும்

---

15 Open plains
16 River terraces
17 Caves
18 Geological Age
19 Palaeontologists

நிலஅமைப்பியல் (நிலப்பொதியியல்) துறையைச் சார்ந்தது. இருப்பினும் கற்கருவிகள் பெருமளவுக்கு ஆற்றுப் படுகைகளிலேயே கிடைக்கின்றனவாதலால் இவைகளைப் பற்றி ஓரளவுக்கு அறிந்துகொள்வது இன்றியமையாதது. ஐரோப்பாவிலும், இந்தியாவில் பஞ்சாப் பகுதியிலும் இருக்கும் ஆற்றுப் படுகைகள் மிக ஒழுங்கான படிமுறையோடு காணப்படுகின்றன. அவை களில் கால முறைப்படி படுகைகளை ஆய்ந்தறிவது எளிதாக இருக்கிறது. நடு இந்தியாவிலும், தென் னிந்தியாவிலும் இருக்கும் ஆற்றுப் படுகைகள் அவ்வளவு தெளிவாக இல்லை என்று தொல்பழங்கால ஆசிரியர்கள் கருதுகிறார்கள். இந்த ஆற்றுப் படுகைகளை நில அமைப்பியல் ஆய்வாளர்கள் நன்கு ஆராய்ந்துள் ளார்கள். இந்த ஆய்வுகளிலிருந்து நமக்குத் தெரியக் கூடிய செய்திகள் தொல்பழங்கால அறிவுக்குப் பயன் படுகின்றன. ஆற்றுப் பள்ளத்தாக்கில் காணப்படும் படியடுக்குப் (படிகள் போன்ற அடுக்கு) படுகைகளில் மிக உயர்ந்த மட்டத்தில் காணப்படுகின்ற படுகை காலத் தால் முந்தியது என்று தெரிகிறது. அதைத் தொடர்ந்து ஆற்றின் அடிமட்டம் வரைக்கும் இருக்கக்கூடிய படுகைகள் வரிசையாக மேலிருந்து கீழாகக் காலமுறை யில் பிந்திப் பிந்தி அமைந்தவை. ஒவ்வோர் ஆற்றுப் படுகையிலும் சில படிவடுக்குகள் (படிவு அடுக்குகள்)[20] காணப்படுகின்றன. இந்த படிவடுக்குகள் கீழிருந்து மேலாகப் படிந்து படிந்து அமைந்தவை. அதாவது கீழே இருக்கக்கூடிய அடுக்கு காலத்தால் முந்திப் படிந்தது. அதற்கு மேலே உள்ளவை முறையாகக் காலத்தால் பின்பு அமைந்தவை. இந்த ஆற்றுப் படுகைகளின் படிவடுக்குகளைத் தனித்தனியாகப் பார்க்கும்பொழுது பல உண்மைகள் தெரியவருகின்றன. எடுத்துக்காட் டாக, ஓர் அடுக்கில் அதிகமான கூழாங்கற்பரப்பு இருந்தால் அந்த அடுக்கு ஏற்பட்ட காலத்தில் மிகுதியாக மழை பெய்து பெருவெள்ளங்கள் ஏற்பட்டன என்று

[20] Strata

சொல்லலாம். மிக நொய்மையான களிமண் இருந்தால் அப்பொழுது மிகுந்த காற்று அடித்தது என்று எடுத்துக் கொள்ளலாம். இன்னும் இந்த அடுக்குகளின் பல கட்டங்களில் பல வகை எலும்புகள் புதைபடிவங்களாக[21] நமக்குக் கிடைக்கின்றன. இவைகளை ஆய்ந்து பார்த்தால், முன்பே குறிப்பிட்டதுபோல் அந்த எலும்புகளுக்கு உரிய உயிரினங்கள், அவைகள் வாழ்ந்த காலம், இயற்கைச் சூழல் ஆகியவற்றையெல்லாம் பெருமளவுக்கு உய்த்துணர முடியும். ஆனால், இந்த ஆற்றுப் படுகைகளை மிகச் சரியான காலக் கணிப்புக்கு, நேரடியாக உட்படுத்த முடியாது. இந்த ஆற்றுப் படுகைகள் பெரும்பாலும் ஆறு தொடங்கும் இடத்திலிருந்து கடலோடு கலக்கும் இடம்வரைக்கும் நீண்டு காணப்படும். இதனால் கடற்கரையில் கிடைக்கக்கூடிய பழைய நீர்மட்ட நிலைகளின்[22] சான்றுகளை வைத்துக்கொண்டு, இந்தப் படுகைகளுக்குக் காலத்தைக் கணிக்கலாம். அந்த வகையில் ஒவ்வொரு படுகையிலும் கிடைக்கக்கூடிய கற்கருவிகளின் காலத்தையும் கணக்கிடமுடியும். ஆனால், இது போன்ற காலக்கணிப்பாராய்ச்சி இன்னும் அதிகமாக வளர்ச்சியடையவில்லை. இப்பொழுதுதான் இந்தியத் தொல்பொருள்துறை தென்னிந்திய ஆறுகளுக்கு இவ்வகையான காலக்கணிப்பாராய்ச்சிகள் செய்யத் தொடங்கியிருக்கிறது.

## பிலைஸ்டோசீன் ஊழியும் தொல்பழங்காலமும்

ஐரோப்பாவிலும், ஆப்ரிக்காவிலும் செய்த பல ஆராய்ச்சிகளின் விளைவாக இந்தத் தொல்பழங்காலம் பெரும்பாலும் நிலஅமைப்பியல் பாகுபாட்டில் கடைசி நிலஅமைப்பியல் ஊழியான பிலைஸ்டோசீன் ஊழியைச்[23] சார்ந்ததாகத் தெரிகிறது. அண்மைக் காலத்தில் கிழக்கு ஆப்ரிக்காவில் டான்ஜானியா[24] நாட்டில் ஒல்டுவாய்ப்

---

[21] Fossils
[22] Ancient shore lines
[23] Pleistocene Epoch
[24] Tanzania

பிளப்பு[25] என்ற இடத்தில் கிடைத்த தொல்பழங்காலத்தின் மிகப் பழமையான சின்னங்களைப் பொட்டாசியம்–ஆர்கன் அணுத்திறன் கணக்கு முறையில்[26] கணக்கிட்ட பொழுது அவைகள் ஏறக்குறைய 20 லட்சம் ஆண்டுகள் வயதுடையவை எனத் தெரியவந்தது.[27] பிலைஸ்டோசீன் ஊழிக்கு முன்பு நிலவிய பிலியோசீன் ஊழியில் மனிதர்கள் இருந்தார்கள் என்பதற்கு அறிகுறிகள் இல்லை. பிலைஸ்டோசீன் காலத்தில்தான் மனிதச் சின்னங்கள் கிடைக்கின்றன. இந்தக் காலம் ஏறக்குறைய இற்றைக்கு முன் பத்தாயிரம் ஆண்டுகள் வரைக்கும் நீடித்தது. இந்தக் காலத்தில் ஏற்பட்ட குறிப்பிடக்கூடிய ஓர் இயற்கை நிகழ்ச்சி என்னவென்ருல், இக்காலம் முழுவதும் பல சமயங்களில் உலகின் வடக்குப் பகுதியில் மிக அதிகமான பனிப்படர்வுகள்[28] ஏற்பட்டன என்பது. இந்தப் பனிப்படர்வுகள் இருந்ததற்கான தடயங்கள், ஐரோப்பாவிலும், இந்தியாவில் இமயமலைச் சாரலிலும் கிடைத்துள்ளன. ஆனல் எல்லா இடங்களிலும் ஒரே வகையான பனிப்படர்வுகள் ஏற்பட்டனவா என்பது இன்னும் சரிவரத் தெரியவில்லை. பொதுவாக ஐரோப்பாவில் நான்கு சமயங்களில் பெரும் பனிப்படர்வுகள் ஏற்பட்டன என்று கொள்ளப்படுகிறது. இப்பனிப்படர்வுக் காலங்கள்[29] வரிசையாகக் கியூன்ஜ், மிண்டல், ரிஸ், வ்யூர்ம்[30] என்று பெயரிட்டு அழைக்கப்படுகின்றன. இவைகளுக்குச் சமமான பனிப்படர்வுகள் வட இந்தியாவிலும் ஏற்பட்டன என்று பேராசிரியர் ஜாய்னர் கருத்துத் தெரிவித்திருக்கிருர். இந்தப் பனிப்படர்வுகள் வடக்குப் பகுதியில் மட்டுந்தான் ஏற்பட்டன. நிலநடுக்கோட்டுப் பகுதியில் இவைகளுக்குச் சமமாக பெரு

25 Olduvai Gorge
26 Pottassium-argon isotopic dating method
27 Leakey, L. S . B., *Olduvai Gorge* 1951-61: Fauna and Background (Cambridge University Press, 1967) p. 91
28 Glaciation
29 Glacial Ages
30 Gunz; Mindel; Riss; Wurm

மழைக் காலங்கள்[31] இருந்தன என்பது சில அறிஞர்களுடைய கருத்து. ஆனால் இந்தப் பெருமழைக் காலங்கள்கூட நிலநடுக்கோடு சார்ந்த எல்லா நாடுகளிலும் ஒரே தன்மையனவாக இருந்தன என்று சொல்ல முடியவில்லை. கிழக்கு ஆப்பிரிக்காவில் மட்டும் இந்தக் காலம் நன்கு ஆராயப்பட்டிருக்கிறது. மற்ற இடங்களில் சரிவர ஆராயப்படாவிட்டாலும், இந்தியாவைப் பொறுத்தவரையில், அதுவும் குறிப்பாக நடு இந்தியாவிலும் தென்னிந்தியாவிலும் நிச்சயமாக இரண்டு சமையங்களில் பெருமழைக் காலங்கள் இருந்தன என்று இப்பகுதியிலுள்ள ஆற்றுப் படுகைகளை நோக்கும் போது தெரியவருகிறது.

தொடர்ந்து வாழ்ந்த விலங்குகளின் தன்மையை வைத்துப் பிலைஸ்டோசீன் காலத்தை மூன்று கட்டங்களாக நிலஅமைப்பியல் அறிஞர்கள் பிரிக்கிறார்கள். அந்த மூன்று பிரிவுகளும் வருமாறு : முதல் பிலைஸ்டோசீன் காலம்,[32] கியூன்ஜ் பனிப்படர்வுக் காலமும் அதைத் தொடர்ந்த பனிப்படர்விடைக் காலமும்[33] சேர்ந்த காலப் பகுதியாகும். இதற்குப் பின்னால் ஏற்பட்ட மிண்டல், ரிஸ் ஆகிய இரு பனிப்படர்வுக் காலங்களும், அவைகளுக்கிடையே இருந்த பனிப்படர்விடைக் காலமும் சேர்ந்து இடைப் பிலைஸ்டோசீன்[34] காலம் என்று அழைக்கப்படுகிறது. ரிஸ் பனிப்படர்வுக் காலத்தைத் தொடர்ந்த பனிப்படர்விடைக் காலமும், வ்யூர்ம் பனிப்படர்வுக் காலமும் சேர்ந்து கடைப் பிலைஸ்டோசீன்[35] காலம் ஆகும். முதல் பிலைஸ்டோசீன் 20 இலட்சம் (20,00,000) ஆண்டுகளிலிருந்து ஏழுலட்சத்து ஐம்பதாயிரம் (7,50,000) ஆண்டுகள்வரை நீடித்தது. ஏழுலட்சத்து ஐம்பதாயிரம் ஆண்டுகளிலிருந்து ஏறக்குறைய ஒரு லட்சத்து ஐம்ப

---

31 Pluvial Ages
32 Lower Pleistocene
33 Inter-glacial
34 Middle Pleistocene
35 Upper Pleistocene

தாயிரம் (1,50,000) ஆண்டுகள் வரையில் இடைப் பிலேஸ்டோசீன் காலம் இருந்தது. அதற்குப் பின்னல் இற்றைக்குமுன் பத்தாயிரம் ஆண்டுகள்வரை கடைப் பிலேஸ்டோசீன் காலம் இருந்தது. பத்தாயிரம் ஆண்டுகளுக்குப் பின்பு இன்றுவரையுள்ள காலத்தை ஹோலசீன் அல்லது அண்மைக்காலம் என்று அழைப்பது வழக்கம்.[36] இந்தக் காலக்கணிப்பு எல்லா நாடுகளுக்கும் ஒரே வகையாகப் பொருந்தும் என்று சொல்லமுடியாது. தோராயமாகத்தான் இதை எடுத்துக்கொள்ளலாம்.

| நிலஅமைப்பியல் காலம் | தட்பவெப்பநிலை | [ஆண்டுகள் இற்றைக்கு (1975) முன்] |
|---|---|---|
| ஹோலசீன் அல்லது அண்மைக்காலம் | ......... | 10,000 |
| கடைப் பிலேஸ்டோசீன் | வ்யூர்ம் பனிப்படர்வு<br>3ஆம் பனிப்படர்வு<br>இடைக்காலம் | 1,50,000 |
| இடைப் பிலேஸ்டோசீன் | ரிஸ் பனிப்படர்வு<br>2ஆம் பனிப்படர்வு<br>இடைக்காலம்<br>மிண்டல் பனிப்படர்வு | 7,50,000 |
| முதல் பிலேஸ்டோசீன் | முதல் பனிப்படர்வு<br>இடைக்காலம்<br>க்யூன்ஜ் பனிப்படர்வு | 20,00,000 |
| பிலியோசீன் | ......... | ......... |

[36] Chester S. Chard, *Man in Pre-history* (MacGraw-Hill Book Co., New York, etc. 1969) p. 64

ஐரோப்பா—ஆப்ரிக்காவில்போல இல்லாமல் இந்தியாவில் பிலேஸ்டோசீன் காலப் பகுப்பைப்பற்றிய அறிவு இன்னும் தொடக்கநிலையிலேயே இருக்கிறது. ஏராளமாக மனிதன் செய்த கருவிகள் இந்தியாவின் பல பகுதிகளில் கிடைத்தாலும் இந்தக் கருவிகளெல்லாம் எந்தக் காலத்தில், எந்தச் சூழ்நிலையில் செய்யப்பட்டன என்பதைக் கருத்து வேறுபாட்டுக்கு இடமின்றி இன்னும் சொல்லமுடியாமல் இருக்கிறோம். நடு இந்தியாவிலும் இமயமலைச் சாரலிலும் ஒரு சில இடங்களில் பிலேஸ்டோசீன் காலத்தைப்பற்றிய உறுதியான சான்றுகள் புதைபடிவங்கள்[37] உருவில் கிடைக்கின்றன. மற்ற இடங்களில் இதுவரையில் கிடைக்கவில்லை. இவைபோன்ற காலக் கணிப்புப்பற்றிய தனிப்பட்ட சான்றுகள் கிடைக்காத சமயத்தில் கிடைக்கும் செய்கருவிகளின் தன்மையை வைத்துக்கொண்டு காலத்தைக் கணிப்பது வழக்கமாக இருந்துவருகிறது. இதில் நிறையக் குறைகள் இருக்கின்றன. எப்படியென்றால், முன்பே குறிப்பிட்டது போல் ஒரேவகையான கற்கருவிகள் ஒரு நாட்டில் முதலில் வந்திருக்கலாம்; இன்னொரு நாட்டில் சற்றுக் காலம் தாழ்த்தி வழக்கத்துக்கு வந்திருக்கலாம். ஆகவே நிலஅமைப்பியல்பற்றிய தனிப்பட்ட சான்றுகள் கிடைக்கும்வரை கருவிகளை வைத்துக்கொண்டு காலக் கணிப்புச் செய்வதை ஒரு தீர்ந்த முடிவாக ஏற்றுக் கொள்ள முடியாது.

## கற்கருவிகளின் பொதுத்தன்மைகள்

### செய்முறை நுட்பங்கள்

கற்கருவிகளைப்பற்றி நிறைய ஆராய்ந்ததற்குப் பின்னல் சில பொதுப்படையான உண்மைகள் தெரிய வந்திருக்கின்றன. ஒவ்வொரு வகையான கற்கருவிகளையும் ஒவ்வொரு வகையான தொழில் நுட்பத்தை[38] வைத்துத்தான் உருவாக்கியிருக்கமுடியும் என்பது ஓர்

---

[37] Fossils
[38] Techniques

அடிப்படைச் செய்தி. அதாவது ஒவ்வொரு கருவியின் தன்மையையும் தொழில் நேர்த்தியையும் வைத்து அந்தக் கருவி எந்தப் பண்பாட்டு இனத்தைச் சேரும் என்று பெரும்பாலும் சொல்லிவிடலாம். இந்தவகையில் கற் கருவித் தொழில்நுட்பங்கள் அல்லது பாணிகள் அஷுலி யன்-அபவிலியோ (அஷுலியன்)[39], கிளாக்டோனியன்[40], லெவலாய்சியன்[41], மூஸ்டிரியன்[42] என்று சில பெரிய பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

இந்த இடத்தில் சில அடிப்படையான கற்கருவித் தொழில்நுட்பங்களை மட்டும் குறிப்பிடலாம். முதல் நிலையில் தொல்பழங்கால மக்கள் இயற்கையாகக் கிடைக் கக்கூடிய பெரிய கற்பாளங்களையோ அல்லது உருண்டை யான கூழாங்கற்களையோ எடுத்து, அவைகளிலிருந்து சில பெரிய சில்லுகளைப்[43] பெயர்த்து எடுத்துவிட்டுக் கருவிகளாகப் பயன்படுத்தினார்கள். இந்த நிலையில் சில்லுகள் பெயர்க்கப்பட்ட மூலக்கல்லில்[44] சில்லுகளுக்குச் சமமாக ஆழமான பள்ளங்கள் அல்லது குழிவுகள் ஏற் படுவது இயல்பு. இந்த ஆழமான குழிவுகள் உள்ள கருவிகளை வைத்துக்கொண்டு அவைகள் மிகப் பழமை யான தொழில்நுட்பத்தைச் சார்ந்தவை என்று சொல்ல லாம். இக்கருவிகளைச் செய்வதற்குப் பெரிய உருண்டை யான கற்களைச் சுத்தியலாகப் பயன்படுத்தினார்கள்; அல்லது கருவிகள் செய்யப் பயன்பட்ட கற்களையே சில பெரிய கற்கள்மீது மோதி சில்லுகளைப் பெயர்த்தெடுத் தார்கள். இதுவரை விளக்கப்பட்ட தொழில்நுட்பத்தைப் பட்டடை நுட்பம்[45] என்று சொல்லலாம். இவ்வகையில் செய்யப்பட்ட கருவிகள் அதிக மேடுபள்ளம் உள்ளன வாகக் கரடுமுரடாக உருவாயின. தென்கிழக்கு

[39] Abbevillio-Acheulian
[40] Clactonian
[41] Levalloisian
[42] Mousterian
[43] Flakes
[44] Core
[45] Block-on-block or Anvil technique

இங்கிலாந்தில் இடைப்பிலேஸ்டோசீன் காலத்தில் இருந்த கிளாக்டோனியன் கற்கருவிப் பண்பாடு இந்த முறையைப் பின்பற்றியதால் இந்த நுட்பத்தை முதலில் கிளாக்டோனியன் நுட்பம் என்று பெயர் கொடுத்து அழைத்தார்கள். பொதுவாக எல்லா நாடுகளிலும் பழங் கற்காலத்தின் முதல் கட்டத்தில் இந்த நுட்பத்தையே அதிகமாகப் பயன்படுத்தினுர்கள். சுத்தியலாகப் பயன் படுத்தும் கல், நீள் உருண்டை[46] வடிவமாக இருந்தாலோ அல்லது கல்லுக்குப் பதிலாக அதே உருவம் கொண்ட எலும்பையோ அல்லது கடினமான மரத்தையோ சுத்திய லாகப் பயன்படுத்தினுலோ கற்களிலிருந்து பெயர்த் தெடுக்கும் சில்லுகள் பட்டையாக வெளிவரும். மூலக் கல்லிலுங்கூடச் சில்லுகள் பெயர்ந்த பள்ளங்கள் ஆழம் இல்லாமல் காணப்படும். இவ்வகையான நீள் உருண் டைச் சுத்தியல்களைப் பயன்படுத்துவதன் வாயிலாகக் கருவிகளைக் கரடுமுரடான தோற்றம் இல்லாமல் நேர்த்தி யாக, கூர்மையான விளிம்பு உடையனவாகச் செய்ய முடியும். இந்த நுட்பத்தை நாளடைவில் கற்கால மனிதர்கள் பேரளவில் பயன்படுத்தினுர்கள். தென் னிந்தியா, தென் ஐரோப்பா, ஆப்ரிக்கா ஆகிய பகுதி களில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள அஷூலியன் கற்கருவிப் பண்பாடு இந்த நுட்பத்தை அதிகமாகப் பயன்படுத்திய தாகத் தெரிகிறது. எனவே இந்த நுட்பத்தை அஷூலி யன் நுட்பம் என்று சொல்லலாம். நீளுருண்டைச் சுத்தியல் நுட்பம்[47] எனவும் இதை அழைக்கிருர்கள். கற்கால நிலையின் கடைசிக் கட்டத்தில் லெவலாய்சியன் என்ற முறை வழக்கத்துக்கு வந்தது. இந்த நுட்பத்தில் மூலக் கல்லிலிருந்து சில்லுகளைப் பெயர்த்தெடுத்த பிறகு அந்தச் சில்லுகளிலிருந்து கருவிகளை நேரடியாக உரு வாக்கவில்லை. மாருக முதலில் மூலக் கல்லிலேயே வேண் டிய கருவியின் உருவத்தைச் செய்துகொண்டார்கள். அதற்காகப் பல சிறு சில்லுகளை மூலக்கல்லிலேயே வேண் டிய வாறு பெயர்த்தெடுத்தார்கள். கருவி ஓரளவுக்கு

[46] Cylinder
[47] Cylinder hammer technique

வேண்டப்படும் உருவம் அடைந்ததும், அதனுடைய தலைப்பாகத்தில் ஒரு பட்டையான மேடை[48] உண்டாகு மாறு சில சிறு சில்லுகளைப் பெயர்த்தெடுத்தார்கள். மேடைமீது பலமாக ஒரு அடி கொடுத்து அந்தக் கருவியை மூலக்கல்லிலிருந்து அப்படியே பெயர்த்தெடுத் தார்கள். இந்த வகையில் கருவியை மிக நேர்த்தியாகச் செய்யமுடியும். கருவிகளும் மிகச் சிறிய உருவங் களோடும் மிகக் கூர்மையான விளிம்புகளோடும் காணப் படும். இந்த லெவலாய்சியன் தொழில் நுட்பம்[49] கற் காலத்தின் கடைசிக் கட்டத்தில் உலகின் பெரும்பகுதியில் வழக்குக்கு வந்தது.

### கருவிகளின் பெயர்கள்

கருவிகளின் உருவங்களை வைத்தும், அவைகள் எந்தத் தொழிலுக்குப் பயன்படும் என்ற ஊகத்தைக் கொண்டும், கருவிகளுக்குப் பலவகையான பெயர்களை இட்டு அழைப்பது வழக்கம். மிகப் பழைய நிலையில் கருவிகள் பெரிய சில்லுகளிலிருந்து சில மாற்றங்களோடு செய்யப்பட்டனவாதலால் அவைகளைச் சில்லுக் கருவி கள்[50] என்று அழைக்கிறார்கள். அவைகள் வெட்டுவதற் குப் பயன்படுமாதலால் வெட்டிகள் அல்லது வெட்டும் கருவிகள்[51] என்று பெயரிடுகிறார்கள். சில்லுகளிலிருந்து செய்யாமல் உருண்டையான கற்களிலிருந்தே கருவிகளை உருவாக்கினால், அவைகளை மூலக்கருவிகள்[52] என்று பெயரிடுகிறார்கள். அபவிலியோ-அஷ்லியன் கற்கரு விப் பண்பாட்டில் முதலில் மூலக்கற்கருவிகள் அதிகமாக வழக்கத்தில் இருந்தன. பின்னால்தான் சில்லுக்கருவிகள் வழக்குக்கு வந்தன. இவைகளில் கோடரிபோன்று இருந்த கருவியைக் கைக்கோடரி[53] என்று முதலில்

---

[48] Faceted platform
[49] Levalloisian technique
[50] Flake tools
[51] Chopper or chopping tool
[52] Core tool
[53] Handaxe

பெயரிட்டார்கள். ஆனால் இது பெரும்பாலும் கோடரியைப்போல் பயன்படுத்தப்படாமல் ஒரு தோண்டு கருவியாகவே பயன்படுத்தப்பட்டது. இத்தோடு கிழிப்பான்[54] என்று சொல்லக்கூடிய ஒரு கருவி பெருமளவுக்கு இப்போதைய கோடரியின் உருவத்தைக் கொண்டிருந்தது. இன்னும் உருவங்களை வைத்து வட்டக்கருவி, டிரபீசியம் அல்லது கோடகக்கருவி, முக்கோணக்கருவி, நீள்வட்டக் கருவி, பிறைக்கருவி என்ற பல பெயர்களை இட்டு அழைக்கிறார்கள். இவைகளெல்லாம் கருவிகளைப்பற்றி ஆராய்வதற்காக, நம்முடைய வசதிக்காக இட்டுக் கொண்ட பெயர்கள். கற்காலத்தின் கடைசிக் கட்டத்தில் வழக்குக்கு வந்த சிறிய உருவம் கொண்ட கருவிகளைப் பல்வேறு பெயர்களிட்டு அழைக்கிறார்கள். அவைகளில் அதிகமாகக் கூர்மையான நுனிகள் கொண்ட கருவிகள் இருந்தன. இவைகளை 'முனைகள்' என்று பொதுவாக அழைப்பது வழக்கம்.

## கற்காலப் 'பண்பாடும்' 'நாகரிகமும்'—வரையறை

ஒருவகையான தொழில் நுட்பத்தைக் கொண்டு செய்யப்பட்டு ஓரிடத்தில் அல்லது ஒரு குறுகிய வட்டாரத்தில் கிடைக்கும் ஒரு சிறு கால எல்லையைச் சேர்ந்த கற்கருவிகளின் தொகுதியை ஒரு தொழில்முறை[55] அல்லது கருவித்தொகுதி[56] எனல் மரபு. ஒரு தொழில்முறை அல்லது கருவித்தொகுதி பரந்த அளவில் காணப்பட்டால் அப்பொழுது அது ஒரு 'பண்பாடு'[57] என்ற தகுதியைப் பெறுகிறது. கற்காலத்தில் பயன்படுத்தப்படும் 'பண்பாடு' என்னும் சொல் நாம் வழக்கமாகக் கொள்ளும் பொருளைக் கொடுக்காது என்பதை நினைவுகூர வேண்டும். பொதுவாக ஓரின மக்களின் வாழ்க்கை நிலையை மட்டும் இச்சொல் குறிப்பிடும். ஒரே வகையான வாழ்க்கை நிலையில் காணப்படும் வேறுபட்ட

[54] Cleaver
[55] Industry
[56] Assemblage
[57] Culture

பல பண்பாடுகளைச் சேர்த்து ஒரு 'நாகரிகம்'[58] என்று பெயரிட்டழைக்கலாம். இந்த அடிப்படையிலேயே சென்னைத் தொழில்முறை[59] சோவன் தொழில் முறை,[60] கைக்கோடரி அல்லது அபவிலியோ-அஷூலியன் பண்பாடு,[61] பழைய கற்கால நாகரிகம்[62] முதலான சொற்றொடர்கள் தொல்பழங் காலத்தைப் பற்றிய நூல்களில் கையாளப்படுகின்றன. இந்தப் பொதுப்படையான முன்னுரையோடு தமிழ்நாட்டுத் தொல்பழங்கால வரலாற்றைக் காண முனையலாம்.

## 2. முதல் கற்காலம்

### தமிழ்நாட்டின் பழைய கற்காலம் பற்றிய ஆய்வுகள்

இந்தியப் பழைய கற்காலம் முதல் கற்காலம், இடைக் கற்காலம், கடைக் கற்காலம் என்று மூன்று கட்டங்களாகப் பிரிக்கப்படுகிறது என்று மேலே குறிப்பிடப் பட்டது. இந்தப் பகுப்பு தமிழ்நாட்டுக்கும் பொருந்தும். இந்தியாவில் முதன்முதலாகத் தமிழ்நாட்டில்தான் பழங் கற்காலக் கருவி கண்டுபிடிக்கப்பட்டது. 1863-ல் ராபர்ட் புரூஸ் புட்[63] என்ற நிலஅமைப்பியல் ஆய்வாளர் சென்னையில் பல்லாவரத்துக்கு அருகில் முதன்முதலாக இந்தக் கண்டுபிடிப்பைச் செய்தார். அவருடைய தனிப் பெரு முயற்சியின் காரணமாகத் தென்னிந்தியாவில் பல இடங்களிலும், வட தமிழ்நாட்டிலும் பல கற்கருவி இருப் பிடங்கள்[64] கண்டுபிடிக்கப்பட்டன. இவரைத் தொடர்ந்து முறையான கற்கால ஆராய்ச்சி இந்த நூற்றாண்டில்தான் அதிகமாகச் செய்யப்பட்டது. 1930-க்குப் பின்னால் செங்கற்பட்டு மாவட்டத்தில் திருவள்ளூர் வட்டத்தில் அத்திரம்பாக்கம் என்ற ஊருக்கருகில் கொர்த்தலையாறு என்ற ஆற்றின் பள்ளத்தாக்கில் மேற்பரப்பு ஆய்வுகள்[65]

[58] Civilization
[59] Madras Industry
[60] Soan Industry
[61] Handaxe or Abbeovillio-Acheulian
[62] Palaeolithic civilization
[63] Robert Bruce Foote
[64] Site
[65] Exploration

செய்யப்பட்டன. 1962—64ஆம் ஆண்டுகளில் இந்த வட்டத்தில் குடியம் என்ற ஊரிலிருக்கும் கற்காலக் குகையையும் இன்னும் சில இடங்களையும் இந்தியத் தொல்பொருள்துறை அகழ்வாய்வு செய்து பார்த்தது. தெற்கு மாவட்டங்களில் இன்னும் முறையான ஆய்வு அதிகமாக நடத்தப்படவில்லை. ஆயினும் பல தடவை குறுக்கும் நெடுக்கும் போய்வந்த பிறகும் ராபர்ட் புரூஸ் புட் தெற்கு மாவட்டங்களில் அதிகமாகக் கற்காலத் தடயங்களைக் கண்டுபிடிக்கமுடியவில்லை. தமிழ்நாட்டில் முதல் கற்காலக் கருவிகள் கண்டுபிடிக்கப்பட்ட இடங்களின் பட்டியல் ஒன்று கீழே கொடுக்கப்பட்டுள்ளது.[66]

| | | |
|---|---|---|
| செங்கற்பட்டு | திருவள்ளூர் | குடியம் |
| | | அத்திரம்பாக்கம் |
| | | கிருஷ்ணபுரம் |
| | | ரங்கபுரம் |
| | | தேவேந்திரபாக்கம் |
| செங்கற்பட்டு | பொன்னேரி | வடமதுரை |
| | | மஞ்சக்கரணை |
| | | கூனிபாளையம் |
| | | ஏரிக்குப்பம் |
| | | ஊத்துக்கோட்டை |
| | | மதரிமேடு |
| | | புதூர் |
| | | கரடிப்புதூர் |
| | | சத்தியவேடு |
| | | போந்தப்பாக்கம் |
| | | மாதர்பாக்கம் |
| | | ரோஷநகர் |
| | | அமரம்பேடு |
| | | எருமைவெட்டிபாளையம் |

[66] Robert Bruce Foote, *Indian Pre-historic and Proto-historic Antiquities*: Notes on their Ages and Distribution (Madras, 1916), pp. 167-172 & *Indian Archaeology*, A Review, 1962-63, p. 12; 1963-64, p. 19; 1964-65, pp. 20-21.

| | | |
|---|---|---|
| செங்கற்பட்டு | திருப்பெரும் புதூர் | திருமுல்லைவாயில்<br>புத்தூர்<br>திருப்பெரும்புதூர் |
| செங்கற்பட்டு | காஞ்சி | பரந்தூர்<br>வதியூர் |
| செங்கற்பட்டு | திருத்தணி | நாயக்கன்பாளையம்<br>நகரி<br>மாவண்டூர் |
| வடார்க்காடு | அரக்கோணம் | அரக்கோணம்<br>புலியமங்கலம்<br>திருமால்புரம்<br>கீழ்வெண்பாக்கம்<br>அம்பரீஷபுரம்<br>தக்கோலம் |
| மதுரை | மதுரை | அவியூர் |
| தஞ்சாவூர் | ... | வங்கானங்குடிக்காடு |
| திருச்சிராப் பள்ளி | உடையார் பாளையம் | நின்னியூர் |

மேலே உள்ள பட்டியலிலிருந்து தெரியவரும் ஒரு முக்கிய செய்தி, முதல் கற்காலக் கருவிகள் பெரும் பாலும் செங்கற்பட்டு மாவட்டத்திலும், வடார்க்காடு மாவட்டத்திலுமே அதிக அளவில் கிடைக்கின்றன என்பது. அதாவது பாலாற்றுக்கு வடக்கிலேயே இக் கருவிகள் நிறையக் கிடைக்கின்றன. பாலாற்றுக்குத் தெற்கே மிகக் குறைந்த அளவிலேயே கிடைத்திருக் கின்றன. பாலாற்றுக்கு வடக்கே அதிகமாகக் கிடைக்கக் காரணம் இந்தப் பகுதியில் கற்கருவிகள் செய்யச் சிறப்பாகப் பயன்படும் குவார்ட்சைட் என்ற கல்வகை கிடைப்பதுதான் என்று கருதுகிறார்கள். இந்தக் கல் வகை தெற்கு மாவட்டங்களில் கிடைப்பதில்லை. செங்கற் பட்டு மாவட்டத்தில் திருவள்ளூர், பொன்னேரி வட்டங் களிலுள்ள மலைக்குன்றுகளில் இந்தக் கல் அதிகமாகக்

கிடைக்கிறது. முதல் கற்காலக் கருவிகள் தெற்கு மாவட்டங்களில் கிடைக்கவில்லை என்றாலும், இடைக் கற்காலக் கருவிகளும், கடைக்கற்காலக் கருவிகளும் கிடைக்கின்றன. அண்மையில் மதுரை மாவட்டத்தில் திருமங்கலம், பெரியகுளம் வட்டங்களில் இடைக்கற் காலக் கருவிகள் பல இடங்களில் கண்டுபிடிக்கப்பட்டி ருக்கின்றன. கடைக்கற்காலக் கருவிகள் திருநெல்வேலி மாவட்டத்தில் கிழக்குக் கடற்கரை ஓரமாகத் தூத்துக்குடி அருகில் அதிக அளவில் கிடைக்கின்றன.

முன்பே குறிப்பிட்டதைப்போல் தமிழ்நாட்டுக் கற் காலக் கருவிகளை வெளியுலகுக்குத் தெரியச் செய்தவர் ராபர்ட் புரூஸ் புட் என்ற நிலஅமைப்பியல் ஆய்வாள ராவார். இவர் தமிழ்நாட்டிலும், மற்றும் தென்னிந்தி யாவின் பல பகுதிகளிலும் திரட்டிய கற்கருவிகளைச் சென்னைப் பொருட்காட்சிச் சாலைக்குக் கொடையாக அளித்துள்ளார். இவருக்குப் பின்னால் 1930ஐச் சார்ந்து கர்நூல் மாவட்டக் கற்கருவிகளை ஆராய்ந்த பர்கிட்[67] என்பவர் செங்கற்பட்டு மாவட்டத்தில் கிடைத்த கற் கருவிகளையும் கூடவே ஆய்ந்து தன்னுடைய கருத்து களை வெளியிட்டுள்ளார். இவரைத் தொடர்ந்து பஞ்சாப் பகுதியில் பனிப்படர்வுச் சின்னங்களை ஆராய வந்த குழுவைச் சேர்ந்த பாட்டர்ஸன்[68] என்பவர் செங்கற் பட்டு மாவட்டத்தில் ஓரளவுக்கு ஆய்வு நடத்தினார். அவ ரோடு சேர்ந்தும், தனியாகவும் ஆராய்ச்சி செய்த வி. டி. கிருஷ்ணசாமி என்பவர் சில புதிய செய்திகளை வெளி யிட்டார். இதற்குப் பின்னால் இந்தியத் தொல்பொருள் துறையைச் சேர்ந்த சில ஆய்வாளர்கள் இக்கருவி நிலை களை ஆய்ந்துள்ளார்கள்; அகழ்வாய்வும் செய்துள் ளார்கள். திருநெல்வேலிக் கடற்கரையில் கிடைக்கும் கடைக்கற்காலக் கருவிகளைப்பற்றி நன்கு ஆராய்ந்து சூனர் என்பவரும், ஆல்சின் என்ற அம்மையாரும்[69]

---

[67] Miles Burkitt

[68] T. T. Paterson

[69] F. E. Zeuner; Bridget Allchin

சேர்ந்து பல செய்திகளை வெளியிட்டுள்ளார்கள். மேலே குறிப்பிட்ட இவர்களுடைய கூட்டு முயற்சியினால் தமிழ் நாட்டுக் கற்காலம் பற்றிய அறிவு ஓரளவுக்கு முழுமை யாக நமக்குக் கிடைக்கிறது.

## கொர்த்தலையாற்றுப் படுகைகள்

தமிழ்நாட்டில் திருவள்ளூர், பொன்னேரி வட்டங்கள் வழியே ஓடி எண்ணூருக்கு அருகில் கடலோடு கலக்கும் கொர்த்தலையாற்றுப் பள்ளத்தாக்கில்தான் முதல் கற் காலத் தடயங்களைக் காண்கிறோம். இந்தக் கொர்த்தலை யாற்றுப் பள்ளத்தாக்கில்தான் பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன்னால் இப்போதைய பாலாறு ஓடிக் கொண்டிருந்ததாகவும், அண்மைக் காலத்தில்தான் பாலாறு தன்னுடைய இப்போதைய நீர்ப்போக்கை மேற் கொண்டதாகவும் நிலஅமைப்பியல் ஆய்வாளர்கள் கருதுகிறார்கள். கொர்த்தலையாற்றுப் பள்ளத்தாக்கை மேலோட்டமாகப் பார்த்தாலே அந்தப் பள்ளத்தாக்கில் ஒரு காலத்தில் மிகப் பெரிய ஆறு ஓடிக்கொண்டிருந்ததை உணரலாம். இப்போது அந்த ஆறு அளவில் மிகச் சுருங்கிவிட்டது. இந்த ஆற்றுப் பள்ளத்தாக்கில் திரு வள்ளூர் வட்டத்திலுள்ள அலிக்கூர்மலைக் குன்றுகளி லிருந்து பொன்னேரி வட்டத்திலுள்ள வடமதுரை வரைக்கும் ஆங்காங்கே சில ஆற்றுப் படுகைகள் காணப் படுகின்றன. இப்படுகைகளே நமக்குக் கற்காலச் செய்தி களை, குறிப்பாக முதல் கற்காலச் செய்திகளைத் தெரிவிக் கின்றன.

கொர்த்தலையாற்றுப் பள்ளத்தாக்கு உருவாவதற்கு முன்னால் தென்னிந்தியாவில் நீண்டகாலம் பெரு மழைகள் இடையறாது பெய்த ஒரு காலத்தைத் தொடர்ந்து, ஒரு வறட்சியான காலநிலை இருந்தது. தென்னிந்தியக் கடற்கரையோரப் பகுதிகளில் காணப் படும் லாட்டரைட் எனப்படும் இரும்பகச் செவ்வண்ணக் களிமண் பரப்பிலிருந்து இந்தச் செய்தி உய்த்துணரப் படுகிறது. பெருமழையைத் தொடர்ந்து வறட்சியான

காலம் இருந்தால்தான் இந்த லாட்டரைட் உருவாகும். இந்த லாட்டரைட் பரப்பு அல்லது சமவெளி[70] முதல் பிலீஸ்டோசீன் காலம் முடியுந்தறுவாயில் ஏற்பட்டது என்பதை அண்மைக்கால நிலஅமைப்பியல், தொல் பொருளியல் ஆய்வுகள் புலப்படுத்துகின்றன. இந்த லாட்டரைட் பரப்பு ஏற்பட்ட பிறகு இன்னொரு பெரு மழைக்காலம் தொடர்ந்து நீடித்தது. இக்காலத்தில் ஏற் பட்ட பெருவெள்ளங்களால் மலைக்குன்றுகளிலிருந்து அடித்துவரப்பட்ட பெருங் கூழாங்கற்கள் சமவெளியில் (20 அடி ஆழத்திற்கும் மேல்) படிந்து இறுகித் திரண்டு ஒரு கனமான அடுக்கு ஏற்பட்டது. இந்தக் கூழாங்கல் திரளை[71] அடுக்கின்மீது சிதைந்த லாட்டரைட் ஓர் அடுக் காகப் படிந்தது. இதன்மீது நாளாவட்டத்தில் ஒரு வண்டல் படிவடுக்கு ஏற்பட்டது. இந்த மூன்று படி வடுக்குகளும் சேர்ந்த தொகுதி கொர்த்தலையாற்றுப் பள்ளத்தாக்கில் ஓர் ஆற்றுப் படுகையாகச் சில இடங் களில் காணப்படுகிறது. வடமதுரையில் சில ஆண்டு களுக்கு முன்பு வெட்டிய ஒரு குளத்தில் இப்படுகையின் அடுக்குகள் நன்றாகத் தெரிகின்றன. இந்தப் படுகை 'படிவுப்படுகை'[72] என அழைக்கப்படுகிறது. இந்தப் படுகை இப்போதைய நீர்மட்டத்திலிருந்து நூறு அடி உயரம் கொண்டதாக உள்ளது. அதாவது இந்தப் படுகை ஏற்பட்ட காலத்தில் ஓடிய ஆற்றின் நீர்மட்டம் இன்றைய நீர்மட்டத்தைவிட நூறு அடி உயரத்தில் இருந்ததாகக் கொள்ளவேண்டும்.

படிவுப்படுகை உருவானதைத் தொடர்ந்து ஏற்பட்ட பெருமழைக் காலத்தில் இப்படுகையில் அரிப்பு ஏற் பட்டது. இந்த அரிப்பின் காரணமாக முதல் படுகை எனப்படும் படுகை ஏற்பட்டது. 60. அடி உயரம் கொண்டதாக உள்ள இது சோழவரம் ஏரிக்கு மேற்கில் ஆத்தந்தாங்கல் (ஆற்றந்தாங்கல்) என்ற இடத்தில் தெளிவாகத் தெரிகிறது.

---

[70] Laterite Peneplain
[71] Boulder Conglomerate
[72] Depositional Terrace

அடுத்து ஏற்பட்ட மழை அரிப்பினால் 20 அடி உயரம் கொண்ட இரண்டாம் படுகை ஏற்பட்டது. படிவுப்படுகை யைப் போல இப்படுகையும் தமிழ்நாட்டுக் கற்கால அறி வுக்கு மிகவும் முக்கியமானதாகக் காணப்படுகிறது. திருவள்ளூர் வட்டத்தில் பூண்டி நீர்த்தேக்கப் பகுதியில், அத்திரம்பாக்கம் என்ற ஊருக்கு அருகில் இந்தப் படுகை நன்கு காணக்கிடக்கிறது. அத்திரம்பாக்கத்துக்கு ஒரு கிலோ மீட்டர் தள்ளி பூடிதமன்னுவங்க (பூழித மண்ணு வாங்கல்) என்ற ஓடையின் வலக்கரையில் ஒரு மேடான பகுதியில் இந்த அடுக்கு அகழ்வுசெய்து பார்க்கப்பட்டது. இந்த அகழ்வின் மூலம் இப் படுகை கீழிருந்து மேலாகக் கீழ்க்கண்டவாறு படிவடுக்குகளைக் கொண்டுள்ளதெனை அறியப்பட்டது.[73] முதலில் சிதைந்த திருப்பெரும் புதூர் களிமண்பாறை ஓர் அடுக்காக உள்ளது. இத னுடைய மேல்பகுதி களிமண்ணாக உள்ளது. இக்களி மண்ணினூடே அஷுலியன் கருவிகள் காணப்படு கின்றன. இப்படிவடுக்குக்கு மேல் உள்ள அடுக்கு சிதைந்த லாட்டரைட் சரளையைக் கொண்டுள்ளது. இதில் அஷுலியன் கட்டத்திற்குப் பிற்பட்ட கருவிகள் கிடைக்கின்றன. இதற்குமேல் பழுப்புநிற வண்டல்மண் அடுக்கு கிடக்கிறது. கருவிகள் ஏதும் இவ்வடுக்கில் கிடைக்கவில்லை. கடைசியாக மேலே தரை மட்டத்தில் சிறு கற்கருவிகள் காணப்படுகின்றன.

எட்டடி உயரம் கொண்ட கடைசிப் படுகை (மூன்றும் படுகை) எருமைவெட்டிபாளையம் என்ற இடத்தில் காணப்படுகிறது. இது பெரும்பாலும் தற்கால வண்டல் மண் படிவைக் கொண்டுள்ளது. மேலே குறிப்பிட்ட நான்கு படுகைகளை இணைத்தால் கிடைக்கும் குறுக்கு வெட்டுப் பார்வையைக் கொடுக்கப்பட்டுள்ள படத்தில் (வரைபடம் 1) காணலாம்.

முதலில் விளக்கியபடி இந்த நான்கு படுகைகளிலும் காலத்தால் முந்தியது படிவுப்படுகையாகும். இந்தப்

---

[73] *Indian Archaeology*, A Review (1964-65), p. 21.

படுகை லாட்டரைட் சமவெளிக்குப் பின் ஏற்பட்டது என்று சுட்டிக்காட்டப்பட்டது. லாட்டரைட் சமவெளி முதல் பிலெஸ்டோசீன் முடியுந்தறுவாயில் ஏற்பட்டதால், படிவுப்படுகை இடைப்பிலெஸ்டோசீன் காலத்தைச் சேர்ந்ததாக இருக்கவேண்டும். ஆனல் இந்தப் படுகையிலோ, இதற்குப் பின் ஏற்பட்ட படுகைகளிலோ எவ்வகைத் தொல்லுயிர்ப் புதைபடிவங்களும் கிடைக்கவில்லையாதலால் இவைகள் இடைப்பிலெஸ்டோசீன் காலத்தில் எந்தக் கட்டத்தில் ஏற்பட்டன என்று வரையறுத்துக் கூற இயலவில்லை. ஆனல், இந்த வகையில் 1964இல் ஒட்டி வைன்ரைட்[74] என்ற ஆய்வாளர் நர்மதையாற்றின் கீழ்ப் பகுதியை ஆய்ந்து வெளியிட்டுள்ள செய்திகள் நமக்கு ஓரளவுக்கு உதவுகின்றன. இவர் நர்மதையாற்றுப் படுகைகளைப் பழைய கடல் நீர்மட்டங்களோடு தொடர்பு படுத்தி, அதையொட்டி அவைகளைப் பனிப்படர்வு காலங்களோடு பொருத்திக் காட்டியுள்ளார். நர்மதையாற்றுப் படுகைகள் மற்ற தென்னிந்திய ஆற்றுப்படுகைகளோடு பெரிதும் ஒற்றுமையுடையனவாக உள்ளன. அதை வைத்துக் கிரகரி போஸல் என்பவர் இப்படுகைகளையும் அவைகளில் காணப்படும் கற்காலக் கருவிகளையும் ஒரு தோராயமான காலவரையறையில் பொருத்தியுள்ளார்.[75] இவர் கருத்துப்படி லாட்டரைட் சமவெளியை அடுத்து ஏற்பட்ட படிவுப்படுகையின் கீழ் அடுக்கிலுள்ள கூழாங்கல் திரளை மூன்றும் பனிப்படர்வுக் காலத்தைச் சேர்ந்ததாகும். இதற்கு மேலுள்ள அடுக்கில் காணப்படும் சிதைந்த லாட்டரைட் மூன்றும் பனிப்படர்விடைக் காலத்தைச் சேர்ந்ததாகும். 20 அடி உயரம் கொண்ட இரண்டாம் படுகை நான்காம் பனிப்படர்வுக் காலத்தைச் சேர்ந்ததாகும். அதாவது நிலஅமைப்பியல் காலப்படி படிவுப்படுகை இடைப்பிலெஸ்டோசீன் காலத்தின்

[74] Wainwright C. J.

[75] Gregory Possehl, 'Comments on the Chronology of Stone Age in India' in Walter A. Fairservis, (Ed.), *The Roots of Ancient India* (London: George Allen & Unwin Ltd., 1971), pp. 383–389.

இறுதியையும், இரண்டாம் படுகை கடைப்பிலெஸ்டோசீன் காலத்தையும் சேர்ந்ததாகக் கொள்ளவேண்டும். ஆண்டுக் கணக்கில் சொல்லப்போனால் படிவுப்படுகை இன்றிலிருந்து ஏறக்குறைய 2,00,000 ஆண்டுகளுக்கு முந்தியதாகவும், இரண்டாம் படுகை 1,00,000 ஆண்டுகளிலிருந்து 50,000 ஆண்டுகள்வரை முந்தியதாவும் இருக்கலாம். இந்தக் காலக் கணிப்பை மனத்திலிருத்தி இப்படுகைகள் வழங்கும் கருவிகளைப்பற்றிப் பார்க்கலாம்.

### கருவிகள்

தமிழ்நாட்டைப் பொறுத்தவரையில் படிவுப்படுகையின் கீழடுக்கில் கூழாங்கல் திரளையில்தான் பழமையான கற்கருவிகள் கிடைக்கின்றன. வடமதுரைக்கு அருகில் இக்கூழாங்கல் திரளையடுக்கிலிருந்து மிகுதியாகக் கருவிகள் கண்டெடுக்கப்பட்டன. இக்கருவிகள் மொத்தமாக அபவிலியோ—அஷ-லியன் கைக்கோடரிப் பண்பாட்டைச் சேர்ந்தவை. இவைகளைப்பற்றி ஊன்றிக் கவனிக்க வேண்டிய செய்தி என்னவென்றால், கருவிகளின் வளர்ச்சி நிலையைப் படிப்படியாக அறியமுடியாத நிலைமையாகும். இந்த நிலைமை ஏனென்றால் ஐரோப்பாவிலும், ஆப்ரிக்காவிலும் காலத்தால் முந்தியவை, பிந்தியவை என்று பிரித்துப் பாகுபடுத்தப்படும் கருவிகள் யாவும் இங்கு ஒருசேரக் கிடைக்கின்றன.[76] இவ்வாறு கைக்கோடரிப் பண்பாட்டில் முந்திய கருவிகளும், பிந்திய கருவிகளும் கலந்து கிடைக்கும் நிலை வடமேற்குப் பகுதியொழிந்த இந்தியா முழுவதிலும் பெரும்பாலும் ஒரே வகையாக உள்ளது. கூழாங்கல் திரளையடுக்கை அடுத்து மேலுள்ள சிதைந்த லாட்டரைட் அடுக்கில் இடை அஷ-லியன் கருவிகள் கிடைக்கின்றன. அத்திரம் பாக்கத்திலுள்ள இரண்டாம் படுகையில் முறையான வளர்ச்சிப் படிகளோடு அஷ-லியன் கருவிகள் கிடைக்கின்றன.

---

[76] Sankalia, H. D. *Pre-history and Proto-history of India and Pakistan* (University of Bombay, 1962), p. 38.

வடமதுரையில் கூழாங்கல் திரளையிலிருந்து எடுத்த கருவிகளைப் பாட்டர்சன் மூன்று பிரிவுகளாகப் பாகு படுத்திக் காட்டினார்.[77] மூன்று பிரிவுகளையும் மூன்று வளர்ச்சிப் படிகளாகக் கொள்ளலாம் என்பது அவர் கருத்து. ஆனால் எல்லாக் கருவிகளும் ஒருசேரக் கிடைக்கின்றனவாதலால் இப்பகுப்பு ஒரு ஊகமான பகுப்பு மட்டுமே. கருவிகளின் தொழில்நேர்த்தி, மேலோட்டு நிறம் இவைகளை வைத்து இந்தப் பாகுபாடு செய்யப்பட்டது. முதல் பிரிவில் அடங்கும் கருவிகள் கரடுமுரடான தோற்றம் கொண்டவை; பட்டடை நுட்பத்தைக்கொண்டு செய்யப்பட்டவை. இவற்றின் சில்லுகள் பெயர்ந்த இடங்கள் ஆழமான குழிவுகளைக் கொண்டுள்ளன. மேல் ஓடு ஒருவகையான வெண்ணிறப் பாகத்தைப்[78] பெற்றுள்ளது. மேல் அடுக்கிலுள்ள சிதைந்த லாட்டரைட்டோடு ஒட்டியிருந்ததன் காரண மாகச் செந்நிறக் கறையைப் பெற்ற கருவிகள் இரண்டாம் பிரிவில் சேர்க்கப்பட்டன. முந்திய பிரிவைவிட வளர்ச்சி பெற்ற கைக்கோடரிப் பண்பாட்டை அதாவது நடு அஷ-லியன் பண்பாட்டைச் சேர்ந்த கருவிகள் இவை. மூன்றும் பிரிவில் செந்நிறக் கறை பெறாத மிக வளர்ச்சி யடைந்த கடைஅஷ-லியன் கட்டக் கருவிகள் சேர்க்கப் படுகின்றன. அத்திரம்பாக்கம் படுகையில் காணப் படும் கருவிகள் பெரும்பாலும் இந்த மூன்றும் பிரிவைச் சேர்ந்தவையே.

கைக்கோடரிப் பண்பாட்டைப் பொறுத்தவரையில் முதல் கட்டம் அபவிலியன் எனவும், அதற்கடுத்த கட்டம் அஷ-லியன் எனவும் அழைக்கப்படுகின்றன. அஷ-லியன் கட்டத்தில் பல உட்பிரிவுகளும் உள்ளன. மேலே குறிப்பிட்டதைப் போல வடமதுரையில் கூழாங்கல் திரளையில் இரண்டு கட்டங்களைச் சேர்ந்த கருவிகளும் கும்பலாகக் கிடைக்கின்றன. அதனால் இரு கட்டங்

[77] Krishnaswami, V. D., 'Stone Age India', *Ancient India* (Bulletin of the Archaeological Survey of India No. 3 (1947) p. 33.
[78] Cream coloured patination

களின் முறையான வளர்ச்சிப் படிகள் புலப்படவில்லை. அத்திரம்பாக்கம் படுகையில் அஷூலியனின் கடைசிக் கட்டத்தைச் சேர்ந்த கருவிகள் கிடைக்கின்றன. இங்குக் கீழிருந்து மேலாக முறையான வளர்ச்சிப்படிகள் தெரிகின்றன. குடியம் மலைக்குகையிலும், பக்கத்தில் வேறு இரு இடங்களிலும் செய்த அகழ்வாய்வுகளிலும் அத்திரம்பாக்கப் படுகையில் காணும் வளர்ச்சிப் படிகள் ஓரளவு காணப்பட்டன.[79] ஆனால் இதன் முழு விவரம் இன்னும் வெளியிடப்படவில்லை.

அபவிலியன் கட்டத்தில் சேர்க்கப்படும் வடமதுரைக் கருவிகளில் கைக்கோடரிகள் நேர்த்தியில்லாமல் கரடு முரடான தோற்றம் கொண்டுள்ளன. தடித்த தலைப் பாகத்தையும், அதிக அளவில் மூல ஓட்டையும் கொண்டுள்ளன. வெட்டு விளிம்பு நேராக இல்லை. கருவி செய்ய எடுத்துக்கொண்ட கூழாங்கற்கள் பெரியவையாகவும், ஒழுங்குருவம் அற்றும் காணப்படுகின்றன. கருவிகளாகப் பயன்படுத்தப்பட்ட சில்லுகளில் எவ்வித மறு நுணுக்க வேலைப்பாடும் இல்லை. அஷூலியன் கட்டக் கருவிகள் முன்னவைகளைக் காட்டிலும் சிறுத்தும் நேர்த்தியாகவும் உள்ளன. கருவிகள் தட்டையாக உள்ளன. இரு பக்கங்களிலும் முற்றும் நீளுருண்டைச் சுத்தியல் நுட்பப்படி சில்லுகள் பெயர்க்கப்பட்டு, செதிள் போன்ற தோற்றம் பெற்றுத் தோன்றுகின்றன. பெரும்பாலும் பேரிக்காய் உருவமும் நீள்வட்ட உருவமும் பெற்றவைகளாக உள்ள இவை சுற்றிலும் கூரிய வெட்டு விளிம்பைப் பெற்றுள்ளன. கைக்கோடரிகளோடு சேர்ந்து கிழிப்பான்கள் சில அகப்படுகின்றன. சில்லுகளுங்கூட ஓரளவு செதுக்கப்பட்டுள்ளன. சில்லுகள் பெயர்க்கப்பட்ட கருவி மூலங்கள்[80] வட்டுருவம் கொண்டுள்ளன.

வடமதுரையிலும், அத்திரம்பாக்கப் படுகையிலும் கிடைக்கும் கடைஅஷூலியன் கருவிகள் இன்னும்

---

[79] *Indian Archaeology*, A Review (1963–64), p. 19.
[80] Cores

நேர்த்தியாக, தட்டையாக, கூரிய விளிம்புடையனவாக உள்ளன. கைக்கோடரிகளோடு அதிக எண்ணிக்கையில் கிழிப்பான்கள் கிடைக்கின்றன. சில கைக்கோடரிகள் நீண்டு தட்டையாகப் பிரான்சில் கிடைக்கும் மிகாக்கு[81] உருவங்களை மிகவும் ஒத்துள்ளன. கிழிப்பான்கள் பல உருவங்களில் உள்ளன. இந்தக் கட்டத்தில் பெரும்பாலும் சில்லுகளைப் பயன்படுத்தியே கருவிகள் செய்யப்பட்டுள்ளன. இவைகளேயன்றிப் பஞ்சாப் பகுதியில் காணப்படும் சோவன் தொழில்முறைக் கருவிகளை ஒத்த வெட்டிகளும், வெட்டும் கருவிகளுங்கூடக் கிடைக்கின்றன. அத்திரம்பாக்கத்தில் மேல் மட்டத்திலேயே லெவலாய்சியன் நுட்பச் சில்லுகள் அகப்படுகின்றன.

## கருவிகளின் பயன்

இனி, இக்கருவிகளைப் பயன்படுத்திய மனிதர்களின் வாழ்க்கைநிலையை அறிய முனையலாம். மேலே குறிப்பிட்ட கருவிகள் எந்தெந்த வகையில் பயன்படும் என்று அறிந்து கொண்டாலே ஓரளவு இக்கால வாழ்க்கை நிலையை உணரமுடியும். முதல் கட்டத்தில் அதிகமாகக் கிடைக்கும் கருவிகள் கைக்கோடரிகள் எனப்படுபவை என்று கண்டோம். இவை மேலே சொன்னபடி பேரிக்காய் உருவத்தில் கூம்பிய முனையையும், மழுங்கலான தலைப்பாகத்தையும், சுற்றிலுமோ அல்லது ஒரு பக்கத்திலோ வெட்டு விளிம்பையும் கொண்டவை (வரைபடங்கள் 2 & 3). கூம்பிய முனையைக் கொண்டு நிலத்தைத் தோண்டுவது எளிது. அதே போல மரத்தைக் கடைவதும் எளிது. பக்கவாட்டிலுள்ள வெட்டுவிளிம்பைக் கொண்டு மரத்தைச் சீவலாம்; மரக் கிளையை அல்லது இறைச்சியை வெட்டலாம்; தோலைச் சுரண்டலாம். இவைகளை மரப்பிடியின் நுனியில் மரப்பட்டை அல்லது தோல் கொண்டு கட்டி ஏற்றினால் வேல் போலப் பயன்படுத்தலாம் (வரைபடம் 4). அடுத்த கட்டத்தில் கிடைக்கும் கிழிப்பான்கள் (வரைபடம் 5). இன்றைய

---

[81] Micoque

கோடரி போன்ற தோற்றமும் பயனும் கொண்டவை. நுனி அல்லது வாய்ப்பாகத்தில் அகலமான கூரிய வெட்டுவிளிம்பைப் பெற்றுள்ள இவற்றைக் கைப்பிடியில் பொருத்தினால், கோடரி போன்று மரம் வெட்டப் பயன் படும். தனியாகத் தோலைக் கீற, ஊனை வெட்ட, மரப் பட்டையை அல்லது தோலைச் சீவ, இப்படிப் பல வகை யில் பயன்படும். இவைகளல்லாமல் கிடைக்கும் பிற சில்லுக் கருவிகளும், வெட்டிகள் (வரைபடம் 6) எனப் படும் கருவிகளும் சீவ, சுரண்ட, வெட்ட மிகுதியாகப் பயன்படும். வட்டுருக் கொண்ட கருவிமூலங்களைச் சுழற்றி வீசியெறியலாம்.

## வாழ்க்கைநிலை

ஆக, கருவிகளின் தன்மையை வைத்துப் பார்க்கும் பொழுது, தமிழ்நாட்டுப் பழங்கற்கால மனிதர் மற்ற இடங்களில் போலவே, வேட்டையாடும் வாழ்க்கை நிலை யில் இருந்தவர் எனலாம். இந்தக் கற்கருவிகளேயல்லா மல் அவர்கள் மரக்கிளைகளைக் கூர்மையாகச் செதுக்கி யும் தோண்டுகருவிகளாகப் பயன்படுத்தியிருக்கலாம். அப்படிச் செதுக்க இக் கற்கருவிகள் நன்கு பயன்படும். எலும்புகளையும் கருவிகளாகப் பயன்படுத்தியிருக்கலாம். ஆனால் எலும்புக் கருவிகளைப் பற்றிய தடயங்கள் இது வரையில் கிடைக்கவில்லை. காரணம் இங்கு இதுவரையில் இவர்களுடைய இருப்பிடங்களின் (வீடுகளின்) சின்னங் கள் அகப்படவில்லை. திருவள்ளூர் வட்டத்தில் பத்துப் பதினைந்து மலைக்குகைகள் உள்ளன. ஆனால், அவைகளுள் இரண்டு மூன்று குகைகளைத்தான் கற்கால மனிதர்கள் பயன்படுத்தினார்கள் எனத் தெரிகிறது. மேலே சொன்னபடி ஒரு குகையை அகழ்வு செய்து பார்த்ததில் கடைஅஷ-லியன் காலக் கருவிகள் கிடைத்தன. ஆனால் கருவிகள் மிகச் சிலவே காணப் பட்டதால் இக்குகையில் கற்கால மனிதர்கள் ஒரு சில சமயங்களில் மட்டும் வந்து தங்கினார்கள் எனக் கருத வேண்டியுள்ளது. இங்கு எந்த எலும்புச் சின்னங்களும்

கிடைக்கவில்லை. அதனால் இந்த மனிதர்கள் வேட்டையாடிய விலங்குகளைப் பற்றி ஒன்றும் அறிய முடியவில்லை. இதே காலத்தில் மகாராஷ்டிரப் பகுதியிலும் மற்றச் சில இடங்களிலும் நீண்ட தந்தமுள்ள யானைகளும், மூன்று குளம்பு பெற்ற குதிரைகளும், காட்டு ஆவினங்களும் வாழ்ந்தன என்பதற்குச் சான்றுகள் கிடைத்துள்ளன.

முதல் கற்கால மனிதர்கள் இப்பகுதியில் முதலில் அடியெடுத்துவைத்த காலத்தில் பெருமழைகள் பெய்த வண்ணமிருந்தன. கூழாங்கல் திரளையடுக்கு அப்பொழுது ஏற்பட்டதென்று பார்த்தோம். அப்பொழுது காடுகள் அடர்த்தியாக இருந்திருக்கலாம். ஆனால் பெரும்பாலும் இக்கால மனிதர்கள் காடுகள் அற்ற ஓரளவு திறந்த சமவெளிகளிலேயே வாழ்ந்தார்கள்; உயரமான மலைப்பகுதிகளுக்குச் செல்லவில்லை; ஆற்றுப் பள்ளத்தாக்கைச் சேர்ந்தே வாழ்ந்தார்கள். கடற்கரை ஓரங்களுக்கும் செல்லவில்லை என்ற செய்திகள் இந்தியாவிலும் மற்ற இடங்களிலும் கற்கருவிகள் காணப்படும் இடங்களை வைத்து ஊகிக்கப்படுகின்றன. தமிழ்நாட்டிலும் அதே நிலைதான் இருந்தது. கருவிகள் உயரமான மலைகளிலும் கடற்கரையோரப் பகுதிகளிலும் அகப்படவில்லை. அகப்படும் இடங்கள் பெரும்பாலும் சிறு புதர்கள் வளரும் திறந்த சமவெளிகளாகவே இன்று காணப்படுகின்றன. முற்காலத்தில் ஏறக்குறைய இதே நிலைமை இருந்திருக்க வாய்ப்புள்ளது. ஆற்றுப் படுகைகளில்தான் இயற்கையாகக் கருவிகள் செய்யப் பயன்படும் கூழாங்கற்கள் நிறையக் கிடைத்தனவாதலால் ஆறுகளைச் சார்ந்தே முற்கால மனிதர்கள் வாழ்ந்தார்கள் என்பதையும் குறிப்பிட வேண்டும். மேலும் குடிநீரைச் சேர்த்து வைக்க எந்த நிலையான பாத்திரமும் அப்பொழுது கண்டுபிடிக்கப்படாததால் ஆற்றை அண்டியே வாழவேண்டிய தேவை இருந்தது. மேலே குறிப்பிட்டபடி ஒரு சில சமயங்களில் மட்டும் குகைகளில் சென்று வாழ்ந்தார்கள்.

வேட்டையாடிய விலங்குகளின் இறைச்சியோடு இயற்கையாகக் கிடைத்த காய் கனிகளையும் நிலத்தி லிருந்து தோண்டியெடுத்த கிழங்குகளையும் இவர்கள் உணவாகக் கொண்டிருக்கவேண்டும். நெருப்பைப்பற்றி அறிந்திருக்கலாம். (சீனுவிலும் ஹங்கேரியிலும் இடைப் பிலெஸ்டோசீன் தொடக்கத்திலேயே நெருப்பைப் பயன் படுத்தியதற்கான அறிகுறிகள் கிடைத்துள்ளன.) விலங்குகளின் தோலை உடையாகப் பயன்படுத்தி யிருக்கலாம்.

மனித எலும்புச் சின்னங்கள் எதுவும் கண்டுபிடிக் கப்படவில்லையாதலால் இந்த மனிதர்கள் எப்படித் தோற்றமளித்தார்கள் என்ற கேள்விக்கு விடை காண முடியாது. இதே வகையான கருவிகளைப் புனைந்த ஆப்ரிக்கக் கற்கால மனிதர் 'ஹோமோ எரெக்டஸ்'[82] என்ற இனவகையைச்[83] சேர்ந்தவர்களாகக் கருதப்படுகிறார்கள். ஹோமோ எரெக்டஸ் இன மனிதர்களே தமிழ்நாட்டிலும் வாழ்ந்திருக்கக்கூடும். இந்த இனவகையிலிருந்தே படிப் படியாக இன்றைய மனித இனம்[84] வளர்ந்தது என்று தெரிகிறது. கருவிகளின் சீர்மையை வைத்துப் பார்க் கும்பொழுது இவர்கள் ஓரளவு சிந்திக்கத் தெரிந்தவர்கள் என்று சொல்லலாம். மனிதன் விலங்கு நிலையிலிருந்து வேறுபடுவது அடிப்படையில் அவன் கருவிகளைப் புனை பவன் என்ற வகையிலேயே. விலங்கு நிலையிலிருந்து ஓரளவு மேம்பட்ட மொழியும் இவர்களிடையே வழங்கி யிருக்கவேண்டும். கருவிகளைச் செய்வதற்கோ, அவை களைப் பயன்படுத்திக் கூட்டாக வேட்டையாடுவதற்கோ சைகைகள் மட்டும் போதுமானவை என்று சொல்ல முடியாது. கருத்துகளை ஒலிச் சின்னங்களாக வெளியிட ஓரளவாவது தெரிந்திருந்தால்தான் இந்த நிலை ஏற்பட் டிருக்கமுடியும்.

---

[82] Homo Erectus
[83] Species
[84] Homo Sapions

## உலக அளவில் ஒப்பீடு

இறுதியாக, உலக அளவிலும் இந்திய அளவிலும் தமிழ்நாட்டு முதல் கற்காலம் பெறும் இடத்தைப்பற்றிச் சிறிது பார்க்கலாம். இந்தியாவைப் பொறுத்தவரையில் வட இந்தியாவில் (பாக்கிஸ்தானையும் சேர்த்து) பஞ்சாப் பகுதியில் காணப்படும் சோவன் பண்பாடு[85] மற்ற இடங்களில் காணப்படும் கைக்கோடரிப் பண்பாட்டுக்குச் சிறிது மாறுபட்டதாகத் தெரிகிறது. சோவன் பண்பாடு சீனு, ஜாவா, பர்மா ஆகிய நாடுகளில் காணப்படும் வெட்டி–வெட்டுக்கருவித் தொழில்முறையைச் சார்ந்த தாகக் காணப்படுகிறது. முதலில் கூழாங்கற்களையும், பின்னல் சில்லுகளையும் பயன்படுத்தி 'வெட்டிகள்' எனப்படும் கருவிகள் செய்யப்பட்டன. கைக்கோடரிப் பண்பாட்டில் 'வெட்டிகளும்' காணப்படுகின்றன. ஆனல் அதிக அளவில் கிடைப்பன கைக்கோடரிகள் எனப்படுபவையே. இக் கைக்கோடரிப் பண்பாட்டுக் கருவிகள் பஞ்சாப் பகுதியிலும் கிடைக்கின்றன. ஆனல் அவை காணப்படும் இடங்கள் சோவன் நிலைகளி லிருந்து ஒதுங்கித் தனியாக உள்ளன. என்றாலும் இரு பண்பாடுகளும் ஒரே காலத்தில் அதாவது 2ஆம் பனிப்படர்விடைக் காலத்தில் நிலவிவந்தன. இதற்கு மாருகத் தமிழ்நாட்டிலும், மற்றத் தென்னிந்தியப் பகுதி களிலும் காணப்படும் கைக்கோடரிப் பண்பாடு 3ஆம் பனிப்படர்வு, அதைத் தொடர்ந்த 3ஆம் பனிப்படர் விடைக் காலங்களைச் சேர்ந்ததென்று மேலே குறிப்பிடப் பட்டது. அதாவது வடமேற்கு இந்தியாவில் காணப் படும் கைக்கோடரிப் பண்பாடு தென்னிந்தியக் கைக் கோடரிப் பண்பாட்டைக் காட்டிலும் காலத்தால் முந்தி யது. அங்கு இப்பண்பாடு இன்றிலிருந்து ஏறக்குறைய நான்கு இலட்சம் (4,00,000) ஆண்டுகளுக்கு முந்தியது எனலாம். தமிழ்நாட்டில் இது இரண்டு இலட்சம் (2,00,000) ஆண்டுகளுக்கு முந்தியதே.

---

[85] Soan Culture

கைக்கோடரிப் பண்பாடு ஆப்ரிக்கா முழுவதிலும் நடுநிலக்கடல் சார்ந்த ஐரோப்பியப் பகுதிகளிலும் பரக்கக் காணப்படுகிறது. ஆப்ரிக்காவில் இடைப் பிலேஸ்டோசீன் காலத் தொடக்கந்தொட்டே இப்பண் பாடு இருந்துவந்துள்ளது. ஏறக்குறைய 7,50,000 ஆண்டுகளிலிருந்து அதைக் கணக்கிடலாம். ஆப்ரிக்கக் கைக்கோடரித் தொழில்முறைக்கும், தென்னிந்தியக் கைக்கோடரித் தொழில்முறைக்கும் சில குறிப்பிடத்தக்க ஒற்றுமைகள் உள்ளன.[86] தென்னாப்ரிக்காவில் விக்டோ ரியா வெஸ்ட்[87] என்ற பகுதியில் முதலில் காணப்பட்ட கருவிகளின் உருவை அப்படியே ஒத்துள்ள கருவிகள் இங்குக் கிடைக்கின்றன. 'வால்' எனப்படும் நுட்பம்[88] இரண்டு பகுதிகளிலும் ஒத்துள்ளன. ஐரோப்பிய 'மிகாக்கு' கருவிகளின் உருப்போலிகள் அத்திரம்பாக்கப் படுகையில் கிடைக்கின்றன என்பதை மேலே பார்த் தோம். இந்த ஒற்றுமைகளை வைத்துக்கொண்டு மக்கள் இடப்பெயர்ச்சிப் போக்குகளை முடிவுகட்ட முடியாது. ஆனால் ஆப்ரிக்க ஐரோப்பியக் கைக்கோடரிப் பண்பாடு இந்தியாவின் கைக்கோடரிப் பண்பாட்டைவிடக் காலத் தால் முந்தியது என்பதை நினைவுகூரவேண்டும். இந்தி யாவிலும் வடமேற்குப் பகுதியிலும் இது காலத்தால் முந்தியதாகத் தெரிகிறது. ஆப்ரிக்க, ஐரோப்பாப் பகுதிகளிலிருந்து இந்தியா நோக்கி மனித இடப் பெயர்ச்சி ஏற்பட்டிருக்கலாம். அல்லது குறைந்தது எண்ணங்களின் இடப்பெயர்ச்சியாவது ஏற்பட்டிருக் கலாம். இப்பெயர்ச்சி ஏற்பட்ட கால அளவு பல்லாயிரக் கணக்கான ஆண்டுகள் பரந்திருந்தது என்பதை நினைவிலிருத்தினால் இப்பெயர்ச்சி கொஞ்சம் கொஞ்ச மாக ஏற்பட்டிருக்கக்கூடும் என்பதில் ஐயமிருக்க முடியாது.

---

86 *Ancient India*, No. 3 (1947) pp. 40 & 41

87 Victoria West type

88 Vaal technique

## 3. இடைக்கற்காலம்

தமிழ்நாட்டின் ஒரு சில இடங்களில் இடைக்கற்காலத் தடயங்கள் அகப்பட்டுள்ளன. அவை தமிழ்நாட்டிற்கு வடக்கே ஆந்திரப் பகுதியில் கிடைக்கும் அளவுக்கு அதிகமாக இங்கே கிடைக்கவில்லை. இடைக் கற்காலக் கருவிகள் பெரும்பாலும் முதல் கற்காலக் கருவிகள் கிடைத்த இடங்களிலேயே அதிகமாகக் காணப்படுகின்றன. வடமதுரை (பொன்னேரி வட்டம்), அத்திரம் பாக்கம் (திருவள்ளூர் வட்டம்), காஞ்சிபுரம் வட்டத்தில் பரந்தூர், வதியூர், திருவள்ளூர் வட்டத்தில் ஆரம்பாக்கம், கிருஷ்ணபுரம், ரங்கபுரம் ஆகிய இடங்களில் இடைக் கற்காலக் கருவிகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. மதுரை மாவட்டத்தில் திருமங்கலம் வட்டத்தில் இடைக்கற்காலக் கருவிகள் ஓரளவு கிடைக்கின்றன.[89]

### காலம்

இடைக்கற்காலம் இந்தியாவில் அண்மைக் காலத்திலிருந்துதான் நன்ருக ஆராயப்பட்டுவருகிறது. மகாராஷ்டிரப் பகுதியிலும், இன்னும் சில இடங்களிலும் டாக்டர் சங்காலியா ஆராய்ச்சி செய்ததன் விளைவாக முதல், கடைக் கற்காலங்களுக்கு இடையில் ஒரு காலம் இருந்தது என்று தெரியவந்தது. அதை இடைக்கற்காலம் என்று அழைக்கலாம் என்று டாக்டர் சுப்பாராவ் குறிப்பிட்டதனைத் தொடர்ந்து இக்காலம் இந்தியத் தொல்பழங்கால வரலாற்றில் ஒரு தனியிடத்தைப் பெற்றுள்ளது.[90] காலக் கணிப்பின்படி இதைக் கடைசிப் பனிப்படர்வுக் காலமாகிய வ்யூர்ம் காலத்திலேயே சேர்க்க

---

[89] *Indian Archaeology*, A Review, 1960-61, p. 18; 1962-63, p. 12; 1963-64, pp. 17 & 19; 1964-65, pp. 20 & 21.

[90] Sankalia, H. D., *Pre-history & Proto-history in India and Pakistan*, pp. 72-75
Subba Rao, B. *The Personality of India*, (M.S. University of Baroda, 1958), p. 39

வேண்டியுள்ளது.[91] அதாவது இற்றைக்கு ஏறக்குறைய 30 ஆயிரம் அல்லது 40 ஆயிரம் ஆண்டுகள் முந்தியதாக இதைக் குறிப்பிடலாம். அத்திரம்பாக்கம் படுகையில் சிதைந்த லாட்டரைட் படிவு அடுக்கில் இந்தக் கருவிகள் அகழ்வாய்வு மூலமாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.[92] அதேபோல குடியம் மலைக்குகையிலும், அதற்கு அண்மையிலும் செய்யப்பட்ட அகழ்வாய்வுகளிலும், கடைசி அஷூலியன் கட்டத்தை அடுத்து மேலே உள்ள அடுக்கில் இந்தக் கருவிகள் கிடைத்துள்ளன.[93] மதுரை மாவட்டத்தில் மரட்டாற்றின் (மலட்டாற்றின்) களிமண் படுகையில் தெ. புதுப்பட்டி என்ற ஊருக்கு அருகிலும், சிவரக்கோட்டை என்ற ஊருக்கு அருகிலும் இந்தக் கருவிகள் கிடைத்துள்ளன.[94] திருநெல்வேலிக் கடற்கரையில் திருச்செந்தூருக்கு அருகில் மெய்ஞ்ஞான புரம் என்ற ஊரில் கிடைக்கும் கருவிகளையும் இந்தக் காலத்தைச் சேர்ந்தனவாக எடுத்துக்கொள்கிறார்கள்.[95] முதல் கற்காலத்தைப்போலவே இந்தக் காலத்தைக் கணக்கிடுவதிலும் சரியான தொல்லுயிர் படிவச் சான்று கள் கிடைக்கவில்லை. தோராயமாக ஆற்றுப்படுகையை வைத்து மேலே குறிப்பிட்ட காலம் கணக்கிடப்படுகிறது. கருவிகள் கிடைக்கும் படிவடுக்கை வைத்துப் பார்க்கும் பொழுது அந்தக் காலத்தில் மிகுந்த மழை பெய்த வண்ணமாக இருந்தது என்று சொல்லலாம்.[96]

### கருவிகளின் தன்மைகள்

கருவிகள் செய்யும் வகையில் முதல் கற்காலத் துக்கும், இந்தக் கற்காலத்துக்கும் ஒரு பெரிய வேறுபாடு

---

[91] Fairservis, Walter. A., *The Roots of Ancient India*, p. 389

[92] *Indian Archaeology*, 1964-65, A Review, pp. 20 & 21

[93] *Indian Archaeology*, 1962-63, A Review, p. 12, *Ibid* 1963-64, pp. 17 & 19

[94] *Ibid*, 1960-61, p. 5

[95] *Ancient India* (Bulletin of the A.S.I.), No. 12 (1956), pp. 8 & 9

[96] Fairservis, Walter. A., *Op. cit.*, pp. 77 & 78

இருந்தது. இந்தக் காலக் கருவிகள் பெரும்பாலும் நுண்துகள் கொண்ட ஜாஸ்பர், செர்ட்[97] முதலான கல் வகைகளைப் பயன்படுத்தியே செய்யப்பட்டன. முதல் கற்காலத்தில் பயன்படுத்திய குவார்ட்சைட் கல்லைப்போல் அல்லாமல் இந்தக் கல் வகைகள் கருவிகளை நேர்த்தி யாகப் புனைவதற்கு உகந்தவை. முதல் கற்காலத்தைவிட இந்தக் காலக் கருவிகள் தம் அளவில் சிறியனவாகச் செய்யப்பட்டன. கருவிகளின் வகைகளிலும் மிகுந்த மாற்றங்கள் உள்ளன. முதலில் இருந்த கைக்கோடரிகள் வழக்கற்றுவிட்டன என்றே சொல்லலாம். மிகச் சில இடங்களில் மட்டும் கைக்கோடரிகள் உருவத்தில் சிறிய அளவு உள்ளனவாகச் செய்யப்பட்டன. இவைகளை விட்டுவிட்டால் பெரும்பாலும் கருவிகள் சில்லுக் கருவி களாகவே இருந்தன. முனைகள், சுரண்டிகள், பட்டைக் கத்திகள் ஆகியவையே பெரும்பாலனவாக இருந்தன. சுரண்டிகளை அந்தக் காலத்தில் மிகப் புழக்கத்தில் இருந்த கருவிகளாகச் சொல்லலாம் (வரைபடங்கள் 7 & 8, ஒளிப் படம் 1). இவைகள் பல வகைகளாகக் காணப்படு கின்றன. சில்லுக் கருவிகள் ஓரளவுக்கு லெவலாய்சியன் நுட்பப்படி செய்யப்பட்டன என்பதற்குச் சில அறி குறிகள் தென்படுகின்றன. அதாவது மூலக் கல்லிலேயே சில சில்லுகளைப் பெயர்த்துக் கருவியின் உருவத்தை உருவாக்கிக்கொண்டு பின்னுல் அந்தக் கருவியை மூலக் கல்லிலிருந்து பெயர்த்து எடுத்தார்கள். இப்படிச் செய்யப்பட்ட கருவிகள் அதிகமாகக் காணப்படவில்லை. சில்லு எதுவாயினும் கருவியாகப் பயன்படுத்தினுர்கள் என்று சொல்லலாம். சில்லுகளின் விளிம்புகளில் மிகச் சிறிய அளவுக்கு மறுநுணுக்க வேலைகள் மேற்கொள்ளப் பட்டன.

வாழ்க்கை நிலை

முதல் கற்காலத்தைப் போலவே இந்தக் காலத்தை யும் கருவிகளை வைத்துக்கொண்டு அறியவேண்டியிருக்

---

[97] Jasper, Chert

கிறது. வடக்கே சில இடங்களில் இக்கால மக்கள் வேட்டையாடிய விலங்குகளின் எலும்புகள் கிடைத்துள்ளன. தமிழ்நாட்டில் இதுவரைக்கும் அத்தகைய எலும்புகள் கிடைக்கவில்லை. ஆனால் கருவிகளை வைத்துக்கொண்டு சொன்னால், முதலில் இருந்த இயற்கைச் சூழ்நிலையும் இந்தக் காலத்துச் சூழ்நிலையும் வேறுபட்டனவாக இருந்தன; வாழ்க்கை முறைகளிலும் இரு காலங்களிலும் வேறுபாடு இருந்தது என்று சொல்லலாம். முதல் கற்காலக் கருவிகள் அளவில் பெரியனவாகக் கூர் நுனியைக் கொண்டு விலங்குகளை நேரடியாகத் தாக்குவதற்குப் பயன்படுவனவாக இருந்தன. இடைக்கற்காலக் கருவிகள் சிறியனவாக இருந்தனவாதலால் அப்படிப் பயன்படா. மாறாக இவைகளை வைத்துக் கொண்டு உறுதியான மரக்கிளைகளைக் கூரிய நுனி உடையனவாகச் சீவி அவைகளை வேல்களாகப் பயன்படுத்தியிருக்கமுடியும். இக்கருவிகள் சிறியனவாக எடை குறைந்திருந்தனவாதலால் நீண்ட தூரத்திற்குத் தூக்கிச் செல்லமுடியும். இதனால் முதல் கற்கால மக்களைவிட இக்கால மக்கள் வேட்டையாடும் இடங்கள் பரப்பில் விரிந்தனவாக இருந்தன எனலாம். இவர்கள் கூரிய முனை போன்ற கருவிகளை மரக்கிளைகளின் நுனியில் பொருத்தி வேல்களாகப் பயன்படுத்தியிருக்கமுடியும். ஏராளமாகக் காணப்படும் சுரண்டிகள் மரக்கிளைகளோடு தோல்களையும் சீவப் பயன்படும். ஆகவே இவர்கள் தோல்களை உடையாகவும், வேறு வகைகளிலும் பயன்படுத்தியிருக்கலாம். நீண்ட பட்டைக் கத்திகள் முதலான கருவிகள் நன்றாக அறுக்கப் பயன்படும்.

முதல் கற்கால மனிதர்களைப் போலவே இவர்கள் ஆற்று ஓரங்களிலும், மலை அடிவாரங்களிலும் வாழ்ந்தார்கள் என்பது கருவிகள் கிடைக்கும் இடங்களை வைத்துக்கொண்டு உய்த்துணரவேண்டியிருக்கிறது. மிக உயர்ந்த மலைகளுக்கு இவர்கள் செல்லவில்லை. திருநெல்வேலிக் கடற்கரையில் கிடைக்கும் கருவிகளை வைத்தும், அதேபோல வடக்கே பம்பாய்க்கு அருகில் இக்கருவிகள்

கிடைக்கும் இடத்தை வைத்தும் ஓரளவுக்கு இவர்கள் கடல் ஓரங்களில் வாழ்ந்து மீன் பிடிக்கும் தொழிலையும் மேற்கொண்டிருந்தார்கள் என்று சொல்லலாம். பெரும் பாலும் இவர்களுடைய வாழ்க்கை வேட்டையாடும் வாழ்க்கையாகவே இருந்தது. நிலையான இருப்பிடங்கள் இருந்தன என்பதற்குத் தடயங்கள் கிடைக்கவில்லை. மேலே குறிப்பிட்டதைப்போலக் குடியம் முதலான மலைக் குகை இருக்கைகளில் சில சமயங்களில் மட்டுமே இவர்கள் சென்று வாழ்ந்துவந்தார்கள். இடைக்கற்காலக் கருவிகள் பார்ப்பதற்கு அவ்வளவு அழகாகக் காணப்பட வில்லை. அதாவது இந்தக் கால மக்கள் அழகைவிடப் பயனைத்தான் முக்கியமாகக் கருதினூர்கள் என்று சொல்ல வேண்டும். மாருக முதல் கற்காலத்தின் கடைசி நிலையில் அஷூலியன் கட்டக் கருவிகள் மிக அழகாகச் செய்யப்பட்டன என்பதை முன்பே பார்த்தோம். கூரிய விளிம்புள்ள சில்லு எதுவாக இருந்தாலும் அது இடைக் கற்கால மக்களுக்குக் கருவியாகப் பயன்பட்டது.

## உலகநிலையில் தமிழ்நாட்டு இடைக்கற்காலம்

கருவிகளை மட்டும் வைத்துக்கொண்டு இந்தியாவில் முதல் கற்கால மக்களுக்கும் இடைக்கற்கால மக்களுக்கு மிடையே தொடர்பு அதாவது ஒரு வளர்ச்சி நிலை இல்லை என்று சொல்லமுடியாது. முதல் கற்காலத்தில் பெரு வழக்காக இருந்த கைக்கோடரிகள் எண்ணிக்கையிலும் அளவிலும் சிறுத்து, இடைக்கற்கால இருப்பிடங்களில் சில கிடைக்கின்றன. இது முன்னதிலிருந்து பின்னது வளர்ந்தது என்பதற்கு ஒரு சான்ருகும். ஆனுல் அதே நேரத்தில் லெவலாய்சிய நுட்பக் கருவிகள் வெளியே யிருந்து அதாவது ஐரோப்பிய, ஆப்ரிக்கப் பகுதிகளி லிருந்து மக்கள்பெயர்ச்சி அல்லது எண்ணப்பெயர்ச்சி இந்தியா நோக்கி நிகழ்ந்தது என்பதைக் காட்டுகின்றன. ஆப்ரிக்க இடைக்கற்காலக் கருவிகளுக்கும் இந்திய இடைக்கற்காலக் கருவிகளுக்கும் நிறைய ஒற்றுமை இருப்பதாக ஆல்சின் அம்மையார் கருதுகிருர்.[98]

[98] Bridget Allchin *Op. cit.*, p. 123

உலக நிலையில் இந்திய இடைக்கற்காலத்தின் இடத்தைக் குறித்துச் சரியான வரையறை செய்ய இன்னும் நிறைய ஆய்வு செய்யவேண்டியுள்ளது. இன்றைய நிலையில் சில செய்திகளை மட்டும் கோடிட்டுக் காட்டலாம். இந்திய இடைக்காலக் கருவிகளை ஒத்த கருவிகள் ஆப்ரிக்க, ஐரோப்பியச் சூழலில் லெவலாய்சிய-மூஸ்டிரியப் பண்பாட்டில் காணப்படுகின்றன. இப் பண்பாடு அங்கு முதல் கட்டத்தில் ஏறக்குறைய நூறாயிரம் ஆண்டுகளுக்கு முந்தியது. ஆனால் இந்தியாவில் 40,000 ஆண்டுகளுக்கு முன்புதான் இக்கட்டம் வழக்குக்கு வந்தது. இதற்குச் சமகாலத்தில் (அதாவது 40,000 ஆண்டுகளுக்கு முன்பு) ஐரோப்பாவில் ஆரிக்னேசியன்[99] முதலான தொழில் முறைகளில் ஏராளமான கலை நேர்த்தி கொண்ட எலும்புக் கருவிகள் செய்யப்பட்டன. அவ்வகையான எலும்புக்கருவிகளைச் செய்யப் பியூரின்[100] என்ற கல்லுளி பயன்பட்டது. இந்தக் கல்லுளிகள் இந்திய இடைக்கற்காலக் கருவிகளில் மிக அரிதாகக் காணப்படுகின்றன.

அத்திரம்பாக்கத்திலும், சித்தூரில் ரேணிகுண்டாவுக்கு அருகிலும் இவைபோன்ற கல்லுளிகள் கிடைக்கின்றன. ஆனால் இவை இடைக்கற்காலம் முடிந்த பிறகு அல்லது முடியுந்தறுவாயில் உள்ள காலத்தனவாகக் கிடைக்கின்றன. இவைகளைக்கொண்டு செய்யப்பட்டவை என்று சொல்ல எந்த எலும்புக் கருவியும் கிடைக்கவில்லை. ஆனால் அத்திரம்பாக்கத்துக்கு அருகிலுள்ள மலைக்குகைகளையும், கர்நூல் மாவட்டத்திலுள்ள மலைக்குகைகளையும் இன்னும் நன்றாக ஆய்ந்தால் எலும்புக் கருவிகள் எவையேனும் கிடைக்க வாய்ப்புள்ளது என்று டாக்டர் சங்காலியா கருதுகிறார்.[101]

---

[99] Aurignacian

[100] Burin

[101] Sankalia, H. D., 'Beginning of Civilization in South India', *II International Conference Seminar of Tamil Studies Proceedings*, p. 30

## 4. கடைக்கற்காலம்

### தேரிகள்

இந்தியாவில் காணப்படும் கடைக்கற்கால நிலை களில் திருநெல்வேலி நிலைகள் முக்கியமானவையாகக் கருதப்படுகின்றன. இங்கு இவை 'தேரிகள்' எனப் பெயர் பெற்றுள்ள மணல்திட்டுகளைச் சார்ந்து கிடைக் கின்றனவாதலால் இவை சேர்ந்த தொகுதி தேரித் தொழில்முறை என அழைக்கப்படுகின்றது. பேராசிரியர் சூனரும், ஆல்சின் அம்மையாரும் சேர்ந்து இந்த இடங்களை நன்கு ஆய்ந்து செய்திகளை வெளியிட்டுள் ளார்கள்.[102] இதற்கு முன்னும் புரூஸ் புட் முதல் பலர் இந்த இடங்களை ஆய்ந்துள்ளார்கள். இங்கு முறையான நிலஅமைப்பியல் ஆய்வு செய்த சூனர் இந்தக் கடைக் கற்கால நிலைகள் ஏறக்குறைய கி. மு. 4000ஐச் சேரும் என்று கருத்துத் தெரிவித்துள்ளார். இங்கே கடற்கரை ஓரமாகத் தாமிரபரணி ஆற்றுக்கு வடக்கிலும் தெற் கிலும், தூத்துக்குடியைச் சேர்ந்தும், திருச்செந்தூரைச் சேர்ந்தும் உள்ள தேரிகளை ஒட்டிக் கடைக்கற்காலக் கருவிகள் கிடைக்கின்றன. அந்த இடங்கள் இன்றைய கடல் மட்டத்திலிருந்து இருபது அடி உயரத்தில் உள்ளன. இவ்விடங்கள் முன்பு உப்பங்கழிகளாக இருந்து மறைந்தவை என்று தெரிகிறது. இப்பொழுது தூத்துக் குடிக்கு அண்மையில் கடற்கரையை ஒட்டிக் கடலுக்கு உள்ளே மூன்று கிலோ மீட்டர் தள்ளி மணல்திட்டுகள் ஏற்பட்டு, அத்திட்டுகளுக்கும் கடற்கரைக்கும் இடை யிலே உப்பங்கழிகள் உள்ளன. நாளாவட்டத்தில் இந்த மணல்திட்டுகள் வளர்ந்து உப்பங்கழிகள் மறைந்து வருகின்றன என்று தெரிகிறது. இந்த மணல்திட்டுகள் பெரும்பாலும் பவழத் திரள்களும், கடல்வாழ் நுண் ணுயிர்ச் சிதைவுகளும் சேர்ந்து உருவானவை; மேற்

---

[102] Zeuner Frederick, E. & Bridget Allchin, 'The Microlithic Sites of Tinnevelly District', *Ancient India*, No.12 (1956) pp. 4—20

பரப்பில் காற்றடிப்பதன் மூலம் படிந்த மணல் குன்றுக ளாக (தேரிகளாக) உள்ளன. இன்று நிலவிவரும் இதே நிலை சில ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னும் இருந்தது. அப்போது இப்போதைய நீர்மட்டத்தைவிட உயரத்தில் கடல்நீர் மட்டம் இருந்தது. காலப்போக்கில் இந்த நீர்மட்டம் தாழ்ந்ததன் காரணமாக ஏற்பட்ட தேரி அடுக்குகளில் ஒன்றே மேற்குறிப்பிட்ட 20 அடி உயர அடுக்கு. இந்த அடுக்கின் மணலை ஆய்ந்ததன் காரண மாகச் சூனர் மேற்கண்ட முடிவுக்கு வந்தார். இவ் வடுக்கு இன்றைய கடற்கரையிலிருந்து உள்நாட்டில் பத்துப் பதினோரு கிலோ மீட்டர் வரையில் காணப்படு கிறது. அதற்கு அப்பால் 50 அடி உயரம் கொண்ட அடுத்த அடுக்கு தொடருகிறது. உள்ளே செல்லச் செல்ல சில இடங்கள் 200 அடி உயரம்வரை இருக் கின்றன. இந்த அடுக்குகளின் அடியிலுள்ள மணல் நாளாவட்டத்தில் வேதியல் மாற்றங்களுக்கு உள்ளாகி நிறம் மாறிச் சிவந்த நிலையில் உள்ளன. மேலே உள்ள மண் அவ்வளவாக நிறம் மாறவில்லை. இங்குக் கிடைக்கும் கற்கருவிகள் சிவந்த கறையைப் பெற்றி ருப்பதனால் அவை கீழே உள்ள செந்நிற மணலுக் குச் சம காலத்தவை எனலாம். இந்த மணல் படிந்த காலத்தில் கடல்நீர் மட்டம் இப்போதிருப்பதை விட இருபது அடி உயரத்தில் இருந்தது என மேலே குறிப்பிடப்பட்டது. அதாவது இக்கருவிகளைப் பயன் படுத்திய மக்கள் வாழ்ந்திருந்த காலத்துக்குப் பின்னால் கடல் சிறிது தாழ்ந்து நிலத்தைவிட்டு நகர்ந்துவிட்டது. இந்தக் கடல்தாழ்வு ஏறக்குறைய கி. மு. 4000-ல் அல்லது அதற்குச் சிறிது முந்தி நிகழ்ந்திருக்கக்கூடும் என்பது சூனர் கருத்து.[103]

இந்த இருபது அடி மட்டத்தில் தூத்துக்குடிக்குத் தென்மேற்கில் கூத்தம்புளி, கட்டலங்குளம், சாயர்புரம் ஆகிய இடங்களில் நிறையக் கருவிகள் காணப்படு கின்றன. ஆற்றுக்குத் தெற்கில் நாசரேத் என்ற ஊருக்கு

[103] *Ibid* p. 8

அருகிலும், இன்னும் சில இடங்களிலும் கருவிகள் எடுக்கப்பட்டன. திருச்செந்தூருக்கு மேற்கிலுள்ள குதிரைமொழித் தேரியின் தென்கோடியிலுள்ள மெய்ஞ் ஞானபுரம் என்ற ஊருக்கு அருகில் 50 அடி அடுக்கில் சில கருவிகள் காணப்பட்டன. இவைகள் அல்லாமல் வடார்க்காடு, செங்கற்பட்டு மாவட்டங்களில் இடைக் கற்காலக் கருவிகள் கிடைக்கும் இடங்களிலும், மதுரை மாவட்டத்தில் திருமங்கலம், பெரியகுளம் வட்டங்களி லும் இக்கருவிகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.[104] திருமங்கலம் வட்டத்தில் திடியன், தெ. கல்லுப்பட்டி ஆகிய ஊர்களில் மலைக்குன்றின் அடிவாரங்களிலும், போடிநாயக்கனூருக்கு அருகில் கோடங்கிப்பட்டி, தத்தனேரைமேடு என்ற மலையடிவார இடங்களிலும் ஏராளமான கடைக்கற்காலக் கருவிகள் காணப்படு கின்றன.

## கருவிகளின் வகையும் செய்முறையும்

கடைக்கற்காலக் கருவிகள் முற்றிலும் விலைமதிப் புள்ள கல்வகைகளைக்கொண்டே செய்யப்பட்டன. தேரி நிலைக் கருவிகள் அரைவாசி செர்ட்[105] என்ற கல்லையும், மற்றவை குவார்ட்ஜ்[106] எனப்படும் படிகக் கல்லையும் கொண்டு செய்யப்பட்டவை. மதுரை மாவட்டக் கருவி கள் ஜாஸ்பர், கால்சிடனி, கிரிஸ்டல், வரியோடிய அகேட்[107] ஆகிய கல்வகைகளைப் பயன்படுத்திச் செய்யப் பட்டவை. இந்தக் கருவிகள் யாவுமே உருவத்தில் மிகச் சிறியவையாகச் செய்யப்பட்டன. ஓர் அங்குலமும் அதற்கும் குறைவான அளவும் உள்ள கருவிகளே ஏராளமாகக் காணப்படுகின்றன. பொதுவாக இந்தக்

---

[104] *Indian Archaeology*, 1960-61, p. 5
And Raman, K. V. 'Distribution pattern of culture-traits in the Pre and Proto-historic Times in Madurai Region', *Aaraaichi*, Vol. I, pp. 502 & 503.

[105] Chert

[106] Quartz

[107] Jasper, Chalcedony, Crystal, Banded Agate

காலத்தில் இப்படிப்பட்ட சிறு கருவிகளே கிடைப்பதால் இக்காலத்தைச் சிறுகல் காலம்[108] என்றுங்கூடப் பெயரிட்டு அழைப்பது வழக்கம். இந்தக் கருவிகள் பலவகையான உருவங்களில் காணப்படுகின்றன (வரைபடங்கள் 9 & 10). இவைகளில் பட்டையான பேனுக்கத்தி போன்ற கருவிகள் ஓரளவு இருக்கின்றன. வட்டுக் கருவிகள் என்று அழைக்கக்கூடிய சில கருவிகளும் காணப்படுகின்றன. ஆனால் பெரும்பாலான கருவிகள் சுரண்டிகள் என்று அழைக்கப்படும் கருவிகளாக உள்ளன. இவைகள் அல்லாமல் பிறைநிலா உருவம் கொண்டு 'பிறைகள்' என்று அழைக்கப்படும் கருவிகளும், இன்னும் பல வடிவியல் உருவங்களைப்[109] பெற்றுள்ள கருவிகளும் இருக்கின்றன. இருபக்க முனைகள்[110] என்று அழைக்கப்படும் கருவிகள் இங்கே கிடைப்பதை முக்கியமாகக் குறிப்பிடவேண்டும். இந்தக் கருவிகள் இந்தியாவில் வேறு எங்கும் கிடைக்கவில்லை. ஆனால், இலங்கையில் நிறையக் கிடைக்கின்றன. இந்தக் கருவிகளின் இரண்டு பக்கங்களும் நல்ல நுணுக்க வேலைப்பாடுகளைக்கொண்டு கூரிய முனைகளைப் பெற்றவையாக உள்ளன. மேற்சொன்ன எல்லாக் கருவிகளின் விளிம்புகளும் நன்றாகக் கூர்மையாகச் செய்யப்பட்டுள்ளன. இக்கருவிகளைச் செய்ய 'அழுத்தத் தொழில் நுட்பம்'[111] கையாளப்பட்டது. இதற்கு முன்னால் கையாண்ட தொழில் நுட்பங்களைப்போல அல்லாமல் இந்தத் தொழில் நுட்பத்தில் சுத்தியல்களைக்கொண்டு நேரிடையாகச் சில்லுகளைப் பெயர்க்காமல் தமருசியின் மூலமாகச் சில்லுகளை அழுத்திப் பெயர்த்தெடுத்தார்கள். இந்த நுட்பத்தின் மூலம் மிகச் சிறிய சில்லுகளைக்கூடப் பெயர்த்தெடுப்பது எளிது. சில கருவிகளிலுள்ள மறு நுணுக்க வேலைப்பாடுகள் மிகக் கூர்ந்துபார்த்து உணரும் அளவுக்கு நுணுக்கமாகக் காணப்படுகின்றன.

---

108 Microlithic period
109 Geometric shapes
110 Bifacial points
111 Pressure technique

இந்தக் கருவிகள் பெயர்த்து எடுக்கப்பட்ட மூலக் கற்களுங்கூட ஆங்காங்கு அகப்படுகின்றன. மிகச் சிறுபான்மையாக 'ப்யூரின்' என்று சொல்லப்படும் கல்லுளிகள் இந்தக் கற்கருவி இருப்பிடங்களில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன.

## கருவிகளின் பயன்

இந்தக் கருவிகள் மிகச் சிறு உருவங்களைப் பெற்றிருப்பதனால் ஒவ்வொன்றையும் தனித்தனியாகப் பயன்படுத்தமுடியாது. மாருக ஒன்றுக்கு மேற்பட்ட கருவிகளை இணைத்துக் கூட்டுக் கருவியாகத்தான் பயன்படுத்த முடியும். இந்தக் கருவிகளைச் சில மரப்பிடிகளிலோ அல்லது எலும்புப் பிடிகளிலோ பசைகொண்டு ஒட்டி நீண்ட கத்திகளாகவும், அரிவாள்களாகவும், ரம்பங்களாகவும் பயன்படுத்தலாம் (வரைபடம் 11). இருபக்க முனைகள் என்று பெயர்பெறும் கருவிகளை மரப்பிடியின் நுனியில் ஏற்றினுல் மிகக் கூர்மையான அம்பு நுனிகளாகப் பயன்படுத்தலாம். சில பெரிய கருவிகள் சுரண்டுவதற்கும், சீவுவதற்கும், அறுப்பதற்கும் உகந்தவை.

## வாழ்க்கை நிலை

இதற்கு முன்பு இருந்த மக்களைப்போலவே கடைக் கற்கால மக்களும் வேட்டையாடும் வாழ்க்கை நிலையிலேயே இருந்தார்கள். ஆனுல் அதே சமயத்தில் அவர்கள் இயற்கையாகக் கிடைக்கும் காட்டுத் தானியங்களை அறுத்துப் பயன்படுத்தினுர்கள் என்று உய்த்துணர முடியும். சிறு கருவிகளைக் கூட்டாக இணைத்து அரிவாளாகப் பயன்படுத்த முடியும் என்று பார்த்தோம். இந்த அரிவாள்கள் தானியங்களை அறுப்பதற்கே அதிகமாகப் பயன்பட்டிருக்கவேண்டும். ஆகவே மனிதன் வேட்டையாடும் நிலையிலிருந்து அடுத்தபடியான வேளாண்மை வாழ்க்கைக்குச் செல்வதற்குத் தயாரான நிலையில் இருந்தான் என்று சொல்லலாம். வேட்டையாடும் நிலையிலுங் கூட முந்திய கால நிலையிலிருந்து நிறைய வேறுபாடுகள் ஏற்பட்டுவிட்டன. முதன் முதலாக வில்லும் அம்பும்

வழக்கத்துக்கு வந்தது இந்தக் காலத்திலேயே. இதற்கு முன்னால் வேல்கள்தான் வழக்கத்தில் இருந்திருக்க முடியும். இந்நிலையில் இந்தச் சிறு உருவங்கள் கொண்ட நுனிகளைச் சிறு குச்சிகளில் அல்லது பிரம்புகளில் ஏற்றி அம்புகளாகப் பயன்படுத்தமுடியும். இப்படி வில்லும், அம்பும் வழக்கத்துக்கு வந்ததை நடு இந்தியாவிலுள்ள சில மலைக்குகைகளில் காணப்படும் கற்காலச் சித்திரங்கள் நன்றாக எடுத்துக்காட்டுகின்றன.[112]

இங்கே குறிப்பிட வேண்டிய இன்னொரு முக்கிய நிகழ்ச்சி, இக்கால மனிதர்கள் உள்நாட்டில் மட்டும் அல்லாமல் கடற்கரை ஓரத்திற்கும் அதிகமாகச் சென்று வாழத் தலைப்பட்டார்கள் என்பது. பல இடங்களில் கடற்கரை ஓரமாக இவர்கள் வாழ்ந்ததற்கான தடயங்கள் காணப்படுகின்றன. திருநெல்வேலிக் கடற்கரையில் இவர்களுடைய தடயங்கள் கிடைப்பது இதை உறுதிப்படுத்துகின்றது. இங்கிருந்த உப்பங்கழிகளைச் சுற்றிக் குடிசைகளை அமைத்துக்கொண்டு கழிகளில் கிடைக்கும் மீன்களை பிடித்து இவர்கள் உணவாகப் பயன்படுத்தினார்கள் எனலாம். அதேபோல் இந்த மீன்களை அவர்கள் உள்நாட்டிற்கும் கொண்டுசென்று விற்றிருக்கமுடியும். இவர்களுடைய கருவிகள் செய்யப் பயன்பட்ட கற்கள் கடற்கரை ஓரமாகக் கிடைக்கவில்லை. பல கிலோ மீட்டர்களுக்கு அப்பால் உள் நாட்டிலிருந்துதான் கொண்டு வந்திருக்கவேண்டும். அங்குச் செய்யப்பட்ட கருவிகளை இவர்கள் பண்டமாற்று முறையில் வாங்கிவந்திருக்கலாம். விலைமதிப்பு உள்ளவையாக, அரிய கற்களாக இவை இருந்தமையாலும், வேலைப்பாட்டு முயற்சி அதிகமாகத் தேவைப்பட்டமையாலும் இந்தக் கருவிகளை ஒருசிலரே செய்திருக்கவேண்டும். மற்றவர்கள் அவர்களிடமிருந்து விலைக்கு வாங்கியிருக்க வேண்டும். ஆக, முதன்முதல் வாணிக வாழ்க்கை இந்தக் காலத்தில் வழக்குக்கு வந்தது என்று சொல்லலாம்.

---

[112] Bridget & Raymond Allchin, *The Birth of Indian Civilization* (Penguin Books, 1968), p. 95

இவர்கள் படகுகளைப் பயன்படுத்தினார்களா என்பதைத் தெளிவாக்குவதற்கான தடயங்கள் கிடைக்கவில்லை என்றாலும், திருநெல்வேலிக் கடற்கரையிலும், பம்பாய்ப் பகுதியிலும் இக்கருவிகள் கிடைக்கும் சூழ்நிலையை வைத்துப் பார்க்கும்போது ஏதோ ஒரு வகையான கடற்கலங்கள் இவர்களிடம் இருந்திருக்க வேண்டும் எனலாம். இலங்கையிலும் திருநெல்வேலிக் கடற்கரையிலும் கிடைக்கும் கருவிகளின் ஒற்றுமையை வைத்து ஒருவேளை இந்த இரண்டு பகுதிகளுக்கும் கடல் மூலமாகத் தொடர்பு இருந்ததோ என்று உய்த்துணரவும் இடமிருக்கிறது. முன்பு குறிப்பிட்ட இருபக்க அம்பு முனை திருநெல்வேலிக் கடற்கரையிலும் இலங்கையிலும் கிடைப்பதோடு, இந்தோனேசியாவிலும் கிடைக்கின்றன. மூன்று இடங்களிலும் கிடைக்கும் கருவிகள் ஒரே வகையாகக் காணப்படுகின்றன. இந்த வகையான கருவிகளைச் செய்யும் தொழில்நுட்பம் எங்கு முதலில் வழக்குக்கு வந்திருந்தாலும் இத்தொழில்நுட்பம் மற்றப் பகுதிகளுக்குப் பரவ, பரந்த கடலால் பிரிக்கப்பட்டிருக்கும் இந்தப் பகுதிகளுக்கிடையே கடல்வழித் தொடர்பு ஒன்றுதான் வழி. நிலவழித் தொடர்புக்கு வழியில்லை. கடற்பயணம் மேற்கொள்வதற்கு உரிய திறமை ஏதோ ஒரு வகையில் இக்கால மக்களிடம் அமைந்திருந்தது என்று ஆல்சின் அம்மையார் கருதுகிறார்.[113]

தமிழ்நாட்டைப் பொறுத்தவரையில் கடைக்கற்கால மக்கள் வாழ்ந்த குகையிருப்பிடங்களோ அல்லது வேறு இருப்பிடங்களோ கண்டுபிடிக்கப்படவில்லை. அதனால் இவர்களுடைய வாழ்க்கையை முழுமையான அளவில் அறிய முடியாமல் இருக்கிறோம். மேலே குறிப்பிட்டதைப் போல வட இந்தியாவில் விந்தியமலைத் தொடர்களின் சில கற்குகைகளில் இவர்கள் வாழ்ந்த தடயங்கள் காணப்படுகின்றன. இந்தக் கருவிகளை இந்தியாவிலும் இலங்கையிலும் இன்னும் பல இடங்களிலும் ஆராய்ந்த

---

[113] Bridget Allchin, *Stone-Tipped Arrow* (Phoenix House, London, 1966), pp. 140 & 141

ஆல்சின் அம்மையார் இம்மக்கள் பெரும்பாலும் இன்றைய மலைவாழ் கூட்டத்தவரான ஆந்திரப்பகுதி சென்சுக்கள்[114] அல்லது இலங்கை வெட்டர்களைப்[115] போல வாழ்ந்தார்கள் என்று முடிவுகட்டுகிறார்.[116] இம் மலைவாழ்நர்கள் சென்ற நூற்றாண்டில் (வெளியுலகத் தொடர்பு அதிகமாக ஏற்படாத நிலையில்) வில்லையும் அம்பையும் பயன்படுத்தியதோடு, தோண்டு தடிகளையும் இன்னும் சில மரக்கருவிகளையும் பயன்படுத்தினார்கள். பலவகையான பிரம்புக் கூடைகள், பாய்கள் ஆகியவை களையும் பின்னிக் கொண்டார்கள். அவர்களுடைய இருப் பிடங்கள் உயர்ந்த இடங்களில் ஆறுகளை அல்லது மற்ற நீர்நிலைகளைப் பார்த்தவண்ணம் அமைக்கப்பட்டன. இது போன்ற இருப்பிடங்கள் நீர்நிலைகளுக்கு வரும் விலங்கு களைக் கண்காணிப்பதற்கு ஏற்றவையாக இருந்தன. இவர்களிடையே பலவகையான மத நம்பிக்கைகளும் காணப்பட்டன. இலங்கை வெட்டர்கள் இறந்தவர்களைப் புதைப்பதிலும், இறந்தவர்களுக்கு வணக்கம் செலுத்து வதிலும் பலவகையான சடங்குகள் செய்தார்கள். இறந் தோரின் ஆவிகளைச் சாந்தப்படுத்துவதற்காக நிறையப் பொருள்களைப் படைத்தார்கள். ஏராளமான சிறுதெய் வங்களை, அதுவும் வேட்டைக்கு உதவும் தெய்வங்களை வணங்கினார்கள். வேட்டையில் கிடைக்கும் விலங்கு களின் தலைகளை அறுத்து இத்தெய்வங்களுக்குப் படைத் தார்கள். இந்தத் தலைகளைப் படைக்கும் முறை கடைக் கற்கால மக்களிடமும் வழக்கிலிருந்தது என்பதை இவர்கள் வாழ்ந்த மலைக் குகைகளில் காணப்படும் எலும்புகளில் தலைகள் பெரும்பாலும் காணப்படாதது உறுதி செய்கிறது.[117] ஆக, இதே போன்ற ஒரு வாழ்க் கையைக் கடைக்கற்கால மக்கள் மேற்கொண்டிருந்தார்க ளென்ற உய்த்துணர்வு பெரும்பாலும் சரியான ஒன்றாகக் கருதலாம். இன்னும், கடற்கரை ஓரமாக வாழ்ந்தவர்கள்

---

[114] Chenchu

[115] Veddah

[116] Bridget Allchin, *Stone-Tipped Arrow*, p. 121

[117] *Ibid*, p. 128

மிகப் பின்தங்கிய நிலையிலுள்ள இன்றைய கிழக்குக் கடற்கரை மீனவர்களை ஓரளவு ஒத்திருந்தார்கள் என்று நினைப்பதற்கும் வழியுள்ளது.

## கடை, இடைக் கற்காலங்களின் தொடர்பும், காலமும்

இந்தக் கடைக்கற்கால மக்கள் இடைக்கற்கால மக்களின் வாரிசுகளே என்பது இவ்விரு காலங்களின் கருவிகளும் கிடைக்கும் இடங்களிலிருந்து உறுதிப்படுகின்றது. அத்திரம்பாக்கம் படுகையில் இடைக்கற்காலக் கருவிகளுக்கு மேலே அவைகளையொட்டிக் கடைக்கற்காலக் கருவிகள் கிடைக்கின்றன. இரண்டு காலக் கருவிகளுக்கும் ஒரு தொடர்ச்சியான ஒற்றுமை காணப்படுகிறது. அதேபோலத் திருநெல்வேலிக் கடற்கரையில் இந்தத் தொடர்பு ஓரளவு தெரிகிறது. முன்பு குறிப்பிட்டதைப் போல மெய்ஞ்ஞானபுரத்தில் 50 அடி அடுக்கில் கிடைக்கும் கருவிகள் 20 அடி அடுக்கில் கிடைக்கும் கருவிகளைவிடக் காலத்தால் முந்தியவை என்று சூனர் கருதுகிறார்.[118] கருவிகளிலுங்கூட மெய்ஞ்ஞானபுரக் கருவிகள் உருவத்தில் ஓரளவு பெரியவையாகவும், வேறுபட்ட வகைகளைக் கொண்டவையாகவும் இருக்கின்றன. ஆனால் இந்தக் கருவிகளுக்கும் 20 அடி மட்டத்தில் கிடைக்கும் கருவிகளுக்கும் ஒற்றுமை வெளிப்படையாகத் தெரிகிறது. இதேபோல் திருமங்கலம் வட்டத்தில் மரட்டாற்றுப் படுகையில் கிடைக்கும் இடைக்கற்காலக் கருவிகள் என்று சொல்லப்படுபவை அப்பகுதியிலேயே கிடைக்கும் கற்காலக் கருவிகளின் முன்னோடிகளாகத் தெரிகின்றன. இந்த வகையான இடைக்கற்கால, கடைக்கற்காலத் தொடர்பு இந்தியாவின் மற்றப் பகுதிகளிலும் நன்றாகக் காணப்படுகிறது.[119] இந்தக் கடைக்கற்காலம் ஏறக்குறைய கி. மு. 4000-ல் இருந்தது என்று சொல்வதை

---

[118] *Ancient India*, No. 12 (1956), pp. 8, 9 & 20

[119] Bridget & Raymond Allchin, *The Birth of Indian Civilization*, pp. 76 & 78

விட வேறு ஒன்றும் அதிகமாகச் சொல்லமுடியவில்லை. அது எப்பொழுதிருந்து வழக்குக்கு வந்தது, எது வரைக்கும் நீடித்தது என்று சொல்வதற்கு இன்னும் நிறையச் சான்றுகள் தேவை.

## இயல் 5

# புதிய கற்காலம்

**வரையறை**

தொல்பொருள் ஆய்வு தொடக்கநிலையில் இருந்த காலத்தில் 'புதிய கற்காலம்' என்ற சொல் வழுவழுப்பான கருவிகளைப் பயன்படுத்திய காலத்தைக் குறித்தது. அதாவது பழைய கற்காலத்திலிருந்த கற்கருவிகளைப் போல அல்லாமல் இக்காலக் கருவிகள் நன்றாகக் கொத்திக் தேய்க்கப்பட்டு மெருகேற்றப்பட்டவை. ஆனால் இப் பொழுது புதிய கற்காலம் என்று குறிப்பிடப்படும் காலம் மக்கள் வழுவழுப்பான கற்கருவிகளைப் பயன்படுத்திய துடன் வேறு சில பண்புகளையும் உடையராய் இருந்த காலத்தைக் குறிக்கும். வேட்டையாடும் நிலையிலிருந்து சிறிது முன்னேறி ஓரிடத்தில் நிலையாகக் குடியேறி ஏதோ ஒரு வகையில் வேளாண்மை செய்யக் கற்றுக் கொண்ட மக்கள் வாழ்ந்த காலமே புதிய கற்காலம் என்று இப்பொழுது வரையறுக்கப்படுகிறது. அந்த வகையில் இந்தியாவில் புதிய கற்காலம் என்ற ஒரு காலக்கட்டம் இருந்ததா என்ற ஓர் ஐயப்பாடு முதலில் இருந்தது. கடந்த பத்து ஆண்டுகளாக மேற்கொண்ட அகழ் வாய்வுகள் இந்த ஐயப்பாட்டை நீக்கி நிச்சயமாக ஒரு புதிய கற்காலக் கட்டம் இந்தியாவில் இருந்தது என்பதை உறுதிப்படுத்துகின்றன. இந்தியாவில் புதிய கற்காலக் குடியிருப்புகள் கோதாவரியாற்றுக்குத் தெற்கே வட கருநாடகம்(மைசூர்) முழுவதும் ஏராளமாகக் காணக் கிடக்கின்றன. இவை தார்வார், குல்பர்கா, ரெய்ச்சூர், பல்லாரி மாவட்டங்களில் கிருஷ்ணை, துங்கபத்திரை ஆற்றிடைப் பகுதியிலும், அதற்குத் தெற்கிலும் உள்ளன. இங்கிருந்து தெற்கு நோக்கிச் செல்லச் செல்லப் புதிய கற்

காலக் குடியிருப்புகள் குறைந்துக்கொண்டே போகின்றன. தமிழ்நாட்டைப் பொறுத்தவரையில் சேலம், தர்மபுரி மாவட்டங்களிலும், வடார்க்காடு மாவட்டத்திலுமே இவை அதிக அளவில் காணப்படுகின்றன. இம்மாவட்டங்களுக்குத் தெற்கே தமிழ்நாட்டின் தெற்குக் கோடிவரை புதிய கற்காலக் குடியிருப்புகள் மிகக் குறைந்த அளவில் காணப்படுகின்றன. தெற்கு மாவட்டங்களில் குறைவாகக் காணப்படுவதற்குக் காரணம் புதிய கற்காலக் கருவிகள் செய்யப் பயன்படுத்தப்பட்ட பசால்ட், டோலரைட், டிராப்டைக் முதலான கல் வகைகள் அம் மாவட்டங்களில் இல்லாமையே என்று சில அறிஞர்கள் கருதுகிறார்கள். அத்துடன் வேறு காரணங்களும் இருக்கக்கூடும் என்பதை நாம் மறக்கவியலாது. இலங்கையில் இதுவரையில் புதிய கற்காலக் கருவிகள் கிடைக்கவில்லை என்பதையும் இங்குக் குறிப்பிட வேண்டும்.[1]

## தமிழ்நாட்டில் புதிய கற்கால இருப்பிடங்கள்

சேலம், தர்மபுரி மாவட்டங்களில் சேர்வராயன் மலைத் தொடரிலும், வடார்க்காடு மாவட்டத்தில் சவ்வாது, ஏல மலைத்தொடர்களிலும் புதிய கற்காலக் கோடரிகள் ஏராளமாகத் தரைமட்டத்திலேயே கிடைக்கின்றன.[2] பல இடங்களில் இக்கோடரிகள் அங்கு வாழும் மக்களால் பொறுக்கி எடுக்கப்பட்டு மரங்களுக்கு அடியில் வட்டங்களாகவோ அல்லது தனிக் குத்துக் கற்களாகவோ நிறுத்தப்பட்டு வணங்கப்பட்டுவருகின்றன. வழுவழுப்பான இக்கோடரிகளை அவ்வட்டார மக்கள் விண்வீழ் கற்களென்று நம்புகிறார்கள் என்று சென்ற நூற்றாண்டில் இவ்வட்டாரத்தில் நன்கு சுற்றிப் பார்த்த ராபர்ட் புரூஸ்

---

[1] Bridget & Raymond Allchin, *The Birth of Indian Civilization* (1968), pp. 167 & 168

[2] Robert Bruce Foote, *Indian Pre-historic and Proto-historic Antiquities: Notes on their Ages and Distribution* (1916), pp. 57 & 58

புட் குறிப்பிட்டுள்ளார்.[3] இக்கருவிகளைத் தவிர, தரை மட்டத்தில் வேறு எந்தச் சின்னங்களும் காணப்பட வில்லை. காணப்படும் மண்பொம்மைகள் போன்ற சில பொருள்களும் இக்காலத்தைச் சேர்ந்தவையா என்று உறுதியாகச் சொல்லமுடியாது.

## பையம்பள்ளி அகழ்வாய்வு

சில ஆண்டுகளுக்கு முன்னால் மைய அரசுத் தொல் பொருள்துறை வடார்க்காடு மாவட்டம் திருப்பத்தூர் வட்டத்தில் ஜோலார்பேட்டைக்குத் தென் மேற்கே பதினாறு கிலோ மீட்டர் தொலைவில் ஒரு மலையடிவாரத்தி லுள்ள பையம்பள்ளி என்ற ஊருக்கருகில் அகழ்வாய்வுகள் நடத்தியது. இந்த ஆய்வுகளின் முழு விவரம் இன்னும் வெளியிடப்படவில்லையென்றாலும், வெளியாகியிருக்கும் சில குறிப்புகளை வைத்துக்கொண்டு தமிழ்நாட்டின் புதிய கற்கால நிலையைப் பற்றி ஓரளவு அறிந்து கொள்ளலாம்.[4] இங்குச் செய்த அகழ்வாய்வுகளில் இரண்டு பண்பாட்டுக் கட்டங்களைச் சேர்ந்த பொருள்கள் வெளிக் கொணரப் பட்டன. முதல் கட்டம் புதிய கற்காலத்தைச் சார்ந்தும், இரண்டாம் கட்டம் பெருங்கல் காலப் பண்பாட்டைச் சார்ந்தும் இருந்தன. (பெருங்கல் காலப் பண்பாட்டை அடுத்த இயலில் காணலாம்.) புதிய கற்காலத்திலேயே இரண்டு உட்பிரிவுகள் காணப்பட்டன. முதல் பிரிவில் எலும்பினால் செய்யப்பட்ட கருவிகளும், ஜாஸ்பர் அகேட் செர்ட் ஆகிய கல்வகைகளைக்கொண்டு செய்யப் பட்ட சிறு பேனாக்கத்தி போன்ற கருவிகளும், செல்ட்டு கள் என்று அழைக்கப்படும் வழுவழுப்பான கைக் கோடரிகளும் கிடைத்தன. இரண்டாம் பிரிவில் எலும்புக் கருவிகள் கிடைக்கவில்லை. கல்லினால் செய்யப்பட்ட பேனாக்கத்திகள் அதிக அளவில் கிடைத்தன. முதல் பிரிவைவிட இரண்டாம் பிரிவில் வீடுகளின் அமைப்பில்

---

[3] *Ibid*, p. 57

[4] *Indian Archaeology*, A Review, 1964-65, pp. 22 & 23; 1967-68, pp. 26–29

முன்னேற்றம் காணப்பட்டது. அதேபோல் முதல் பிரிவில் காணப்பட்ட மட்கலங்களுக்கும், இரண்டாம் பிரிவில் காணப்பட்ட மட்கலங்களுக்கும் இடையே சிறு வேறுபாடு காணப்பட்டது. எனினும் பொதுவாக இரண்டு பிரிவுகளும் ஒரே பண்பாட்டின் தொடர்ச்சியாக இருப்பதால் இவற்றின் முழு விவரங்களையும் வரிசை யாகப் பார்க்கலாம்.

### அகழ்வாய்வில் வெளியான செய்திகள்

புதிய கற்காலத்தைப் பற்றி இவ்வாய்வில் வெளி யான ஒரு குறிப்பிடத்தக்க செய்தி, புதிய கற்காலம் முழுவதிலும் செம்பினால் செய்யப்பட்ட பொருள்கள் எவையும் பயன்படுத்தப்படவில்லை என்பதாம். அதாவது இது கலப்பில்லாத புதிய கற்காலமாக விளங்கியதென்று சொல்லலாம். இந்த ஆய்வின் பயனாக இக்கால மக்கள் வாழ்ந்துவந்த வீடுகளின் அமைப்பு ஓரளவு தெரிய வந்துள்ளது. மக்கள் குடிசைகளில் வாழ்ந்தனர். பெரும்பாலும் வட்டம் அல்லது நீள்வட்ட உருவில் குடிசைகள் அமைக்கப்பட்டிருந்தன. குடிசைகளின் தளங்கள் சுற்றிலுமிருந்த நிலமட்டத்தைக் காட்டிலும் தாழ்வாக அமைக்கப்பட்டிருந்தன. பெரும்பாலான குடிசைகள் ஒரே அறையைத்தான் கொண்டிருந்தன. ஒன்று அல்லது இரண்டு குடிசைகள் மட்டுமே இரு அறைகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன. இரண்டு அறை களுக்கும் நடுவே ஒருகல் வரிசையாலான சுவர்கள் காணப்பட்டன. எல்லாக் குடிசைகளைச் சுற்றிலும் மழைநீர் உள்ளே புகாவண்ணம் கல்தடுப்புகள் அமைக் கப்பட்டிருந்தன. குடிசைகளின் சுவர்கள் மூங்கில் கழிகளைக் கொண்டும், மரக்கிளைகளைக்கொண்டும் செய்யப் பட்டன என்பதற்கு அறிகுறியாகக் குழிகள் காணப்படு கின்றன. இக்குடிசைகள் எத்தகைய கூரையால் வேயப் பட்டிருந்தன என்று கூறப் போதுமான தடயங்கள் கிடைக்கவில்லை. கூம்பிய வடிவத்தில் பிரம்புகள் அல்லது மூங்கில் கழிகளோடு ஏதாவது புற்களைச் சேர்த்துப் பின்னிக் கூரைகளை அமைத்திருக்கலாம். இந்தக்

குடிசைகளின் நுழைவாயிலில் படி போன்ற ஒரு மேடு அமைக்கப்பட்டிருந்தது. முதலில் தளங்கள் பெரிய பட்டைக் கற்களைக் கொண்டு பாவப்பட்டன. பின் கூழாங்கற்களையும், மண்ணையும் சேர்த்துப் பரப்பிக் கெட்டிப்படுத்தப்பட்டு மேலே சாணம் அல்லது சுண்ணாம் கலந்த பூச்சு பூசப்பட்டது. சாம்பலையும் மண்ணையும் கலந்தும் தளங்கள் பூசப்பட்டன எனக் தோன்றுகின்றது.

இக்காலக் கருவிகளில் (ஒளிப்படம் 2–5) மிக அதிக மாகக் காணப்படும் வகை செல்ட்[5] என்று அழைக்கப் படும் கற்கோடரியாகும். இந்தக் கருவிகள் பையம்பள்ளி அகழ்வாய்விலும் கண்டுபிடிக்கப்பட்டன. மேலே குறிப் பிட்டபடி சேலம், தர்மபுரி, வடார்க்காடு மாவட்டங்களில் இவை தரைமட்டத்திலேயே ஏராளமாகக் காணப்படு கின்றன. மிக உறுதியான பசால்ட், டையோரைட், டிராப்டைக்[6] முதலான கற்களைப் பயன்படுத்தி இவை செய்யப்பட்டன. இவற்றைச் செய்வதில் மிகுந்த அக் கறை காட்டப்பட்டது. கருவிகள் நன்றாகக் கொத்தப் பட்டுப் பின்னல் முழுவதும் அல்லது வெட்டு நுனிப் பாகம் மட்டும் நன்றாக வழவழப்பாகத் தேய்க்கப்பட்டு மெருகேற்றப்பட்டன. இக்கருவிகளின் கைப்பிடிகள் கூம்பு அல்லது உருண்டை வடிவமாகச் செய்யப்பட்டன. இவற்றின் குறுக்கு வெட்டுத் தோற்றம் வட்டமாக அல்லது நீள்வட்டமாக இருந்தது. வெட்டுநுனி மையத் தில் இருக்குமாறு பார்த்துக்கொள்ளப்பட்டது (வரை படம் 12). ஒரு கருவி செய்ய 10 அல்லது 15 நாள் பிடித் திருக்கலாம் என்று இதைப்பற்றி நன்கு ஆராய்ந்த தொல் வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடுகிறார்கள்.[7] பையம் பள்ளி அகழ்வாய்விலிருந்து சில கருவிகள் நன்றாகத்

---

[5] Celt

[6] Basalt, Diorite, Trapdyke

[7] Sankalia, H. D. 'Beginning of Civilization in South India,' *Science Today* (Bombay), Vol. 2, No. 10 (April 1968), p. 33

தேய்த்து மெருகேற்றப்படாமலும் பயன்படுத்தப்பட்டன எனத் தெரிகிறது. பெரும்பாலும் இந்தக் கோடரிகள் மரப்பிடிகளோடு பொருத்தப்பட்டு இன்றைய இரும்புக்கோடரிகளைப் போலப் பயன்படுத்தப்பட்டிருக்க வேண்டும். ஆனால் இவை பிடிகளோடு எங்கேயும் கண்டுபிடிக்கப்படவில்லை. மரப்பிடிகள் காலப்போக்கில் மக்கிப்போவது இயல்பு. சில கோடரிகள் கைப்பிடிப் பக்கம் சுத்தியலைப்போன்றும், மற்றொரு பக்கம் கோடரியைப்போன்றும் செய்யப்பட்டு இருவகையாகப் பயன்படுமாறு அமைந்திருந்தன. ஒரு சில கற்கருவிகள் வாய்ச்சிகளைப்[8] போலச் செய்யப்பட்டன (வரைபடம் 13). கோடரிகள் மரத்தைப் பிளப்பதற்கும், வெட்டுவதற்கும், வாய்ச்சிகள் மரத்தைச் செதுக்குவதற்கும் பயன்படுபவை.

பையம்பள்ளி அகழ்வாய்வில் வேறு சில கற்கருவிகளும் எடுக்கப்பட்டன. மேலே குறிப்பிட்டதைப்போலப் பேனுக்கத்தி போன்ற சிறு கருவிகள் அரிய கல்வகைகளைக்கொண்டு செய்யப்பட்டவை. இவை இதற்கு முன்னால் கடைக்கற்கால மக்கள் பயன்படுத்தியதைப் போலக் கூட்டுக் கருவிகளாக மரப்பிடிகளில் பசைகொண்டு ஒட்டிக் கொடுக்கரிவாளாகவும், வேறு வகைகளிலும் பயன்படுத்தப்பட்டிருக்கவேண்டும். இவ்வகழ்வில் கல்லால் செய்யப்பட்ட ஓர் உளியும், ஒரு கொத்தும் கிடைத்தன. கொத்து ஒரு வேளாண்மைக்கருவி என்பதை குறிப்பிட வேண்டுவதில்லை. இவற்றோடு தோண்டுதடிகளுக்குத்[9] தலையில் பொருத்தப்படும் கனமான துளையிடப்பட்ட வட்டக் கற்களும் (வரைபடம் 14), அம்மிக் கற்களும், குழவிகளும், திரிகைக் கற்களும் கிடைத்தன. தோண்டு தடிகள் நிலத்தைத் தோண்டிக் கிழங்கு வகைகளை வெளிக் கொணர்வதற்கும், விதைகளை ஊன்றுவதற்கும் பயன்படக்கூடியன. அம்மி, திரிகை முதலான பொருள்கள்

---

[8] Adze

[9] Digging Sticks

தானியங்களை அரைத்து உணவாகப் பயன்படுத்தியதை எடுத்துக்காட்டுகின்றன.

எலும்பினால் செய்யப்பட்ட சில கருவிகளும் கிடைத்தன என்று பார்த்தோம். அவைகளில் குறிப்பிடக் கூடியவை; துளையிடும் கருவிகள், முனைபோன்ற கருவிகள், சுரண்டு கருவிகள் ஆகியவை. துளையிடும் கருவிகள் தோல் முதலானவைகளைத் தைப்பதற்குப் பயன்பட்டிருக்கலாம். 'முனைகள்' அம்பு முனைகளாகப் பயன்பட்டிருக்கவேண்டும். சுரண்டு கருவிகள் தோல், ஊன் போன்றவைகளைச் சுரண்டுவதற்குப் பயன்பட்டிருக்கலாம்.

இக்கருவிகள் அல்லாமல் புதிய கற்காலத்தின் ஒரு முக்கியமான பண்பாட்டுக்கூறு மட்கலங்களாகும். தமிழ் நாட்டுப் புதிய கற்கால மட்கலங்கள் கருநாடகப் பகுதியில் கிடைத்த மட்கலங்களை ஒத்திருக்கின்றன. முதலில் சாம்பல்நிற மட்கலங்கள் அதிகமாகப் பயன்படுத்தப் பட்டன. அவற்றில் மங்கலான தோற்றமுடைய பானைகளும் மெருகேற்றப்பட்ட பளபளப்பான பானைகளும் இருந்தன. இவையல்லாமல் சிவப்பு நிறமுடைய மட்கலங்களும் செய்யப்பட்டன. நாளடைவில் சாம்பல்நிற மட்கல வகை குறைந்த அளவிலும், சிவப்புநிற மட்கல வகை அதிக அளவிலும் செய்யப்பட்டன. இந்த மட்கலங்கள் கையினாலோ அல்லது மிக மெதுவாகச் சுற்றும் சக்கரத்தைப் பயன்படுத்தியோ செய்யப்பட்டன. மட்கல உருவங்களில் முக்கியமானது வாயுடைய மண்டை அல்லது கிண்ணமாகும் (வரைபடம் 15). இதனுடைய அடிப்பகுதி உருண்டையாக இருந்தது. இவ்வகை மட்கலங்கள் தென்னிந்தியா முழுவதும் புதிய கற்காலத்தில் பயன்படுத்தப்பட்டன. மங்கலான சாம்பல்நிற மட்கலம் விளிம்பில் செங்காவியினால் வண்ணம் தீட்டப்பட்டது. பானைகளோடு மண்ணினால் செய்யப்பட்ட ஒரு முயல் பொம்மையும் கிடைத்ததை இங்கே குறிப்பிடவேண்டும்.

புதிய கற்கால மக்களின் உணவைப்பற்றி அறிய அகழ்வாய்வில் கிடைத்த தானியங்களும், சில விலங்கு

களின் எலும்புகளும் உதவுகின்றன. கேழ்வரகு, கொள், பச்சைப்பயறு ஆகியவை தீய்ந்த நிலையில் காணப்பட்டன. இத்தானியங்களை இம்மக்கள் பயிரிட்டார்கள் என்று கொள்ளலாம். மாடு, ஆடு, புள்ளிமான், கோழி, பன்றி, காட்டுப்பூனை, காண்டாமிருகம் ஆகியவற்றின் எலும்புகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இந்த மிருகங்களின் இறைச்சியை அக்கால மக்கள் உணவாகக் கொண்டிருக்கலாம் எனக் கூறலாம். இப்பகுதியில் ஒரு காலத்தில் சதுப்பு நிலக்காடுகள் இருந்தன என்பதைக் காண்டாமிருகங்களின் எலும்புகள் எடுத்துக்காட்டுகின்றன. ஏனென்றால் காண்டாமிருகம் சதுப்புநிலக் காடுகளில்தான் வாழ்வது வழக்கம்.

## புதிய கற்காலத்து வாழ்க்கைநிலையும், பண்பாடும்

மேலே குறிப்பிட்ட அகழ்வாய்வுச் சான்றுகளிலிருந்து இப்பகுதியில் வாழ்ந்த புதிய கற்கால மக்களின் வாழ்க்கையையும் பண்பாட்டையும் ஓரளவுக்கு உய்த்துணரலாம். இம்மக்கள் பெரும்பாலும் தங்களுடைய இருப்பிடங்களை மலைகளின்மீது அமைத்துக்கொண்டார்கள் என்பதைக் குறிப்பிடவேண்டும். சேர்வராயன், சவ்வாது மலைத்தொடர்களின்மேல் பல இடங்களில் சமவெளிகள் காணப்படுகின்றன. சில மலைக்குன்றுகளில் இச்சமவெளிகள் இரண்டு மூன்று அடுக்குகளாகவும் உள்ளன. இந்த அடுக்குச் சமவெளிகள் மீது புதிய கற்காலக் குடியிருப்புகள் காணப்படுகின்றன (ஒளிப் படம் 6&7). இதைப்போல் வட கருநாடகப் பகுதியிலும் பெரும்பாலும் மலைகளின் மீதுள்ள சமவெளிகளிலேயே மக்கள் வாழ்ந்த அறிகுறிகள் காணப்படுகின்றன. ஒரு சில இடங்களில் மட்டும் மலைகளை விட்டுத் தள்ளி ஆறுகளின் பக்கத்தில் வாழ்ந்திருக்கிறார்கள். மலையிருப்பிடங்கள் நாற்புறமும் பாறைகளால் சூழப்பட்டுப் பாதுகாப்பான கோட்டைகளைப் போலக் காணப்படுகின்றன. சுற்றிலும் இயற்கையாகவே அத்தகைய பாறைகள் இல்லாதவிடங்களில் பெரும் பாறைக்கற்களை உருட்டிச் சுற்றிலும் வட்டமான கோட்டையைப் போல அமைத்துக்கொண்ட

அறிகுறிகள் சில இடங்களில் தென்படுகின்றன. கரு நாடகப் பகுதியில் மேற்கொள்ளப்பட்ட தீவிர ஆய்வு களின் விளைவாக இந்தப் புதிய கற்கால மக்கள் வாழ்ந்த இடங்கள் ஒவ்வொன்றும் 10, 15 குடிசைகளைக் கொண் டவையாக இருந்தன எனத் தெரிகின்றது. ஒரு குடிசை யில் 5 அல்லது 6 பேர் வாழலாம் என்று கொண்டால் ஓர் இடத்தில் ஏறக்குறைய 100 பேர் வாழ்ந்திருக்கலாம்.[10] ஒரே மலையில் 2 அல்லது 3 அடுக்குகளும், அதற்கு மேலும் காணப்படுவதால் அம்மலைப் பகுதிகளில் இரு நூறு அல்லது முந்நூறு பேர் வாழ்ந்திருக்கலாம் எனக் கொள்ளலாம். பையம்பள்ளிக்கு அருகிலுள்ள மலைத் தொடரில் ஒருசில இடங்களில் இயற்கையாக உள்ள மலைக்குகைகளிலும் அக்கால மக்கள் வாழ்ந்ததற்கான தடயங்கள் காணப்படுகின்றன. எனினும் அவர்கள் பெரும்பாலும் மலைமேலுள்ள சமவெளிகளிலேயே வாழ்ந் தார்கள் எனக் கூறவேண்டும்.

புதிய கற்காலக் குடிசைகள் உருவத்தில் வட்டமாக இருந்ததாகப் பார்த்தோம் (ஒளிப்படம் 8). இவைகளை இன்று கருநாடகப் பகுதியில் சிலவிடங்களில் மலைமீது வாழும் போயர்களின் இல்லங்களுக்கு (வரைபடம் 16) ஒப்பிடலாம்.[11] குடிசைகளுக்குள் ஒருபக்கம் கல்லடுப்பு இருந்தது. ஒரு பக்கம் தானியங்களையும் வேறு பொருள்களையும் வைத்துக்கொள்ளப் பெரிய மண் சாடிகள் இருந்தன. (ஒரு சாடி பழைய நிலையில் வைக்கப்பட்ட இடத்தில் அப்படியே நின்றிருந்தது அகழ் வில் கண்டுபிடிக்கப்பட்டது.) குப்பை கொட்டுவதற்காகக் குடிசைகளுக்கு வெளியில் சில குழிகளைத் தோண்டிக் கொண்டார்கள் எனத் தெரிகிறது.

புதிய கற்கால மக்கள் மலைகள்மீது தங்கள் இருப் பிடங்களுக்கு அருகில் இருந்த சமவெளிகளில் வேளாண் மையும் செய்தார்கள். மேலே குறிப்பிட்ட கற்கொத்து,

---

10 Sankalia, H. D. *Op. cit.* p. 33

11 Sankalia, H. D. *Op. cit.* p. 34

கற்கருவிகள், தானிய வகைகள் ஆகியவை அக்கால வேளாண்மைக்குச் சான்று பகர்கின்றன. எலும்பினால் செய்யப்பட்ட 'முனை'களையும், சிறு கற்கருவிகளையும் அம்புநுனிகளாகப் பயன்படுத்தி வேட்டையாடினர் எனக் கூறலாம்.

## கருநாடகப் பகுதியோடு ஒப்பீடு

கருநாடகப் பகுதியின் பலவிடங்களில் புதிய கற்கால இருக்கைகளுக்குப் பக்கத்திலுள்ள பாறைகளில் திமிலும் நீண்ட கொம்புமுடைய மாட்டு உருவங்கள் (வரை படம் 17) தீட்டப்பட்டுள்ளன. மாடுகள் உருவங் கொண்ட மண்பொம்மைகளும் கிடைத்துள்ளன. இவற்றி லிருந்து இந்த ஆவினங்களை அக்கால மக்கள் தங்கள் வீடுகளில் கால்நடைகளாக வைத்துக்கொண்டிருந்தார் கள் எனலாம். இன்றும் வடகருநாடகத்தில் பலவிடங் களில் காணப்படும் சாம்பல்மேடுகள் பல ஆண்டுகள் அந்த இடங்களில் வந்து தங்கிய கால்நடைகளின் சாணச்சாம்பலைக் கொண்டவையாக உள்ளன. இந்தச் சாம்பல்மேடுகளை அகழ்வு செய்த ஆல்சின் முதலான தொல்பழங்கால ஆசிரியர்கள் இக்கால மக்கள் ஏராள மான ஆவினங்களை உடைமையாகக் கொண்டிருக்க வேண்டும் என்று கூறுகிறார்கள். ஒருசில இடங்களில் நூற்றுக்கணக்கான மாடுகள் வந்து தங்கிய அறிகுறிகள் காணப்படுகின்றன.[12] இம்மக்கள் தங்களுடைய ஆவினங்களை ஆண்டில் சில மாதங்களில் தங்களூர்களி லிருந்து தூரத்திற்கு ஓட்டிச்சென்று மேய்ச்சல் நிலங் களின் அருகில் கூடாரம் அடித்து இருந்துவிட்டுத் தங்களுடைய ஊர்களுக்குத் திரும்பிச் சென்றுள் ளார்கள் என்று தெரிகிறது.[13] தமிழ்நாட்டில் புதிய கற்காலத்தில் வாழ்ந்த மக்களும் இவ்வகையான வாழ்க்கையை மேற்கொண்டு வாழ்ந்திருக்கலாம்.

---

[12] Allchin, F. R. *Neolithic cattle-keepers of South India* (Cambridge, 1963), p. 163

[13] *Ibid*, p. 164

ஏனென்றால் இங்கே கிடைக்கும் அகழ்வுப் பொருள்களும், கருநாடகப் பகுதியில் கிடைக்கும் அகழ்வுப் பொருள் களும் ஒரே வகையாகக் காணப்படுகின்றன. ஆனால் வடக்குப் பகுதிக்கும் இதற்கும் கால இடைவெளி சிறிது காணப்படுகிறது. வடக்கில் ஏறக்குறைய கி. மு. 2300 முதல் கி. மு. 1050 வரை இக்காலம் நிலவியதாகத் தெரிகிறது. பையம்பள்ளி மக்கள் இக்காலத்தின் கடைசிக் கட்டத்தில் வாழ்ந்ததாகத் தெரிகிறது. அதாவது கி. மு. 1300 அல்லது 1200ஐ ஒட்டி வாழ்ந்ததாகத் தெரிகிறது.[14] புதிய கற்காலக் குடியிருப்புகள் தென் மாவட்டங்களில் குறைவாகக் காணப்படுவதற்கு ஒரு காரணம் அம்மாவட்டங்களில் உள்ள மலைகளில் சம வெளிகள் குறைவாக இருப்பதாகும். தமிழ்நாட்டில் தெற்கே செல்லச்செல்லப் புதிய கற்காலக் கருவிகள் மிக அருகியே காணப்படுகின்றன. பிற்காலத்தில்தான் மக்கள் சிறிது சிறிதாக வட மாவட்டங்களிலிருந்து தென் மாவட்டங்களுக்குப் பரவியிருக்கவேண்டும்.

## சிறப்பியல்புகள்

இக்கால மக்களின் அகப்பண்பாட்டைப் பற்றிக் கூறும் அளவுக்குச் சான்றுகள் இல்லை. கருநாடகப் பகுதியின் சிலவிடங்களில் வீடுகளுக்குள்ளேயே இறந்த வர்களைப் புதைக்கும் பழக்கம் இருந்தது தெரியவரு கின்றது.[15] அவர்கள் குழந்தைகளைத் தாழியிலிட்டுப் புதைத்தார்கள். ஒருவர் இறந்த பின்னும் அவருடைய உயிர் வாழ்கின்றது என்ற நம்பிக்கையை இம்மக்கள் கொண்டிருந்ததாகத் தெரிகின்றது. இக்கால மக்கள் தான் முதன்முதலாக ஒரு வரையறுத்த சமுதாயமாக வாழத் தலைப்பட்டார்கள் என்று சொல்லமுடியும். பத்துப் பதினைந்து வீடுகள் கொண்ட ஊர்த்தொகுதிகள் ஏற்பட் டிருந்தனவென்று பார்த்தோம். கருநாடகப் பகுதிச்

---

[14] *Indian Archaeology*, A Review, 1967–68, p. 26
[15] Bridget and Raymond Allchin, *Op. cit.*, p. 311

சாம்பல்மேடுகள் இவர்கள் மேற்கொண்ட கூட்டு வாழ்க்கைக்கு நல்ல சான்றாகும்.

தொகுத்துக் கூறினால், புதிய கற்கால மக்கள் மலைகள்மீது குடிசைகளில் வாழ்ந்தார்கள்; ஆவினங்களைப் பேணி வளர்த்தார்கள்; கேழ்வரகு, கொள்ளு, பச்சைப்பயறு முதலான தானியங்களைப் பயிர்செய்தார்கள்; வேட்டையாடுதலையும் ஒரு தொழிலாகக் கொண்டிருந்தார்கள். இத்தகைய தன்மைகளையெல்லாம் மனத்திற்கொண்டு பார்க்கும்பொழுது பழந்தமிழ் இலக்கியத்தில் காணப்படும் குறிஞ்சி நில வாழ்க்கை நினைவுக்கு வருகிறது. அதாவது தமிழ்நாட்டு நாகரிகத்தில் புதியகற்காலம் முதல் படியாக இருந்ததாகச் சொல்லலாம்.

## உலக நிலையில் தமிழ்நாட்டுப் புதிய கற்காலம்

சிறு பேனாக்கத்தி போன்ற கருவிகளைப் பயன்படுத்தும் பழக்கத்தைத் தங்களுக்கு முன்பிருந்த கடைக் கற்கால மக்களிடமிருந்து புதிய கற்கால மக்கள் கற்றுக் கொண்டிருக்க வேண்டும். ஆனால் அவர்களைவிடப் புதிய கற்கால மக்கள் முன்னேறியவர்களாக இருந்தார்கள். இவர்கள் முதன்முதலாக ஓரிடத்தில் நிலையாகத் தங்கி ஆடுமாடுகளை வளர்த்தும் வேளாண்மை செய்தும் வாழ்ந்தார்கள். கருநாடகப்பகுதி அகழ்வாய்வுகளில் பெரும் பங்கு கொண்ட ஆல்சின், சங்காலியா முதலானோர் இக்கால மக்கள் பயன்படுத்திய மட்கலங்களுக்கும், ஈரான் நாட்டுப் பகுதியில் கி. மு. 4000ஐ ஒட்டி வாழ்ந்த புதிய கற்கால மக்களின் மட்கலங்களுக்கும் இடையே மிகுந்த ஒற்றுமை உள்ளதாகக் கருதுகிறார்கள்.[16] அதைக்கொண்டு அந்தப் பகுதியிலிருந்து மக்கள் தென்னாட்டுக்குக் குடி பெயர்ந்திருக்கலாம் என அவ்வறிஞர்கள் நினைக்கிறார்கள். ஆனால் இந்தக் கருத்தை முற்றிலும் உறுதிப்படுத்தப் போதிய சான்றுகள் இது

---

[16] *Ibid.*, p. 168
& Sankalia, H. D. *Op. cit.*, p. 36

வரையில் கிடைக்கவில்லை. இந்த மக்கள் தற்காலத்தில் திராவிட மொழி பேசும் மக்களின் முன்னோடிகளாக இருந்திருக்கக்கூடுமென்றும் ஆல்சின் கருதுகிறார்.[17] கடைசியாக, மேற்கு ஆசியாவில் பாலஸ்தீனம் முதலான பகுதிகளின் புதிய கற்காலக் கட்டத்திற்கு (கி. மு. 6000)[18] ஏறக்குறைய 2 அல்லது 3 ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னிட்டதே தமிழ்நாட்டுப் புதிய கற்காலம் என்பதைக் குறிப்பிடவேண்டும்.

---

17 **Bridget and Raymond Allchin,** ***Op. cit.,*** **pp. 326 & 327**

18 **Graham Clark,** ***World Pre-history*** **(Cambridge, 1969), pp. 92 & 93**

# இயல் 6

## பெருங்கல் காலம்

### இலக்கணம்

பெருங்கல் ஈமச் சின்னங்களைப் பயன்படுத்திய மக்கள் வாழ்ந்த காலத்தைப் பெருங்கல் காலம் என்று வரையறுக்கிறோம். இறந்தவர்களைப் புதைத்த இடத்திலோ அல்லது அவர்களது எலும்புகளைப் புதைத்த இடத்திலோ பெரிய கற்களைக்கொண்டு எடுக்கப்பட்ட ஈமச் சின்னங்களைப் பெருங்கல் சின்னங்கள் என்று கூறுகிறோம். இறந்தவர்களின் நினைவாக அல்லது ஈமச் சடங்குகளுக்காகக் கற்களைக்கொண்டு எடுக்கப்பட்ட சின்னங்களும் இவற்றுள் அடங்கும். மேலும் வெளிப்புறத்தே பெரிய கற்களைப் பெற்றிருக்காவிட்டாலும், தாழியில் இட்டுப் புதைக்கும் ஈமச் சின்னங்களையும் பண்பாட்டு அமைதிபற்றிப் பெருங்கல் சின்னங்களைச் சேர்ந்தவையாகக் கருதுகிறோம்.

இறந்தவர்களுக்கு நடப்படும் கல்லை நடுகல் எனத் தமிழ் இலக்கியங்கள் வழங்குகின்றன. நடுகல் என்ற சொல்லை இவ்வீமச் சின்னங்கள் அனைத்துக்கும் பொருந்துமாறு பயன்படுத்த முடியாது. இவற்றுள் ஒருவகைச் சின்னம் மட்டும் நடுகல் எனப் பெயர் பெறுமே ஒழிய எல்லாச் சின்னங்களுக்கும் இப்பெயரைக் கொள்ள முடியாது. தமிழ் இலக்கியங்கள் இறந்துபட்டோரைக் குறிக்கும்போது 'கல்லாயினனே' எனச் சுட்டுகின்றன. 'கல்லாயினன்' என்றால் இறந்துபட்டான் என்று பொருள். அதோடு உற்றார் உறவினரால் ஈமக்கடன் அளிக்கப்பட்டான்; தெய்வத்தன்மை பெற்றான் எனவும் பொருள்கள் தொனிக்கும். ஈமக்கடனுக்கும் கல்லுக்கும் நெருங்கிய தொடர்பு இருந்ததை இது உணர்த்துகிறது.

பிற நாடுகளிலும் இவ்வகையான ஈமச்சின்னங்கள் காணப்படுகின்றன. மேற்கு ஐரோப்பிய நாடுகளிலும், பிரிட்டனிலும், நடுநிலக்கடல் நாடுகளிலும், இன்னும் பல இடங்களிலும் இவைகள் பரக்கக் காணப்படுகின்றன. அங்கெல்லாம் இச்சின்னங்கள் பெருங்கற்களைக் கொண்டே அமைக்கப்பட்டுள்ளன. இவைகளை அந்த நாடுகளிலுள்ள தொல்லியல் அறிஞர்கள் யாவருமே 'மெகாலிதிக் மான்யுமென்ட்ஸ்' அதாவது 'பெருங்கல் சின்னங்கள்' என்று கடந்த இரண்டு நூற்றுண்டுக்கும் மேலாக அழைத்துவருகிறுர்கள். தமிழ்நாட்டில் காணப் படும் பெருங்கல் சின்னங்களுக்கும் பிற நாடுகளில் காணப்படும் பெருங்கல் சின்னங்களுக்கும் பல ஒற்று மைகள் உண்டு. இத்தொடர்பைப் பல அறிஞர்கள் ஆய்ந்துள்ளார்கள். ஆக, பெருங்கல் சின்னம் என்று நாம் பயன்படுத்தும் வழக்கமானது இயல்பானதும் முறையானதுமாகும். இலக்கிய வழக்கில் பெருங்காடு[1] என்பது ஈமக் காட்டையும் குறிப்பதுபோல் பெருங்கல் என்பது ஈமக் கற்சின்னங்களையும் நினைவிற்குக் கொண்டு வரும் என்பதில் ஐயமில்லை.

தென்னிந்தியத் தொல்பழங்கால வரலாற்றில் பெருங் கல் காலம் ஒரு தனி இடத்தைப் பெறுகிறது. இக்கால மக்கள் இரும்பை அதிகமாகப் பயன்படுத்தியதன் காரணமாக இக்காலம் இரும்புக்காலம் எனவும் பெயர் பெறுகிறது. இக்காலத்தைப்பற்றிய ஆய்வு ஒரு நூற் ருண்டுக்கு மேலாக நடந்துவந்தும் இன்னும் இதைப் பற்றிய ஆய்வு முழுமை பெற்றுவிட்டது என்று சொல் வதற்கில்லை. பல செய்திகள் இன்னும் புதிர்களாகவே உள்ளன. இக்காலத்தைப்பற்றிய கால வரையறைகூட இன்னும் தெளிவாக இல்லை. தமிழ்நாட்டுப் பெருங்கல் சின்னங்களுக்கும், வெளிநாட்டிலுள்ள சின்னங்களுக் கும் உள்ள தொடர்பு இன்னும் கால முறைப்படி தெளி வாக்கப்படவில்லை. இச்செய்திகளைப்பற்றி ஆய்வதற்கு

[1] புறநானூறு, 364 : 14

முன் இக்காலத்தில் அமைக்கப்பட்ட பல்வேறு வகையான ஈமச்சின்னங்களைப்பற்றித் தெரிந்துகொள்ள வேண்டும்.

## பெருங்கல் சின்ன வகைகள்

தென்னிந்தியாவில் பெருவாரியாகக் காணப்படும் பெருங்கல் சின்னங்கள் பல்வேறு பெயர்களால் பல்வேறு காலங்களில் அந்தந்தக் கால ஆய்வாளர்களால் அழைக்கப்பட்டன. ஆனால் இச்சின்னங்களை அறிவியல் முறைப்படி ஆராய்ந்த அண்மைக்காலத் தொல்லியல் வல்லுநர்கள் ஒரு சீரான பெயர்த்தொகுதியை மேற்கொண்டிருக்கிறார்கள். தமிழ்நாட்டின் சிறந்த தொல்லியல் வல்லுநரான வி. டி. கிருஷ்ணசாமி என்பார் இப்பெயர்த் தொகுதியைச் சீராக்கி வழக்குக்குக் கொண்டுவந்தார். இத்தொகுதியில் காணப்படும் ஆங்கிலச் சொற்களுக்குப் பொருத்தமான தமிழ்ச் சொற்களைக்கொண்டு எல்லா வகைகளும் கீழே வரிசையாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

### கல்லறை[2]

#### கல்திட்டை

கல்லறைகளில் கல்திட்டை,[3] கல்பதுக்கை,[4] என்று இரு பிரிவுகள் உள்ளன. கல்திட்டை என்று சொல்லப்படும் கல்லறை பெரும்பாலும் நிலத்திற்கு அதாவது தரைமட்டத்திற்கு மேல் அமைக்கப்பட்டது (ஒளிப்படம் 9–11). இயற்கையாகக் கிடைத்த பெரிய கற்களை அப்படியே நான்கு புறமும் நிறுத்தி, சதுரமாக அல்லது நீண்ட சதுரமாக ஓர் அறை உண்டாக்கப்பட்டது. பக்கத்திற்கு ஒரு கல், இரண்டு கல் அல்லது அதற்கு மேற்பட்டவையும் பயன்படுத்தப்பட்டு இவ்வறைகள் கட்டப்பட்டன. இக்குழிவறைகளின் அடிப்பகுதிகள் முதலில் கற்களால்

---

[2] Cist
[3] Dolmonoid cist
[4] Slab cist

பாவப்பட்டன. அதன்பின் பாவப்பட்ட தரைமேல் ஈமப் பொருள்கள் வைக்கப்பட்டன. ஈமப்பொருள்களை இட்ட பிறகு மேலே ஒரு பெரிய பட்டைக்கல்லைக்கொண்டோ அல்லது இரண்டு மூன்று பட்டைக்கற்களைக்கொண்டோ அறை மூடப்பட்டது. இவ்வறையின் நான்கு புறத்திலும் சிறு கல்சுவர்கள் கல்லறைச் சுவர்களுக்கு ஆதரவாக அமைக்கப்பட்டன. சில சமயங்களில் இரண்டு அல்லது மூன்று கல்சுவர்கள்கூட கல்லறையைச் சுற்றி அமைக்கப் பட்டன. இச்சுவர்கள் எழுப்பப்பட்டுக் கல்லறை மேலே மூடப்பட்டபிறகு, மேலே இவற்றை முழுவதும் மறைக்கும் வகையில் மண்ணும் சிறு சல்லிக்கற்கள் அல்லது கூழாங் கற்களும் போடப்பட்டன. இதனுல் ஒரு திட்டு அல்லது குவை தரைமட்டத்திலிருந்து எழும்பியது. குவை சித றுமலிருக்கக் குவையைச் சுற்றிச் சில சமயங்களில் வட்ட மாகப் பெரிய உருண்டைக்கற்கள் வைக்கப்பட்டன.

### கல்பதுக்கை

கல்திட்டைக்கும், கல்பதுக்கைக்குமுள்ள முக்கிய வேறுபாடு இரண்டு. கல்திட்டை தரை மட்டத்துக்கு மேலே எழுப்பப்பட்டது. கல்பதுக்கை தரையைத் தோண்டிச் சிறிது நிலத்திற்கடியில் இருக்குமாறு அல்லது முழுவதும் நிலத்திற்கடியில் புதைந்து இருக்கு மாறு அமைக்கப்பட்டது. இன்னொரு வேறுபாடு, கல் திட்டையில் கல்லறையை உருவாக்கப் பயன்படுத்தப் பட்ட நான்கு பக்கக்கற்கள் இயற்கையாகக் கிடைத்த பாறுங்கற்களாகும். அவைகளில் செதுக்கல்போன்ற எந்த விதமான மாற்றமும் செய்யப்படவில்லை. ஆனுல் கல் பதுக்கையில் பயன் படுத்தப்பட்ட கற்கள் பட்டையாகச் செதுக்கப்பட்டுப் பயன்படுத்தப்பட்டன. பட்டையாகச் செதுக்குவதற்கேற்ற லேட்டரைட் போன்ற நொய்மை யான கற்கள் கிடைத்த இடங்களிலேயே கல் பதுக்கைகள் அமைக்கப்பட்டன. மிக உறுதியான கருங்கற்களுள்ள இடங்களில் கல்திட்டைகளே அமைக்கப்பட்டன. கல் பதுக்கைகளில் பக்கத்திற்கு ஒன்ருக நான்கு பட்டைக் கற்களே பெரும்பாலும் பயன்படுத்தப்பட்டன. நிலத்

தைக் கொஞ்சம் தோண்டிக் கற்பலகைகள் அக்குழியில் நான்கு பக்கமும் நிறுத்தப்பட்டன. இவைகள் சாயாமல் நேராக நிற்பதற்காக ஒரு கல் இன்னொரு கல்லைத் தாங்கும் வகையில் ஒவ்வொரு கல்லின் முனையும் ஒரு பக்கம் நீட்டி நிறுத்தப்பட்டது. இந்த அமைப்பு மேலே யிருந்து பார்க்கும்போது ‘ஸ்வஸ்திகா’ போன்று தோற்ற மளிக்கும். வெளிப்புறத்தில் இப்பலகைக் கற்களை உறுதிப்படுத்தும் வகையில் கல்சுவர்கள் ஒரு வரிசை அல்லது இரண்டு வரிசை எழுப்பப்பட்டன. கல்திட்டை யைப் போலவே கல்பதுக்கையிலும் அறைக்குள் ஈமப் பொருள்கள் போட்ட பிறகு மேலே ஒரு பெரிய பலகைக்கல்லாலான மூடி கவிழ்க்கப்பட்டது. அதற்குப் பின்னுல் மேலே மண், கூழாங்கற்கள் முதலானவை பரப்பப்பட்டுத் தரைக்குமேல் ஒரு மேடு எழுப்பப் பட்டது. இந்த மேட்டைச் சுற்றிச் சிலசமயம் ஒரு கல்வட்டமும் உண்டாக்கப்பட்டது.

கல்திட்டையிலும் கல்பதுக்கையிலும் உள்ளே இடப்பட்ட ஈமப்பொருள்கள் ஒரே வகையானவை. இறந்து போனவர்களின் உடல்கள் முதலில் திறந்த வெளியில் பல நாள் கிடத்தப்பட்டன. இந்தச் சடலங் களிலிருந்து சதைகள் மறைந்த பிறகு எஞ்சிய எலும்பு களைப் பொறுக்கியெடுத்து அவைகளை இந்தக் கல்லறை களில் இட்டார்கள். இதுவரைக்கும் தெரிந்த செய்திகளி லிருந்து பெரும்பாலான இடங்களில் இறந்தவர்களின் முழுச் சடலமும் அப்படியே இக்குழிகளில் புதைக்கப் பட்டது என்று சொல்வதற்கில்லை. எலும்புகள் மட்டும் எந்த உருவமும் தெரியாமல் கிடைத்தன. இந்த எலும்பு களோடு பல மட்கலங்கள், அணிமணிகள், இரும்பினுல் செய்யப்பட்ட படைக்கலங்கள் ஆகியவை இக்குழிகளில் இடப்பட்டன. அவற்றின்மீது மண் பரப்பப்பட்டு மூடப் பட்டன. கல்திட்டைகளில் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட நீளுருவங்கொண்ட ஈமத்தொட்டிகள் (ஒளிப் படம் 12 – 14) நிறுத்தப்பட்டன. இந்த ஈமத் தொட்டி களின் அடிப்பகுதியில் இரண்டு அல்லது அதற்கு மேற்

பட்ட இரட்டைக் கால்கள் இருந்தன. இத்தொட்டிகள் மேல்மூடி கொண்டவையாகவும் புறப்பாகத்தில் ஓரளவு சித்திர வேலைப்பாடுகள் கொண்டவையாகவும் இருந்தன. இத்தொட்டிகள் ஈமப் பொருள்கள் இட்ட பிறகு மூடப் பட்டவை. ஒரு சில ஈமத் தொட்டிகள் ஆடு போன்ற விலங்குகளின் உருவங்களைக் கொண்டிருந்தன. கல் திட்டையிலும் கல்பதுக்கையிலும் நான்கு பக்கங்களில் ஏதாவது ஒரு பக்கத்தில் ஓர் இடுதுளை [5] இருந்தது. கல் பதுக்கையில் பயன்படுத்தப்பட்ட செதுக்கி இழைக்கப் பட்ட பலகைக்கல்லின் நடுவில் வட்டமான இடுதுளை செய்யப்பட்டது. இத்துளை சில இடங்களில் மட்டும் ஓர் ஆள் உள்ளே போய்வரும் அளவுக்குப் பெரிதாக இருந்தது. பெரும்பாலும் அரையடி குறுக்களவு உள்ள தாகவே அது அமைக்கப்பட்டது. கல்திட்டைகளில் ஒரு பக்கக் கற்கள், நடுவில் சிறிது இடைவெளி கொண் டிருக்குமாறு நிறுத்தப்பட்டன. பலகைக்கல்லில் செய்யப் பட்ட வட்டமான துளைக்குச் சமமாக இந்த இடைவெளி யைக் கருதவேண்டும். இந்தத் துளையோ அல்லது இடை வெளியோ ஒரு குறிப்பிட்ட திசையை நோக்கி அமைக் கப்பட்டது என்று சொல்வதற்கில்லை. ஒவ்வோர் இடத் திலும் ஒரு திசையை நோக்கிக் காணப்படுகின்றது.[6]

### மண்குவை, கல்குவை, கல்கிடை

இவைகளில் நடுவில் கல்திட்டை அல்லது கல் பதுக்கைக்குப் பதிலாக உள்ளே வெறுங் குழி மட்டும் இருந்தது. நிலத்தைத் தோண்டி ஓர் ஆழமான குழியைச் செய்து அக்குழிக்குள்ளே தாழி அல்லது ஈமத்தொட்டி ஆகியவற்றோடு (அல்லது இவைகளில்லாமல்) ஈமப் பொருள்களை உள்ளே இட்டு மண்ணைக்கொண்டு மூடித் தரைமட்டத்துக்குமேல் மண்ணைக் குத்தாகக் குவித்து வைப்பது வழக்கம். இந்த மண்குத்தை மண்குவை[7]

---

[5] Port-hole

[6] Gururaja Rao, B. K. *The Megalithic Culture in South India*, p. 241

[7] Barrow

என்று சொல்கிறோம். மண்ணுக்குப் பதிலாச் சல்லிக் கற்களைக் குவித்து வைத்தால் 'கல்குவை'[8] உருவாகும். இந்தக் கல்குவையைச் சுற்றிலும் வட்டமான கற்கள் கிடத்தப்பட்டுக் கட்டப்படும் சின்னத்தைக் கல்கிடை[9] என்று அழைக்கிறோம்.

### கல்வரிசை

சில இடங்களில் ஈமப் பொருள்கள் புதைக்கப்பட்ட இடத்தின்மீது ஒரு பெரிய கல் செங்குத்தாக நிறுத்தப் பட்டது. இது குத்துக்கல்[10] எனப்படுகிறது. சில இடங் களில் பல செங்குத்துக் கற்கள் ஒரு வரிசையாகவோ[11], இரண்டு வரிசைகளாகவோ[12], அதற்கும் மேற்பட்ட வரிசைகளாகவோ நிறுத்தப்பட்டன. இப்படி நிறுத்தப் பட்ட கற்களில் சில 10, 15 அடிக்கும் மேல் உயரமானவை யாகவும், பெரும்பாலானவை மூன்றிலிருந்து ஆறு அடி உயரம் கொண்டவையாகவும் இருந்தன. சில கற்கள் செதுக்கப்பட்டும், பெரும்பாலானவை செதுக்கப்படா மலும் நிறுத்தப்பட்டன.

### தொப்பிக்கல், குடைக்கல்

மேலே குறிப்பிட்ட ஈமச் சின்னங்களேயல்லாமல் கேரளப் பகுதியில் சில சின்னங்கள் அப்பகுதிக்கே சிறப் பாக உரியனவாகக் காணப்படுகின்றன. அவைகள் தொப்பிக்கல், குடைக்கல், குடைவரைத் தாழ்வறை ஆகியன. தொப்பிக்கல்லானது[13] காளானைப்போல உருவம் கொண்டது (ஒளிப்படம் 15). ஓரளவுக்கு இழைக்கப்பட்ட நான்கு கற்கள் சாய்வாகக் கூம்பிய வடிவத்தில் நிறுத்தப்பட்டன. இந்தக் கற்களின் உச்சி யில் ஒரு வட்டமான மூடி போன்ற கல் வைக்கப்பட்டது.

---

[8] Cairn
[9] Cairn Circle
[10] Menhir
[11] Alignment
[12] Avenue
[13] Hoodstone

சாய்வுக்கற்களும் மேலே வைக்கப்பட்ட தலைக்கல்லும் செதுக்கப்பட்டு உருவாக்கப்பட்டன. நிறுத்தி வைக்கப் பட்ட கற்களுக்கு நடுவில் தரைக்குக் கீழே தோண்டப் பட்ட குழியில் தாழி முதலானவை வைக்கப்பட்டு ஈமப் பொருள்களும் இடப்பட்டன. குடைக்கல் பார்ப்பதற்கு கேரளப்பகுதியில் பயன்படுத்தப்படும் வட்டமான பனை யோலைக் குடையைப் போன்றிருக்கும் (ஒளிப்படம் 16). இந்தக் கல் ஈமப்பொருள்கள் புதைக்கப்பட்ட இடத்தின் மீது தரையோடு பொருந்துமாறு வைக்கப்பட்டது. தொப்பிக்கல்லில் இருப்பதைப்போல் இதைத் தாங்கு வதற்குக் குத்துக்கற்கள் இல்லை. இந்தக் கல்லுக்குக் கீழே குழியில் ஈமத்தாழி புதைக்கப்பட்ட பிறகு இக்கல் மேலே வைக்கப்பட்டது. குடைக்கல், குத்துக்கல் ஆகிய இரண்டுமே பெரும்பாலும் பாறைகளினூடே அல்லது கெட்டியான மண்ணினூடே குடைந்த ஈமக்குழிகளை மூடும் வகையில் அமைக்கப்பட்டன.

### குடைவரைத் தாழ்வறைகள்[14]

கேரளத்தில் கொச்சியிலும் மலபார்ப் பகுதிகளிலும் காணப்படும் இவை பாறைகளைத் தாழ்வாகக் குடைந்து அறைகளைப்போலச் செய்யப்பட்டவை (ஒளிப்படம் 17 & 18). மிக எளிதாகக் குடைவதற்குப் பயன்படும் லேட்டரைட் பாறைகளுள்ள இடங்களில் இத்தகைய தாழ் வறைகள் உருவாக்கப்பட்டன. ஒரு தாழ்வறை உண் டாக்குவதற்கு முதலில் பாறையில் ஒரு சதுரமான குழி ஆழமாக மேலிருந்து தோண்டப்பட்டது. இந்தக் குழியி னுள்ளே இறங்குவதற்கு ஒரு வகையான படியமைப்பும் விடப்பட்டது. பின்னல் இந்தக் குழிக்குள் இறங்கிக் குழி யின் அடிமட்டத்திற்குச் சிறிது மேலே குழியின் ஏதாவது ஒரு சுவரில் ஓர் ஆள் படுக்கை வசமாக நுழைவதற்குத் தக்கவாறு குடையப்பட்டது. அந்தக் குடைவினுள்ளே சென்று சிறிது சிறிதாக உள்ளே குடைந்து ஓர் அறை உண்டாக்கப்பட்டது. இந்த அறையின் தரை வெளியி

---

[14] Rock-cut caves

லுள்ள குழியின் தரைக்குச் சிறிது தாழ்வாக இருந்தது. இந்த அறை மேலே குவிந்த முகட்டை உடையதாக அமைக்கப்பட்டது. குவிந்த முகட்டின் நடுப்பகுதியைத் தாங்கும் வகையில் தரையிலிருந்து ஒரு கல்தூண் நிற்கு மாறு சில சமயங்களில் செய்யப்பட்டது. தூண் இல்லாத இடங்களில் முகட்டின் உச்சியில் ஒரு துளை வானத்தை நோக்கிக் குடையப்பட்டது. இந்தத் தாழ்வறைக்குள்ளே சுவரை ஒட்டிக் கல்லிலேயே விசிப்பலகை, முக்காலி போன்ற அமைப்புகளும் சில சமயங்களில் விடப்பட்டன. இந்த விசிப்பலகை, முக்காலிகளின்மீது ஈமப்பொருள் களும், மட்கலங்களும், பிறவும் வைக்கப்பட்டன. கடைசி யாக, முதலில் குடையப்பட்ட பக்கத்துளை ஒரு பலகைக் கல்லால் மூடப்பட்டது. மேல்முகட்டிலுள்ள துளை கூட ஒரு பலகைக்கல்லால் மூடப்பட்டது. மேல்முகட்டை மூடிய பலகைக்கல் பெரும்பாலும் மேலே குறிப்பிட்ட குடைக்கல்லைப்போல இருந்தது. இந்தக் குடைவரைத் தாழ்வறைகள் சில இடங்களில் ஒன்றுக்கு மேற்பட்ட அறைகளைக் கொண்டும் அமைக்கப்பட்டன.

## தாழி[15]

தாழிகளைப் பற்றி (ஒளிப்படம் 19) மேலேயே குறிப் பிடப்பட்டது. அதாவது கல்பதுக்கை, கல்திட்டை, கல்குவை, கல்கிடை ஆகியவைகளில் தாழிகள் ஈமச் சடங்குக்காகப் புதைக்கப்பட்டன என்று பார்த்தோம். அதேபோல் கேரளப் பகுதியில் குடைக்கல், தொப்பிக்கல் இவைகளுக்கு அடியிலும் தாழிகள் புதைக்கப்பட்டன. இவற்றிலெல்லாம் உள்ளே தாழிகளிருப்பதை மேலே உள்ள கற்சின்னங்கள் உணர்த்துவனவாக இருக்கின் றன. ஆனால், தமிழ்நாட்டின் தெற்குப்பகுதியில் தரை மட்டத்திற்கு மேல் எந்த அடையாளமும் இல்லாத இடங் களிலும் நிலத்துக்குக் கீழே தாழிகள் புதைக்கப்பட்ட தன்மை அகழ்வாய்வுகள் மூலம் தெரியவருகிறது. இங்குத் தாழியின் உருவத்திற்குச் சிறிதளவு பெரிதாக

---

[15] Urn

ஓர் ஆழமான குழி தோண்டப்பட்டுத் தாழி உள்ளே இறக்கப்பட்டது. குழியின் அரைப்பாகத்துக்குக் கீழே தாழியைச் சுற்றிலும் ஒரு திண்ணை விடப்பட்டது. இந்தத் திண்ணைமீது தாழியைச் சுற்றிலும் ஈமப் பொருள்கள் வைக்கப்பட்டன. தாழி முழுவதும் மண்ணால் நிரப்பப்பட்டது. சிலசமயம் மண் நிரப்புவதற்கு முன் தாழிக்குள்ளேயேகூட எலும்புகளும், மற்ற ஈமப்பொருள்களும் (ஒளிப்படம் 20) வைக்கப்பட்டன. இப்படி ஈமப்பொருள்கள் வைக்கப்பட்ட பிறகு முதலில் குழியிலிருந்து தோண்டிய மண்ணைக் கொண்டோ வேறு இடத்திலிருந்து கொண்டுவந்த மண்ணைக் கொண்டோ குழி தரைமட்ட அளவிற்கு நிரப்பப்பட்டது. இவைகள் 'முதுமக்கள்தாழி' என்று அழைக்கப்பட்டன.

## பெருங்கல் சின்ன இருப்பிடங்கள்

மேலே குறிப்பிட்ட பல்வேறு பெருங்கல் சின்ன வகைகளில் சில தமிழ்நாட்டின் எல்லாப் பகுதிகளிலும், வேறுசில, ஒருசில இடங்களில் மட்டும் காணப்படுகின்றன. இவைகளை வட்டார வாரியாக நிரல் படுத்திச் சில குறிப்பிட்ட இடங்களின் சிறப்புத் தன்மைகளைப் பார்க்கலாம்.[16] கேரளப்பகுதிக்கே உரியதான குடைக்கல், தொப்பிக்கல் ஆகிய இரண்டும் கோயம்புத்தூர் மாவட்டத்தில் ஒருசில இடங்களில் காணப்படுகின்றன. இம் மாவட்டத்தில் கல்குவை, கல்கிடை, கல்திட்டை ஆகியன பெருவாரியான இடங்களில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. மொய்யாறு, பவானி, நொய்யல் ஆற்றுப் பள்ளத்தாக்குகளிலும் இவை காணப்படுகின்றன. கோபி, சத்திய மங்கலம், கோவை, பொள்ளாச்சி வட்டங்களிலும் இவை பெருவாரியாகக் காணப்படுகின்றன. இச் சின்னங்களில் மற்ற ஈமப்பொருள்களோடு ரோமானிய நாணயங்களும் ஆங்காங்குக் கிடைத்துள்ளன. கோயம்புத்தூரை ஒட்டிய நீலமலைத்தொடரில் 50 கிலோ

[16] இச்செய்திகளின் விரிவை பி. கெ. குருராஜராவ் அவர்களின் புத்தகத்தில் பார்க்கலாம். *The Megalithic Culture in South India*, pp. 63-136

மீட்டர் வட்டாரத்திற்கு எல்லா மலைகளிலும் ஆயிரக் கணக்கான கல்குவைகள் காணப்படுகின்றன. ஒவ் வொரு கல்குவையிலும் ஏறக்குறைய 20 மட்கலங்கள் இடப்பட்டுள்ளன. சில இடங்களில் கல்குவைகள் அடர்த்தியாகவும் காணப்படுகின்றன. இப்பகுதிகளில் காணப்படும் ஈமச்சின்னங்கள் திருப்பித்திருப்பிப் பல முறை ஈமப்பொருள்களை இடுவதற்காகப் பயன்பட்ட வையாகக் காணப்படுகின்றன. இந்த ஈமச் சின்னங் களில் குறிப்பிடத்தக்க மட்கலங்கள் விலங்கு உருவங்க ளோடு கூடிய மூடிகளை உடையவை. தோட நாட்டுப் பகுதியில் கம்பத்தி என்ற ஊரிலுள்ள மண்குவையில் ஏராளமான விலங்கு உருவம்கொண்ட மண் மூடிகள் கிடைத்துள்ளன. இவைகளில் ஏராளமாக வெண்கலப் பாத்திரங்களும் கிடைத்துள்ளன. பல இடங்களில் ரோமா னியப் பேரரசின் நாணயங்களும் கிடைத்துள்ளன.

தெற்கு மாவட்டங்களில் பெரும்பாலும் தாழிகள்தான் காணப்படுகின்றன. திருநெல்வேலி மாவட்டத்தில் பல ஊர்களில் பரந்த தாழிக்காடுகள் கண்டுபிடிக்கப்பட் டுள்ளன. இந்தத் தாழிகள் புதைக்கப்பட்டுள்ள இடங் களில் தரைக்குமேல் எந்த அறிகுறியும் காணப்படுவ தில்லை. சில இடங்களில் இயற்கையாக மண்அரிப்பு ஏற்படும் சமயங்களில் மட்டும் இந்தத் தாழிகள் வெளியே தெரிகின்றன. ஒரு சில இடங்களில் மட்டும் தாழிகள் புதைக்கப்பட்ட இடங்களின்மேல் கல்குவைகள் உள்ளன. குற்றாலத்தில் இப்படிப்பட்ட கல்குவை காணப்பட்டது. தென்காசியில் தாழிகளைக் கொண்ட மண்குவை உள்ளது. சங்கரன்கோவிலுக்குப் பக்கத்தில் வாசுதேவ நல்லூர் என்ற இடத்திலும், பாளையங்கோட்டைக்கும் கிழக்குக் கடலுக்குமிடையில் முப்பதுக்கும் மேற்பட்ட இடங்களிலும், காயல்பட்டினத்துக்கு அருகிலுள்ள பகுதி களிலும் தாழிக்காடுகள் அலெக்ஸாண்டர் ரே என்ப வரால் கண்டு பிடிக்கப்பட்டன. ஆதிச்சநல்லூர் தாழிக் காட்டு அகழ்வாய்வு தொல்லியல் ஆராய்ச்சியில் ஒரு சிறந்த இடத்தைப் பெற்றுள்ளதை யாவரும் அறிவர்.

ஆதிச்சநல்லூர்ச் சின்னங்கள், முதன்முதல் 1876-ல் பெர்லினைச் சேர்ந்த ஜேகர் என்பவர் பார்வையில் பட்டன. அவர் அவற்றுள் பலவற்றை அகழ்ந்து ஏராளமான தொல்பொருள்களைத் தன் நாட்டுக்குக் கொண்டு சென்றார். அவருக்குப் பின் பாரிஸ் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த லூயி லாபிக்யூ 1904-ல் அகழ்வு நடத்தினார். 1895-ல் தொடங்கி 1905 வரை இந்தியத் தொல்லியல் துறையைச் சேர்ந்த அலெக் ஸாண்டர் ரே மிகவும் விரிவான ஆய்வுகள் இங்கு நடத்திப் பல செய்திகளை வெளியிட்டார். இங்குள்ள பெருங்கல் இருப்பிடங்கள் நூறு ஏக்கர் பரப்பளவில் தாமிர பரணி ஆற்றின் தென்கரையில் ஒரு மேட்டு நிலத்தில் உள்ளன. அருகில் ஒரு சிறு குன்று உள்ளது. இங்குக் கிடைத்த சின்னங்கள் யாவுமே தாழிகள். தாழிகள் புதையுண்ட இடத்தில் தரைமட்டத்திற்கு மேல் எந்த அறிகுறிகளும் இல்லை. இந்தத் தாழிக்காட்டில் ஒவ்வோர் ஏக்கர் நிலத்திலும் ஓராயிரம் தாழிகள் இருப்பதாக ரே கூறுகிறார்.[17] ஆறடி இடைவெளிக்கு ஒன்றாக வரிசை வரிசையாக இவை புதைக்கப்பட்டுள்ளன. சில இடங் களில் ஒரு தாழி புதைக்கப்பட்ட இடத்திலேயே அதற்குச் சிறிது மேல் வேறு ஒரு தாழி புதைக்கப்பட்டிருக்கிறது. அதாவது பல ஆண்டுகள் இந்த இடுகாடு பயன் படுத்தப்பட்டுவந்ததாகத் தெரிகிறது.

நிலத்தைத் தோண்டித் தரைமட்டத்திலிருந்து கீழே மூன்றிலிருந்து 12 அடி ஆழம்வரையில் தாழிகள் புதைக் கப்பட்டுள்ளன. சில இன்னும் ஆழமாகப் புதைக்கப் பட்டுள்ளன. அடியில் பாறையுள்ள இடங்களில் பாறையே குடையப்பட்டுக் குழி உண்டாக்கப்பட்டது. பாறையில்லாத இடத்தில் கடினமான மண்ணினூடே

[17] Alexander Rea, *Catalogue of Pre-historic Antiquities from Adichanallur and Perumbair*, p. 3
& Alexander Rea, 'Pre historic Antiquities in Tinnevelly', *Archaeological Survey of India*, Annual Report, 1902–1903, p. 111

குழி வெட்டப்பட்டது. குழிகள் நான்கு அடியிலிருந்து ஒன்பது அடிவரை விட்டஅளவு கொண்டவையாக உள்ளன. இங்குப் புதைக்கப்பட்ட தாழிகள் பல்வேறு அளவுகளில் உள்ளன. இங்குச் செய்யப்பட்ட அகழ்வுகளில் ஏராளமான மட்கலங்களும், இரும்பு வெண்கல தங்கப்பொருள்களும் கிடைத்தன. ஆதிச்சநல்லூரைப் பற்றிக் குறிப்பிடவேண்டிய ஒரு செய்தி, இங்குச் சில பெரிய தாழிகளில் முழு எலும்புக் கூடுகள் கிடைத்துள்ளன என்பதே.

மதுரை மாவட்டத்தில் கழுகுமலை என்ற ஊரின் மலையடிவாரத்தில் பல நூற்றுக்கணக்கான தாழிகள் உள்ளன. மதுரைக்கு அருகில் விளாங்குடி, அனுப்பானடி, பரவை முதலான இடங்களில் தாழிக் காடுகள் உள்ளன. கோடைக்கானலிலும் பழனிமலைக் குன்றுகளிலும் பல கல்திட்டைகள் காணப்படுகின்றன. கோடைக்கானலுக்குக் கீழே 3,500 அடி உயரத்தில் அரசிப்பாறை என்ற இடத்தில் கல்திட்டைகள் கும்பல் கும்பலாகச் சுற்றிலும் கல்சுவர்களைக் கொண்டுள்ளன. இம்மலை வட்டாரத்தில் ஒருசில பகுதிகளில் ஊரிருக்கைகளைப்போல் தோற்றம் அளிக்கும் கல்மதில்களைக் கொண்ட இடங்கள் உள்ளன. ஆனால் இந்த 'ஊர்களில்' இப்பொழுது யாரும் வாழவில்லை. மதுரை மாவட்டத்தை ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட ஒரு தொல்லியல் ஆய்வாளரின் கருத்துப்படி இம்மாவட்டத்தில் எல்லா ஊர்களிலும் ஒரு தாழி இருப்பிடம் காணப்படுவதாகத் தெரிகிறது. இந்தத் தாழிக்காடுகள் ஊர்களுக்கு வெளியில் சவக்காடு என்ற பெயரோடு உள்ளன.[18] முதுமக்கள் தாழி என்றும் இவற்றை வழங்குகிறார்கள்.

புதுக்கோட்டைப் பகுதியில் குரங்குப்பட்டடை, மதமதக்கத்தாழி, பாண்டவர் குழி என்ற பெயர்களோடு

---

[18] Raman, K. V., 'Distribution of Culture-Traits in the Pre-and Proto-historic Times in Madurai Region', *Aaraaichi*, Vol. I, Pt. 4 (July 1970), p. 505

பெருங்கல் சின்னங்கள் நிறையக் காணப்படுகின்றன. கல்பதுக்கைகளே (அல்லது கல்திட்டைகளே) குரங்குப் பட்டடை என்ற பெயர் கொண்டுள்ளன. கே. ஆர். சீனிவாசன் கருத்துப்படி குரக்குப்படை என்பதே திரிந்து இப்பொழுது குரங்குப்பட்டடை என்று வழங்கு கிறது.[19] குரக்குப்படை என்றால் நிலத்துக்குள் தாழ் வாக இறக்கியிட்ட படை (அல்லது பிணம்) என்று அவர் பொருள் கொள்கிறார். முதுமக்கள் தாழி என்பதே மருவி மதமதக்கத்தாழி என்று வழங்குகிறது. பாண்டவக் குழி என்பதைப் பாண்டவர்கள் குழி என்று எடுத்துக் கொண்டு இங்கே உள்ள இடங்களில் பல, பஞ்சபாண்ட வர்கள் வந்து தங்கிய இடங்கள் என்று இவ்வட்டார மக்கள் நினைக்கிறார்கள். ஆனால் மட்பாண்டங்களைக் கொண்ட குழிகள் என்ற வகையில் இவைகள் பாண்டக் குழிகள் என்று அழைக்கப்பட்டு, பின்பு பாண்டவக் குழிகள் என்று பெயர் பெற்றிருக்கலாம். ஆக இந்தப் பகுதியில் கல்பதுக்கைகள், தாழிகள் ஆகிய இரண்டு முக்கியமான ஈமச் சின்னங்களும் கிடைக்கின்றன என்று சொல்லலாம்.

சித்தன்னவாசல், ஆரணிப்பட்டி, சூரந்தப்பட்டி, தச்சன்பட்டி, தொடையூர், முத்துக்காடு, கலியப்பட்டி, களக்குடிப்பட்டி, திருப்பூர் ஆகிய ஊர்களில் உள்ள அறுபதுக்கும் மேற்பட்ட கல்திட்டைகள் அகழ்வு செய்யப்பட்டுள்ளன. இங்குக் காணப்படும் கல்திட்டை இப்பகுதிக்கே உரிய சிறப்பான ஒன்றாகும். மற்ற இடங்களைப்போல் அல்லாது இங்கே இவை நடுவிலுள்ள பெரிய அறையோடு இன்னொரு சிறு கூடம் போன்ற வெளி அறையையும் கொண்டிருக்கின்றன. இந்த வெளியறை நடு அறைக்குக் கிழக்குப் பகுதியில் தெற்குப் பாதியில் பெரும்பாலும் காணப்படுகின்றன. தாயினிப்பட்டி என்ற ஊரில் மட்டும் இது மேற்குப்

[19] Srinivasan, K. R., 'The Megalithic Burials and urn-fields of South India in the Light of Tamil Literature and Tradition' *Ancient India*, No. 2 (1946), pp. 9 & 10

பகுதியில் இருக்கிறது. இந்த வெளியறையும் நடு அறையும் சேரும் பக்கக்கல்லில் ஒரு இடுதுளை இவ்விரு பகுதிகளையும் இணைக்கிறது. நடு அறையில் கிழக்கு மேற்காக ஒரு பிரிப்புச்சுவர் (பலகைக்கல்) அறையை இரு பகுதிகளாகப் பிரிக்கின்றது. இந்த இரண்டு அறைப்பகுதிகளில் வெளி அறையைவிட்டு ஒதுங்கியுள்ள அறைப்பகுதி (அதாவது வடக்குப்பாதி) மேலே ஒன்றும் கீழே ஒன்றுமாக இரண்டு அறைகளாக ஒரு பலகைக்கல்லால் பிரிக்கப்பட்டுள்ளது. இந்த இரண்டு அறைகளுக்குள்ளும் செல்லுமாறு பலகைக் கல்லில் இடுதுளைகள் மேலே ஒன்றும் கீழே ஒன்றுமாக வெட்டப்பட்டுள்ளன. கடைசியாக இந்தச் சின்னத்தைச் சுற்றிலும் ஒரு கல்வட்டம் அதாவது கல்கிடை எல்லா இடங்களிலும் காணப்படுகிறது. ஒரு கல்குவையும் தரைக்குமேல் காணப்படுகிறது. கல்பதுக்கைகளும் தாழிகளும் ஒருசேரப் பல இடங்களில் இவ்வட்டாரத்தில் காணப்படுகின்றன. ஆனால் இந்தப் பகுதியில் எங்கேயும் ஈமத் தொட்டிகளைக் கொண்ட கல்பதுக்கைகள் காணப் படவில்லை. பெரும்பாலும் எல்லாக் கல்பதுக்கைகளிலும் நடுவில் தாழிகள்தான் காணப்படுகின்றன. புல்வயல் என்ற காட்டில் இரண்டு முழு எலும்புக்கூடுகளைக் கொண்ட தாழிகள் காணப்பட்டன. இவ்வெலும்புக் கூடுகள் ஒவ்வொன்றும் உட்கார்ந்த நிலையில் வலது கையில் குறுவாளைப் பிடித்துக்கொண்டும் இடது கையைத் தொடை மீது வைத்துக்கொண்டும் தோற்றம் அளித்தன.

திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர் மாவட்டங்களில் சில இடங்களில் பெருங்கல் சின்னங்கள் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. திருச்சிக்கு வடக்கில் 60 கிலோ மீட்டர் தூரத்தில் பெருமாள்பாளையம் என்ற ஊரில் ஒரு பெரிய கல்குவை இருப்பிடம் கண்டுபிடிக்கப்பட்டது. கரூர்—திண்டுக்கல் சாலையில் மலைக்கோவிலூர் என்ற ஊரில் கல்குவைகளையும், கல்திட்டைகளையும் கொண்ட ஒரு பெரிய ஈமக்காடு உள்ளது.

சேலம், தர்மபுரி மாவட்டங்களிலும் இதுபோன்று பல கல்திட்டை இருப்பிடங்கள் உள்ளன. தென்னார்க் காடு, வடார்க்காடு மாவட்டங்கள் இன்னும் அவ்வள வாகத் துருவி ஆயப்படவில்லை.

தமிழ்நாட்டில் மிக முறையான ஆய்வுக்குள்ளான பெருங்கல் சின்னங்கள் செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ளன. இம்மாவட்டத்தில் இரண்டு உட்பிரிவுகள் காணப்படுகின்றன. லேட்டரைட் பாறைகள் உள்ள வடக்குப் பகுதிக்கும், கருங்கல் பாறைகள் உள்ள தெற்குப் பகுதிக்கும் சில வேறுபாடுகள் காணப்படு கின்றன. லேட்டரைட் பாறை மிகவும் எளிமையாகக் கல்தச்சு வேலைக்குப் பயன்படுமாகையால் இப்பகுதியில் பெரும்பாலான இடங்களில் கல்பதுக்கைகளே காணப் படுகின்றன. மாறாக, தெற்குப் பகுதியில் கல்திட்டை களே அதிகமாக உள்ளன. ஏனென்றால் கருங்கல் பாறையை எளிமையாக உடைக்க முடியாது. வடக்குப் பகுதியில் அமிர்தமங்கலம் என்ற ஊரிலும், தெற்குப் பகுதியில் பெரும்பாயிர், சானூர், குன்னத்தூர், ஆகிய இடங்களிலும் அகழ்வாய்வுகள் நடத்தப்பட் டுள்ளன. இங்கே சில இடங்களில் தாழிகளும், பெரும் பாலான இடங்களில் ஈமத் தொட்டிகளும் கல்லறைகளுக் குள்ளே காணப்படுகின்றன.

மேலே கொடுத்துள்ள விளக்கத்திலிருந்து தமிழ் நாட்டில் ஏறக்குறைய எல்லா வட்டாரங்களிலும் பெருங்கல் சின்னங்கள் உள்ளன என்பதை அறியலாம். அதாவது இக்காலத்துத் தமிழ்நாடு முழுவதும் பரவலாக மக்கள் வாழ்ந்தார்கள் என்று கொள்ளவேண்டும். பழைய, புதிய கற்காலங்களில் ஒருசில பகுதிகளில் மட்டும் மக்கள் வாழ்ந்துவந்தார்கள் என்று இதற்கு முந்திய இயல்களில் தெளிவாக்கப்பட்டுள்ளது.

## பெருங்கல் சின்னங்களின் தன்மைகள்

அடிப்படையில் இப்பெருங்கல் சின்னங்கள் ஈமச் சின்னங்கள் என்று பார்த்தோம். ஈமச் சின்னங்கள்

என்று இவைகளைக் குறிப்பிடக் காரணம் இவைகள் இறந்த மனிதர்களின் எலும்புகளைக் கொண்டிருப்பதே யாகும். எல்லா வகையான ஈமச் சின்னங்களிலும் ஒரு சில மனித எலும்புகள் காணப்படுகின்றன. மேலே குறிப்பிட்டதைப் போல ஒருசில இடங்களில் மட்டும் இறந்த மனிதர்களின் முழு உடலும் (அல்லது எலும்புக் கூடும்) புதைக்கப்பட்டது. பெரும்பாலான இடங்களில் ஒருசில எலும்புகள் மட்டும் பொறுக்கி எடுக்கப்பட்டு எந்த உறுப்படையாளமும் இல்லாமல் கும்பலாக ஈமக் குழிக்குள்ளோ, தாழிகளுக்குள்ளோ இடப்பட்டன. இந்த எலும்புகள் எரிக்கப்பட்டன என்பதற்கு எந்த இடத்திலும் தடயங்கள் இல்லை. பிணத்தைத் திறந்த வெளியில் சிறிது காலம் விட்டுவிட்டுப் பிணத்திலிருந்து சதைகள் மறைந்து வெறும் எலும்புகள் மட்டும் எஞ்சிய நிலையில் அந்தப் பிணத்திலிருந்து எலும்புகள் பொறுக்கியெடுக்கப்பட்டன என்று தெரிகிறது.[20]

முதன்முதலாக ஈமச் சின்னங்களை ஊர் இருக்கைகளிலிருந்து தள்ளித் தனியான ஓரிடத்தில் புதைக்கும் வழக்கம் தமிழ்நாட்டைப் பொறுத்தவரையில் (தென்னிந்தியாவைப் பொறுத்தவரையில் என்றே சொல்லலாம்) பெருங்கல் காலத்திலேயே வழக்குக்கு வந்தது. இதற்கு முன்னால் தமிழ்நாட்டிலிருந்த புதிய கற்கால மக்கள் இறந்தவர்களைத் தங்களுடைய வீடுகளுக்குள்ளோ அல்லது மிக அண்மையிலோ புதைத்தார்கள் என்று பார்த்தோம். ஆனால் பெருங்கல் ஈமச் சின்னங்கள் மக்கள் வாழ்ந்த இடங்களுக்குப் பக்கத்தில் எந்த இடத்திலும் அமைக்கப்படவில்லை. பெரும்பாலும் ஊர் இருக்கைகளுக்குத் தெற்கே அல்லது தென்மேற்கே சிறிது தூரம் தள்ளி மலைச்சரிவுகளில் அல்லது வறண்ட மேட்டுப் பகுதிகளில் இச்சின்னங்கள் காணப்படுகின்றன.[21] அதாவது விளைச்சலுக்கு ஏற்ற இடங்கள்

20 Gururaja Rao, B. K., *Op. cit.*, pp. 284-285

21 Alexander Rea, 'Pre-historic Antiquities in Tinnevelly' *Archaeological Survey of India, Annual Report*, 1902-1903, p. 112

இடுகாடுகளாகப் பயன்படுத்தப்படவில்லை. மலைச்சரிவு களிலும் மேட்டுப் பகுதிகளிலுமே இடுகாடுகள் அமைக்கப்பட்டன. இன்றொரு குறிப்பிடத்தக்க செய்தி, இச்சின்னங்களைப் பற்றி நன்கு ஆய்வு நடத்திய தொல்லியல் வல்லுநர்கள் சுட்டிக்காட்டுவது போன்று பல இடங்களில் இச்சின்னங்கள் அமைக்கப்பட்ட இடங் களுக்கு வெகு அருகில் நீர்ப்பாசனத்திற்கேற்ற ஏரிகள் அல்லது குளங்கள் உள்ளன என்பது. மலைச் சரிவு களிலிருந்து வரக்கூடிய நீர் இந்த ஏரிகளில் தேக்கப் பட்டது. ஆகவே இங்கே வாழ்ந்த மக்கள் வேளாண் மைக்கு உகந்த இடங்களையே நாடிக் குடியேறினார்கள் என்று சொல்ல வேண்டும்.[22]

பெரும்பாலான பெருங்கல் ஈமச் சின்னங்களில் புதைக்கப்பட்ட எலும்புகள் ஒரு தனி ஆளின் எலும்பு களாகக் காணப்பட்டாலும் சிற்சில இடங்களில் இரண்டு பேருடைய எலும்புகளும் காணப்படுகின்றன. ஒரு வேளை, ஒரே சமயத்தில் இறந்த இருவரின் எலும்புகள் அல்லது சிறிது காலஇடைவெளி விட்டு இறந்த இருவரின் எலும்புகள் சேர்த்து வைக்கப்பட்டிருந்து ஒன்றாக ஒரே சமயத்தில் புதைக்கப்பட்டன என்று இந்த நிலையைக் கொள்ளலாம். மேற்கு ஐரோப்பிய நாடுகளி லுள்ள பெருங்கல் சின்னங்களைப்போல் இங்கு ஒரே சின்னத்தில் பலருடைய எலும்புகள் தொடர்ச்சியாகப் பல ஆண்டுகள் புதைக்கப்பட்டன என்று சொல்ல முடியாது.

## ஈமப்பொருள்கள்

### மட்கலம்

பெருங்கல் சின்னங்களை உருவாக்கிய மக்களைப் பற்றி அறிவதற்குப் பெரும்பாலும் இச்சின்னங்களி

---

[22] Banerjee, N. R., 'The Megalithic Problem of Chingleput in the Light of Recent Exploration', *Ancient India*, No. 12 (1956), pp. 23-25

னுள்ளே காணப்படும் ஈமப் பொருள்கள்தான் பெரிதும் உதவுகின்றன. இச்சின்னங்களை உருவாக்கிய மக்கள் வாழ்ந்த இடங்கள் என்று உறுதியாகச் சொல்லத்தக்க பகுதிகள் மிகச் சிலவே இதுவரை அகழ்வாய்வு செய்யப் பட்டுள்ளன. அதனால் ஈமப் பொருள்களையே நன்கு அணுகிப் பார்த்து அவர்களுடைய வாழ்க்கைநிலையை உணரவேண்டியிருக்கிறது. இச் சின்னங்களிடையே காணப்படும் ஈமப் பொருள்களுள் குறிப்பிடப்பட வேண்டியவை எலும்புகள், மட்கலங்கள், இரும்புப் பொருள்கள், வேறு உலோகங்களால் செய்யப்பட்ட பொருள்கள், அணிமணிகள் ஆகியவை. இச்சின்னங்கள் எல்லாவற்றிலுமே தவறாமல் மட்கலங்கள் அகப்படு கின்றன. ஏராளமான மட்கலங்கள் (ஒளிப்படம் 21-34) அகழ்வாய்வு மூலமாகவும், தற்செயலாகவும் இவைகளி லிருந்து எடுக்கப்பட்டுள்ளன.

மட்கலங்களில் நான்கு வகைகள் காணப்படு கின்றன. கறுப்பு-சிவப்பு மட்கலம், கறுப்பு மட்கலம், சிவப்பு மட்கலம், செம்பழுப்புப்பூச்சு மட்கலம்[23] ஆகிய நான்கு வகைகள் பெருங்கல் சின்னங்களில் பெரும் பாலும் காணப்படுகின்றன. இவற்றுள் கறுப்பு-சிவப்பு மட்கலம் தென்னிந்தியா முழுவதும், வடக்கே நாகபுரியி லிருந்து தெற்கே குமரிமுனைவரை ஒரே வகையாகக் காணப்படுகின்றது. ஆனால், நீலமலைப் பகுதிகளில் மட்டும் இம்மட்கல வகை அறவே கிடைக்கவில்லை. இவ் வகையிலுள்ள கலங்கள் உள் பகுதியும் வெளியே கழுத் துப் பகுதியும் கறுப்பாகவும், மற்ற வெளிப்பகுதி முழு வதும் சிவப்பாகவும் இருப்பதால் இவ்வகையைக் கறுப்பு-சிவப்பு மட்கலம் என்று அழைக்கிறார்கள். சூளையிலிட்டுச் சுட்டபோது ஒரு தனிப்பட்ட சுடுமுறையைக் கையாண்ட தன் காரணமாக இந்த நிறங்களை இக்கலங்கள் பெற்றன. கலங்களைக் குப்புறக் கவிழ்த்துவைத்து உட்பகுதியிலும் கழுத்துப் பகுதியிலும் காற்றுப் படாமலும், வெளிப் பகுதி காற்றுப் படும்படியும் சுட்டால் இத்தோற்றத்தைக்

---

[23] Russet coated ware

கலங்கள் பெறும். இவ்வகையில் காணப்படும் மட்கலங்கள் யாவுமே உருவில் சிறியவை. யாவுமே சமையலுக்குப் பயன்படக்கூடிய கலங்கள். இவைகளின் ஓடுகள் மெல்லியதாகக் காணப்படுகின்றன. சக்கரத்தில் வைத்து இவைகள் செய்யப்பட்டன. வெளிப்புறத்தில் உப்பைக்கொண்டு மெருகேற்றப்பட்டன. அதாவது பானைகள் சூளையில் இருக்கும்போது ஓட்டின்மீது சிறிது உப்பைத் தூவிவிட்டால் உப்பு உருகி ஆவியாகும்போது புறப்பகுதி ஒரு பளபளப்பைப் பெறுகிறது. இம்மெருகேற்று முறையில் ஆங்காங்குச் சிறிது வெடிப்புகளும் உண்டாகும். ஒருசில இடங்களில் வெளிப்பகுதியில் சிறிது வண்ணம் பூசப்பட்டதாகத் தெரிகிறது. வளைந்தும் மடிந்தும் உள்ள இணைஇணையான வண்ணக் கோடுகள் காணப்படுகின்றன. சுண்ணாம்பைக் கொண்டு கோடுகள் தீட்டப்பட்ட பிறகு அதற்கு மேல் ஒரு மெல்லிய செங்காவிப்பூச்சு கொடுக்கப்பட்டது. இச்செங்காவிப் பூச்சினூடே பார்க்கும்போது உள்ளேயுள்ள வெள்ளைக் கோடுகள் மஞ்சளாக அல்லது செம்பழுப்பாகக் காணப்படுகின்றன. சில இடங்களில் செங்காவிப்பூச்சு இல்லாமலேயே வெறும் வெண்ணிறக் கோடுகளே தீட்டப்பட்டுள்ளன. இக்கறுப்பு–சிவப்பு மட்கலங்களில் வெளிப்புறத்தே காணப்படும் பளபளப்பு அதிக வெப்பத்தையும் தாங்கக் கூடியதாக இருக்கிறது. இந்த மட்கலங்கள் குறைந்த வெப்ப நிலையில் சுடப்பட்டு உருவாக்கப்பட்டதன் காரணமாகப் பல நாட்கள் ஈரப்பதம் படும்படியாக விட்டுவிட்டால் பொரிந்து போகக்கூடிய தன்மையையும் பெற்றுள்ளன.

கறுப்பு–சிவப்பு மட்கல வகையில் காணப்படும் கலங்கள் அல்லது பாண்டங்கள் பல உருவங்களில் உள்ளன. மண்டைகள், தட்டுகள், மூடிகள் ஆகியன நிறைய உள்ளன. இவைகளில் பல அளவுகளும் உருவங்களும் காணப்படுகின்றன. மண்டைகளை[24], உருவங்களை வைத்துக் கிண்ணம், சட்டி, சருவச்சட்டி, போகிணி

[24] Bowls

என்று பல பெயர்களில் அழைக்கலாம். சில மண்டைகள் அடிப்பகுதியில் வட்டமாகக் காணப்படுகின்றன. சில தட்டையான அடிப்பகுதியைக் கொண்டுள்ளன. வேறு சில கூம்பிய அடிப்பகுதியைப் பெற்றுள்ளன; பக்கப் பகுதிகள் நீண்டு அல்லது வெளியே தள்ளிக்கொண்டும் பலவகையான விளிம்புகளைக்கொண்டும் உள்ளன. கழுத் துப்பகுதியில் ஒரு மடிப்பும் பலவற்றில் காணப்படு கின்றன. மூடிகள் புனலைப்போன்ற உருவங்களில் உள்ளன. இவைகள் அல்லாமல் சில சாடி உருவங்களும், கறுப்பு-சிவப்பு மட்கலங்களில் கிடைக்கின்றன. கறுப்பு மட்கலத்திலும், ஏறக்குறைய இதே உருவங்கள் தென்படு கின்றன. கறுப்பு-சிவப்பு மட்கலத்திற்கும், கறுப்பு மட்கலத்திற்கும் உள்ள வேறுபாடு நிறம் மட்டுமே. கறுப்பு மட்கலத்தில் உள் பகுதி, வெளிப்பகுதி முழுவதும் கறுப்பாகத் தோற்றமளிக்கும். எல்லாப் பகுதிகளிலும் காற்றுப்படும்படியாக எரித்தால் இத் தகைய நிறம் கிடைக்கும். இளம்பழுப்பு மட்கலத் திற்கும், கறுப்பு-சிவப்பு, கறுப்பு மட்கலங்களுக்கும் அவ்வளவாக வேறுபாடு இல்லை. இளம்பழுப்பு மட்கலத் தில் உடலின் முழு நிறமும் சிவப்பாக உள்ளது; வெளிப் புறத்தே செங்காவிப் பூச்சினூடே சுண்ண வரியோவி யங்கள் தீட்டப்பட்டுள்ளன. கலங்கள் யாவுமே சிறிய உருவங்களைக் கொண்டவை.

இவைகளுக்கு மாறாக, சிவப்பு மட்கலத்தில் பெரும் பாலான கலங்கள் பெரிய உருவங்களைக் கொண்டவை. இவைகளின் ஓடுகள் தடித்தும் முரமுரப்பாகவும் உள்ளன. இவைகள் சரியாக சுடப்படாமலும் மெரு கேற்றப்படாமலும் உள்ளன. ஈமப்பொருள்களை இடு வதற்காகப் பயன்படுத்தப்பட்ட பெரிய தாழிகள், வீடு களில் தானியங்களைச் சேர்த்து வைக்கப் பயன்படுத்திய தாழிகள், சாடிகள், உருண்டையான பெரிய சட்டிகள், ஈமத்தொட்டிகள் ஆகியன சிவப்பு மட்கலங்களாகவே உள்ளன. உருண்டையான அல்லது பூந்தொட்டிகளைப் போன்ற மூடிகளும் இவ்வகையைச் சேர்ந்தவை.

சட்டிகள் வைப்பதற்குப் பயன்படுத்தப்பட்ட பிரிமணை களும் (கலவடைகளும்) இவ்வகையில் காணப்படு கின்றன. பெரிய சட்டிகளுக்கு அடிப்பகுதியில் மூன்று கால்கள் உள்ளன. மேலே கழுத்துப் பகுதியில் திட்டாக மண்ணை அப்பிச் செய்யப்பட்ட சித்திர வேலைப்பாடும், குச்சிகளைக் கொண்டு புள்ளிகள் குத்திச் செய்யப்பட்ட சித்திர வேலைப்பாடும் ஓரளவு இம்மட்கல வகையில் காணப்படுகின்றன. நீலமலைப் பகுதியில் முழுக்க முழுக்க அவ்வளவாக நேர்த்தியற்ற இந்தச் சிவப்பு மட்கல வகையே கிடைக்கிறது.

இம்மட்கலங்கள் பலவகையான உருவங்களில் காணப்படுவதை வைத்து இவைகளைப் பயன்படுத்திய மக்கள் வேறுபட்ட பொருளாதார வாழ்க்கையை மேற் கொண்டிருந்தார்கள் என்று சொல்ல முடியாது. கலங்கள் பயன்பட்ட தொழில்களை வைத்து இந்த உருவங்கள் மாறுபட்டன என்றே சொல்லலாம். சமையற்கட்டுக்குப் பயன்படுத்தப்பட்ட பானை வகைகள் சிறுத்தும், உறுதி யாகவும், நேர்த்தியாகவும் உள்ளன. மாறாக, தானியங் களைச் சேர்த்து வைப்பதற்கும், நீர் ஊற்றி வைப்பதற் கும், ஈமப்பொருள்களைப் புதைப்பதற்கும் பயன்பட்ட பானை வகைகள் பெரிய உருவங்களில் உள்ளன.

## இரும்புப் பொருள்கள்

மட்கலங்களுக்கு அடுத்தபடியாக ஈமச் சின்னங் களில் காணப்படும் பொருள்கள் இரும்புப் பொருள்க ளாகும். இரும்பினால் செய்யப்பட்ட ஆயுதங்கள், கருவிகள் முதலானவை மிகுதியான எண்ணிக்கையில் பல இடங்களில் எடுக்கப்பட்டுள்ளன (வரைபடம் 18 & 19). கறுப்பு–சிவப்பு மட்கலத்தைப் போலவே இந்த இரும்புப் பொருள்களிலும் தென்னிந்தியா முழுவதும் நிறைய ஒற்றுமைக் கூறுகள் புலப்படுகின்றன. பல இடங்களில் முன் கொண்ட அம்புமுனைகள், ஈட்டிகள், வேல்கள், பட்டாக்கத்திகள், வாள்கள், குறுவாள்கள் ஆகிய ஆயுதங்கள் கிடைத்துள்ளன. சில இடங்களில் ஒரே சின்னத்தினுள்ளேயே பல ஆயுதங்கள் கிடைத்

துள்ளன. எடுத்துக்காட்டாகப் பையம்பள்ளியில் அகழ்ந் தெடுக்கப்பட்ட ஒரு கல்வட்டத்தினுள்ளே ஈமத்தொட்டி யைச் சுற்றி 18 அம்புமுனைகள் எடுக்கப்பட்டன.[25] வேல் களில் திரிசூலத்தைப் போலவும், சூலத்தைப் போலவும் உருவம் கொண்டவை குறிப்பிடத் தக்கவை. இவை ஆதிச்சநல்லூரிலும் வேறு பல இடங்களிலும் கிடைத் துள்ளன. வேல்கள், ஈட்டிகள், அம்புமுனைகள் ஆகியன யாவுமே மரத் தடிகளின் நுனியில் பொருத்துவதற்காகத் துளையுள்ள கழுத்துப் பகுதியைக் கொண்டுள்ளன.

ஏராளமான வேளாண்மைக் கருவிகள் இரும்பினால் செய்யப்பட்டன. மண்வெட்டிகள், கொத்துகள், பட்டை யான கோடரிகள், கடப்பாறைகள், அரிவாள்கள், கருக்கரிவாள்கள் ஆகியன குறிப்பிடத்தக்கவை. பிடி களில் பொருத்துவதற்காக மண்வெட்டிகளின் ஒரு முனை யில் தகடு உட்புறம் மேல்நோக்கி மடக்கப்பட்டுள்ளது. கோடரிகள் இன்று பெருவழக்கில் உள்ளவைகளைப் போலக் கைப்பிடி வளையங்களைப் பெற்றனவாக இல்லை. கைப்பிடிகளில் பொருத்தி இறுக்க உதவும் வகையில் இவைகள் குறுக்குப் பட்டைகளைக் கொண்டுள்ளன. கதிர்களை அறுக்கப் பயன்படும் கருக்கரிவாள்கள் மிகுந்த எண்ணிக்கையில் உள்ளன. இவையல்லாமல் பலவகையான பேனாக்கத்திகள், உளிகள், வாய்ச்சிகள், ஆப்புகள், ஆணிகள், தூண்டில் முள்கள், தகடுகள், குதிரைக் கடிவாளப் பொருள்கள், தொங்கு விளக்குகள், பலமுனை விளக்குக் கொக்கிகள், முக்காலிகள் முதலான பல பொருள்கள் கிடைத்துள்ளன. ஆகவே இக்கால மக்கள் தங்களுடைய எல்லாத் தொழில்களுக்கும் இரும் பைப் பயன்படுத்தினார்கள் என்று சொல்லலாம். இவர்க ளுடைய பெரு முன்னேற்றத்துக்குக் காரணமே இவ் விரும்புத்தொழில் ஆகும்.

### வெண்கல, தங்கப் பொருள்கள்

பெருங்கல் கால மக்கள் வெண்கலத்தை மிகக் குறை வாகவே பயன்படுத்தினார்கள். ஆதிச்சநல்லூர், நீலமலை

[25] *Indian Archaeology, A Review*, 1967-68, p. 29

ஆகிய இடங்களிலுள்ள பெருங்கல் சின்னங்களில் மட்டுமே ஓரளவு வெண்கலப் பொருள்கள் கிடைத்துள்ளன. ஆதிச்சநல்லூரில் மண்டை, சாடி, குவளை ஆகிய வெண்கலப் பாத்திரங்களும், வேலைப்பாடுகள் கொண்ட பிரிமணைகளும், மூடிகளும், மணிகள் கொண்ட சிலம்பு பன்னீர்க் குழல்கள் வளையல்கள் கழுத்தணிகள் ஆகியவைகளும் கண்டெடுக்கப்பட்டன. இவைகளில் பிரிமணைகளும் மூடிகளும் குறிப்பிடத்தக்கவை. சுருக்கமாகச் சொன்னால் பிரிமணைகள் ஒரு கம்பியின்மேல் ஏற்றப்பட்ட சிறிதே குழிவான தட்டினைக் கொண்டவை. கம்பியின் அடிப்பகுதி ஒரு கனத்த தட்டில் பொருத்தப்பட்டுள்ளது. இத்தட்டுக்குமேல் கம்பியைச் சுற்றி ஆடு, புலி, எருமை போன்ற விலங்குகளின் உருவங்கள் பொருத்தப்பட்டுள்ளன. இவ்விலங்குப் பொம்மைகள் ஓரளவு அழகுணர்வோடு செய்யப்பட்டுள்ளன. இப்பிரிமணைத் தட்டுகளைப் போலவே மூடிகளும் ஓரளவு சித்திர வேலைப்பாடுகள் கொண்டவை. மூடிகள் ஒரு கனமான அடித்தட்டையும் அதில் பொருத்தப்பட்ட கம்பிக் கவடு அல்லது கிளையையும் பெற்றுள்ளன. கம்பிகளின் நுனிகளில் பந்துகள் (கனிகள் !) போன்ற உருவங்களோ, இலைகள் போன்ற உருவங்களோ உள்ளன. அடித்தகட்டை ஒட்டியோ சில கம்பிகள் மீதோ சேவல், மான் போன்ற உருவங்கள் நிற்கின்றன. இம்மூடிகளைக் கொண்டு மேலே குறிப்பிட்ட பிரிமணைமீது வைக்கப்பட்ட சிறு கலயங்கள் ஏதாவது சடங்குகளுக்காகப் பயன்படுத்தப்பட்டிருக்கலாம்; அல்லது அழகுக்காக நிறுத்தி வைக்கப்பட்டிருக்கலாம்.

நீலமலையில் கிடைத்த வெண்கலப் பொருள்கள் சிறந்த வேலைப்பாடு கொண்டவை. பாத்திரங்கள் வார்க்கப்பட்டவை அல்ல. தகடுகளைத் தட்டிச் செய்யப்பட்டவை. ஆதிச்சநல்லூர்ப் பொருள்களைவிட இவை வேலைநேர்த்தி கொண்டவை. இப் பொருள்கள் நடுநிலக் கடல் பகுதிகளில் கிடைக்கும் ரோமானியப் பொருள்களைப் பெரிதும் ஒத்துள்ளன. நீலமலைப் பகுதியில்

கிடைக்கும் மற்றப் பொருள்கள் இவ்வளவு சிறந்த வேலைப்பாடுகளைப் பெற்றிருக்கவில்லை. ஆகவே இவை வாணிகம் மூலம் நீலமலைப் பகுதியை எட்டியிருக்கக் கூடும்.[26] மாறாக, ஆதிச்சநல்லூர்ப் பொருள்கள் உள் நாட்டுக் கன்னாலேயே செய்யப்பட்டவை; அவ்வளவு கலை நேர்த்தியும் வேலை நேர்த்தியும் கொண்டவை அல்ல. ஆதிச்சநல்லூரில் கிடைக்கும் விலங்கு உருவங்கள் கொண்ட மூடிகள் நீலமலையிலும் கிடைக்கின்றன. நீலமலையில் இவை மண்ணினால் செய்யப்பட்டுள்ளன. அதாவது நீலமலையிலேயே இவை செய்யப்பட்டனவாதல் வேண்டும்.

தங்கம் மிகக் குறைவாகவே பெருங்கல் சின்னங்களில் காணப்படுகிறது. இலைகள் உருவங்களில் தங்கத் தகடுகள் சில ஆதிச்சநல்லூரில் கிடைத்தன. இத் தகடுகளின் இரு முனைகளிலும் கயிறு கட்டத் துளைகள் அல்லது கம்பிகள் உள்ளன. இவைகளை முடிகள் (மகுடம்) என்ற வகையில் அக்கால மக்கள் நெற்றிப் பட்டங்களாகப் பயன்படுத்தியிருக்கலாம். இந்தத் தங்கத் தகடுகள் கொண்ட தாழிகள் மற்றத் தாழிகளைக் காட்டிலும் அதிக ஆழத்தில் புதைக்கப்பட்டிருந்தன என்பதை இங்குக் குறிப்பிடவேண்டும். பையம்பள்ளியில் பொற்கொல்லர் நகை செய்யப் பயன்படுத்திய ஒரு வார்ப்புக்கல் கிடைத்துள்ளது.

## பிற பொருள்கள்

மட்கலம், இரும்பு, வெண்கலம், தங்கம் ஆகியவைகளைத் தவிர வேறு சில பொருள்களும் பெருங்கல் சின்னங்களிலிருந்து கிடைக்கின்றன. பலவகையான மணிகள் பரவலாக எங்கும் காணப்படுகின்றன. தங்கம் வெள்ளி செம்பு முதலான உலோகங்களைக் கொண்டும், சங்கைக் கொண்டும், கார்னீலியன் ஜாஸ்பர் அகேட் ஆனிக்ஸ் செர்பன்டைன் ஸ்டீடைட் லாபிஸ்லஜுலி

[26] Gururaja Rao, B. K., *Op. cit.*, p. 271

குவார்ட்ஜ் முதலான அரிய கல்வகைகளைக் கொண்டும், கண்ணாடியைக் கொண்டும் இம்மணிகள் செய்யப்பட்டுள்ளன (ஒளிப்படம் 35 & 36). பலவகையான உருவங்களில் கிடைக்கும் இவைகள் சில சித்திர வரைவுகளைக் கொண்டுள்ளன. நடுவில் சரடு கோப்பதற்காகத் துளைகளைப் பெற்றுள்ளன. இந்த மணிகளைக் கோத்துச் செய்யப்பட்ட பல்வேறு நகைகள் இக்கால மக்களால் அழகுக்காகப் பயன்படுத்தப்பட்டிருக்கவேண்டும்.

மண்ணினால் காதுக் கம்மலைப் போன்று செய்யப்பட்ட பொருள்கள் சில ஆதிச்சநல்லூரில் கிடைத்தன. கண்ணாடி, பளிங்கு, சங்கு ஆகியவற்றால் செய்யப்பட்ட வளையல்கள் முதலான பொருள்களும் பல இடங்களில் கிடைத்துள்ளன. (ஒளிப்படம் 37 & 38). சுட்ட மண்ணினால் செய்யப்பட்ட பறவை உருவங்களும் விலங்குப் பொம்மைகளும் பையம்பள்ளி அகழ்வாய்வில் கிடைத்துள்ளன. பையம்பள்ளியில் எட்டு மூக்குகளைக் கொண்ட ஓர் அகல் விளக்கு கிடைத்துள்ளது.

கல்லைக்கொண்டு செய்யப்பட்ட பொருள்கள் சிலவும் பெருங்கல் கால மக்களால் பயன்படுத்தப்பட்டன (ஒளிப்படம் 39). புதிய கற்காலத்தில் பயன்படுத்தப்பட்ட கற்கோடரிகளைப் போன்றவை சில இக்காலச் சின்னங்களில் கிடைக்கின்றன. ஆனால் இவைகளைப் பெருங்கல் கால மக்கள் செய்து பயன்படுத்தினார்கள் என்பதை விடப் புதிய கற்கால மக்கள் விட்டுச்சென்ற கருவிகளை எடுத்துப் பயன்படுத்தினார்கள் என்பதே பொருந்தும். பெருங்கல் சின்னங்களில் காணப்படும் அம்மிக்கற்கள், குழவிகள், அரைக்கும் உருண்டைக்கற்கள் ஆகியன இக்கால மக்களாலேயே செய்யப்பட்டுப் பயன்படுத்தப் பட்டிருக்கக்கூடும்.

ஆதிச்சநல்லூர், பையம்பள்ளி, குன்னத்தூர் முதலான இடங்களில் நடத்திய அகழ்வாய்வுகள் மூலம் பெருங்கல் காலத்தில் பயிர்செய்யப்பட்ட தானியங்களின் எச்சங்கள் ஓரளவு கிடைத்துள்ளன. நெல், கொள், சோளம், கேழ்வரகு முதலான தானியங்கள் சில இடங்

களில் மக்கிய நிலையில் அகப்பட்டுள்ளன. கடைசியாக ஆதிச்சநல்லூரில் சில வெண்கலப் பாத்திரங்கள்மீது அப்பியபடி பருத்தித் துணியின் எச்சங்களும் காணப் பட்டன என்பதைக் குறிப்பிடவேண்டும்.

பெருங்கல் கால ஊரிருக்கைகள் என்று சொல்லக் கூடிய பழைய இடங்கள் மிகக் குறைவாகவே காணப்படு கின்றன. பெருங்கல் காலத்திற்குச் சமமான காலத்தில் வடஇந்தியாவில் கங்கைச்சமவெளியில் பெரிய கோட் டைக் கொத்தளங்களோடு நகரங்கள் கட்டப்பட்டன. அந்த நகரங்கள் இருந்து அழிந்துபோன மேடுகள் மிகப் பல வட நாட்டில் உள்ளன.[27] ஆனால் அப்படிப்பட்ட நகரங்கள் தமிழ்நாட்டில் பல இருந்தன என்று சொல் வதற்கு இதுவரைக்கும் தடயங்கள் கிடைக்கவில்லை.[28] மதுரை, உறையூர், காஞ்சிபுரம் ஆகிய நகரங்கள் இன்றும் உள்ளன என்பது உண்மையே. இப்போதைய நகரங்களுக்கு அடியில் பழைய நகரச் சின்னங்கள் உள்ளன என்றும் சொல்லலாம். இவைகளை விட்டு விட்டால் வேறு பெரிய நகரங்கள் இருந்ததற்கான சான்றுகள் இல்லை. அகழ்வு செய்யப்பட்ட ஒருசில இடங்களும் கட்டடச் சின்னங்களைப் பற்றிய சிறப்பான செய்தியைக் கொடுக்கின்றன என்று சொல்ல முடிய வில்லை.

திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் திருக்காம்புலியூர், அழகரை, தென்னார்க்காடு மாவட்டத்தில் செங்கமேடு, செங்கற்பட்டு மாவட்டத்தில் குன்னத்தூர் ஆகிய பெருங்கல் கால ஊரிருக்கைச் சின்னங்களை அகழ்ந்து பார்த்ததில் வீடுகளைப்பற்றி எதுவும் தெரியவில்லை. அண்மையில் அகழப்பட்ட பையம்பள்ளி (வடார்க்காடு மாவட்டம்) ஓரளவு வீட்டுச் சின்னங்களைப் புலப்படுத் தியது.[29]

---

27 Banerjee, N. R., *The Iron Age in India*, p. 200
28 *Ibid*, p. 209
29 *Indian Archaeology*, 1967-68, A Review, p. 27

பையம்பள்ளி வீடுகள் (உண்மையில் குடிசைகள்) தோற்றத்தில் வட்டம் அல்லது முட்டை வடிவமாக இருந்தன. வட்டமான வீடுகள் 1·5-லிருந்து 3 மீட்டர் வரை விட்ட அளவைக் கொண்டவையாகவும், முட்டை அல்லது வட்ட வீடுகள் நீளவாக்கில் 1·7-லிருந்து 4 மீட்டர் வரை விட்ட அளவைக் கொண்டவையாகவும் இருந்தன. சுற்றிலும் சுவரைத் தாங்க மரங்கள் நிறுத்தப்பட்டன. இம்மரங்கள் நடப்பட்ட குழிகள் காணப்படுகின்றன. ஒருசில வீடுகளில் இந்த மரங்களைத் தாங்க அடியில் குழி செய்யப்பப்பட்ட கற்கள் கிடத்தப்பட்டன. சில சுவர்களின் அடித்தளம் கூழாங்கற்களைக் கொண்டிருந்தது. வீடுகளின் தரை, ஓரங்களில் கற்களைக்கொண்டு பாவப்பட்டும் மற்றப் பகுதி சுண்ணும்புச்சரளை கொண்டு பாவப்பட்டும் இருந்தன. இப்படிப் பாவப்பட்டுக் கெட்டிப்படுத்தப்பட்ட தரைகளின் மேல்பகுதியில் சுண்ணும்பு தவருமல் பூசப்பட்டது. மிகச்சில வீடுகள் மட்டும் இரண்டு அறைகளைக் கொண்டும், மற்றவை ஒரே அறையைக் கொண்டும் இருந்தன. இவ்வீடுகளின் கூரை பிரம்பு, புல் ஆகியவைகளைக்கொண்டு வேயப்பட்டிருக்கலாம். இந்த வீடுகள் மேலே விவரிக்கப்பட்ட புதிய கற்கால வீடுகளைப் பெரிதும் ஒத்திருந்தன என்பதை நினைவுகூரல் வேண்டும்.[30] ஆனல் ஒன்று. பையம்பள்ளி ஒரு மலையூர்; அதாவது குறிஞ்சி நிலத்து ஊர். சமவெளிப் பகுதியில் இருந்த வீடுகள் பையம்பள்ளி வீடுகளைக் காட்டிலும் ஓரளவு மேம்பட்ட பாங்குடையனவாக இருந்திருக்கலாம். மேலும், இக்கால மக்கள் கட்டிய பெரிய வீடுகள் எல்லாம் மழையினல் எளிதில் சிதையக்கூடிய மண்சுவர்களைக் கொண்டிருந்திருக்கலாம்.

[30] *Vide Supra*

## வாழ்க்கை முறை

ஊரிருக்கைச் சின்னங்கள் அவ்வளவு தெளிவாக இல்லாவிட்டாலும் ஈமச் சின்னங்களில் காணப்படும் மற்றப் பொருள்கள் பெருங்கல் கால மக்கள் வாழ்க்கை நிலையைப்பற்றி ஒரு சிறந்த எண்ணத்தைப் பதிக்கின்றன. இவர்கள் பயன்படுத்திய மட்கலங்கள் எல்லா வகையான வீட்டு வேலைகளுக்கும் உகந்தவையாக இருந்தன. சமையற்கட்டுக்குப் பயன்படுபவை, தானியங்கள் சேர்த்து வைக்கப் பயன்படுபவை என்று மட்கலங்கள் இவர்களுடைய ஈமச் சின்னங்களில் ஏராளமாகக் காணப்படுகின்றன என்று மேலே பார்த்தோம். மண்ணினால் மட்டுமல்லாது இரும்பு, வெண்கலம் ஆகிய உலோகங்களைக் கொண்டும் இவர்கள் பாத்திரங்கள் செய்து புழங்கினார்கள். மட்கலம் வனையும் தொழிலும், கருமார, கன்னாரத் தொழில்களும் நன்றாக வளர்ச்சியுற்றிருந்தன என்பதைச் சொல்லவேண்டியதில்லை.

கருமான்தொழில் வளர்ச்சிக்கு மேலும் சான்று பகர்வனவாக ஏராளமான வேளாண்மைக் கருவிகளும் ஆயுதங்களும் கிடைத்துள்ளன. வேளாண்மைத் தொழிலுக்கு வேண்டிய அத்தனைப் பொருள்களும் இரும்பினால் செய்யப்பட்டவை. நாகரிக வளர்ச்சிக்கு மிக அடிப்படையான வேளாண்மை இக்காலத்தில் மிகுந்த வளர்ச்சியைப் பெற்றது என்பதை எளிதில் உய்த்துணரலாம். புதிய கற்காலத்தில் துவக்க நிலையில் இருந்த வேளாண்மை பெருங்கல் காலத்தில் நன்றாக வேரூன்றிப் பரவியது. நன்செய்ப் பயிரான நெல்லும், புன்செய்ப் பயிர்களான கொள், கேழ்வரகு, சோளம் முதலானவையும் இக்காலத்தில் விளைவிக்கப்பட்டன. இன்று தென்னிந்தியா முழுவதும் பயிரிடப்படும் குறுவைநெல் இந்தப் பெருங்கல் காலத்திலேயே விளைவிக்கப்பட்டது என்பதற்கு ஆதிச்சநல்லூரில் தடயம் உள்ளது.

இச்சின்னங்கள் பெரும்பாலும் இயற்கையாக நீர்வளம் உள்ள பகுதிகளுக்கு அருகில் உள்ளதை மேலே பார்த்தோம். இன்று தமிழ்நாடு முழுவதும் மிகுந்த

எண்ணிக்கையில் காணப்படும் ஏரிகள் பலவற்றுக்கு அருகில் இச்சின்னங்கள் காணப்படுகின்றன. இந்த ஏரிகள் அல்லது குளங்களை முதன்முதல் உருவாக்கியதில் பெருங்கல்கால மக்களுக்குப் பெரும்பங்கு உண்டு எனலாம். ஏரிகளுக்குக் கரைகள் அமைக்க நிறைய மனித உழைப்பு தேவை. அத்தகைய உழைப்பைக் கொடுக்கும் வகையில் கூட்டுச்சமுதாய வாழ்க்கை இக்காலத்தில் அமைந்துவிட்டது என்பதைப் பெருங்கல் ஈமச் சின்னங்கள் பறைசாற்றுகின்றன.

ஒவ்வோர் ஈமச்சின்னமும் அமைய மிகுந்த உழைப்பு தேவை. பலர் கூட்டாகக் கைகொடுத்தால்தான் பெரிய பெரிய கற்களைக் கொண்ட இவ்வீமச் சின்னங்களை உருவாக்கமுடியும். ஆகவேதான் இக்கால வாழ்க்கை நல்ல சமுதாய வாழ்க்கையாக மாறிவிட்டது என்று உய்த்துணர்கிறோம். அதுமட்டும் அன்று. ஈமச்சின்னங்களினுள்ளே புதைக்கப்பட்ட மட்கலங்கள், இரும்புப் பொருள்கள், இன்னும் பிற பொருள்கள் பல்வேறு தொழிலாளிகளால் செய்யப்பட்டவை என்பதையும் நினைவில் வைக்கவேண்டும். நல்ல கட்டுக்கோப்பான சமுதாய வாழ்க்கைக்கு இவ்வீமச்சின்னங்கள் மொத்தமாகச் சான்று கூறுகின்றன.

வேளாண்மை செய்ததோடு ஓரளவுக்கு இவர்கள் வேட்டையாடியும் வாழ்ந்திருக்கலாம். படைக்கலங்களாகப் பயன்படுத்தப்பட்ட வேல்கள், அம்புகள், ஈட்டிகள் ஆகியன வேட்டைக்கும் பயன்படக்கூடியன. ஆனால் இவர்கள் என்ன விலங்குகளை வேட்டையாடினார்கள் என்பதைப்பற்றி மிகுதியாகத் தெரிந்துகொள்ள முடியவில்லை. ஓநாயின் எலும்புகள் சில சின்னங்களில் புதைக்கப்பட்டுள்ளன. மாடுகள், எருமைகள், ஆடுகள் முதலியன வீட்டு விலங்குகளாக இருந்தன. குதிரையும் வளர்க்கப்பட்டது. பருத்தியை ஆடை நெய்வதற்குப் பயன்படுத்தினார்கள் என்று தெரிகிறது. பல அணிமணிகளைப் புனைந்து பெருங்கல் கால மக்கள் தங்களை அழகுபடுத்திக் கொண்டார்கள்.

இவர்கள் போர்த்தொழிலில் மிகுதியாக ஈடுபட்டிருந் தார்கள். போரில் இவர்கள் குதிரைகளைப் பயன்படுத்தி யிருக்கக்கூடும். பெருங்கல் சின்னங்களைப் பயன்படுத்தி யவர்கள் பெரும்பாலும் போர் வீரர்களாகவே இருந்தார் களோ என்ற ஐயங்கூட எழுவதற்கு வாய்ப்பு இருக்கிறது. பையம்பள்ளியில் ஒரே ஒரு கல்வரிசையி லிருந்த ஈமக்குழியில் இரும்பாலான 18 அம்பு முனைகள் வைக்கப்பட்டிருந்தன என்று மேலே பார்த்தோம். ஆதிச்சநல்லூர்த் தாழிகளில் ஏராளமான ஈட்டிகளும் வேல்களும் எடுக்கப்பட்டன. ஆதிச்சநல்லூரில் ஒரு குறிப்பிடத்தக்க செய்தி, பெரும்பாலும் இந்த ஈட்டி, வேல்களின் முனைகள் கீழ் நோக்கியவண்ணம் இருந்தன என்பதாகும்.[31] அத்தாழிகளில் புதைக்கப்பட்ட வீரர் களுக்கு வணக்கம் செலுத்தும் முறையில் இவை இப் படிக் கீழ்நோக்கிக் குத்தி வைக்கப்பட்டனவோ என்று நாம் கருத வேண்டியுள்ளது. எல்லாச் சின்னங்களிலுமே புதைக்கப்பட்ட எலும்புகள் முழு உருவம் அற்றவை என்று பார்த்தோம். ஒருவேளை, போர்க்களத்திலே இறந்துபோன வீரர்களின் உடல்கள் அங்கிருந்து கொண்டுவரப்படாமல் அடையாளத்திற்காக அவர்க ளுடைய எலும்புகள் மட்டும் அவரவர்களுடைய ஊர் களுக்குக் கொண்டு வரப்பட்டு இச்சின்னங்களில் புதைக்கப்பட்டனவோ என்றும் நினைக்கலாம்.

## சமய நம்பிக்கைகள்

இறப்புக்குப்பின் உள்ள வாழ்க்கையில் பெருங்கல் கால மக்கள் மிகுந்த நம்பிக்கை கொண்டிருந்தார்கள். மிகுந்த உழைப்போடு உருவாக்கப்பட்ட கல்லறைகளும், அவைகளுக்குள்ளே இடப்பட்ட பல பொருள்களும் இதைப் புலப்படுத்துகின்றன. மட்கலங்களாகட்டும், இரும்புப் பொருள்களாகட்டும் ஈமப்பொருள்கள் மேலும் நீண்ட நாள்கள் பயன்படக்கூடியனவே கல்லறைகளி

---

[31] Alexander Rea, *Catalogue of Pre-historic Antiquities from Adichanallur and Perumbair*, p. 4

னுள்ளே இடப்பட்டன. இறந்தவருக்கு இவையெல்லாம் அவருடைய மேலுலக வாழ்க்கையில் பயன்படும் என்ற கருத்தால் அவ்வாறு இடப்பட்டிருக்கலாம். கல்லறைச் சுவர்களின் ஒன்றில் இடுதுளை ஒன்று இருப்பது மேலே குறிப்பிடப்பட்டது. இத்துளை ஈமப்பொருள்களை உள்ளே இடுவதற்குப் பயன்படும். அதே சமயத்தில் இறந்தவர்களின் ஆவி நடமாட்டத்திற்கு இது பயன்படும் என்றும் கருதியிருக்கலாம்.

பல இடங்களில் இடுதுளை கிழக்கு நோக்கியிருப்பதன் காரணமாக ஞாயிறு வணக்கத்தோடு இது தொடர்புண்டிருக்குமோ என்றும் சிலர் ஐயப்படுகிறார்கள்.[32] ஆதிச்சநல்லூரில் திரிசூலம், சூலம் போன்ற ஆயுதங்கள் கிடைத்தன என்று பார்த்தோம். திரிசூலம் சிவனுடைய ஆயுதம். சூலம் முருகனுடைய வேல் என்று கொள்ளலாம். மேலும் ஆதிச்சநல்லூரில் வெண்கலத்தால் செய்த மூடிகளில் சேவல் உருவங்கள் பல காணப்படுகின்றன. சேவல் முருகக்கடவுளோடு தொடர்புடையது தெரிந்ததே. அத்துடன் மான், எருமை, புலி, நாய் முதலான விலங்குருவங்களும் ஆதிச்சநல்லூர்ப் பொருள்களில் காணப்படுவதையும் நினைவில் கொள்ளவேண்டியிருக்கிறது. சிவவணக்கம், முருகவணக்கம் முதலியவை இக்காலத்தில் வழக்கிலிருந்தன என்று ஓரளவுக்குக் கருதலாம்.

## கால எல்லைகள்

தென்னிந்தியாவில் ஏராளமான பெருங்கல் சின்னங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. பல இடங்களில் இவை அகழ்வாய்வு செய்யப்பட்டுள்ளன. கடந்த ஒரு நூற்றாண்டுக்கு மேலாக இதில் பல அறிஞர்கள் அக்கறை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். இருந்தாலுங்கூட, இன்றைக்கும் பெருங்கல் காலம் எந்த நூற்றாண்டிலிருந்து எந்த நூற்றாண்டுவரை இருந்ததென்று உறுதியாகச் சொல்ல முடியவில்லை. கருநாடக மாநிலத்தில் பிரம்மகிரி

[32] Banerjee, N. R., Op. cit., p. 213

என்ற இடத்தில் அகழ்வாய்வு நடத்திய சர். மார்ட்டிமர் வீலர் இந்தப் பெருங்கல் காலம் கி. மு. 200-லிருந்து கி. பி. 50 வரை நிலவியதென்று கணக்கிட்டார்.[33] வேறு சான்றுகளும் இந்தக் காலஎல்லையைப் பெரும்பாலும் சில உறுதி செய்வனவாகவே இருக்கின்றன.[34] ஆந்திர மாநிலத்தில் அமராவதியில் கி. மு. 2ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த ஒரு புத்ததூபியின் கீழே பெருங்கல் சின்னத்தைச் சேர்ந்த தாழிகள் இருந்தன. கி. மு. 2ஆம் நூற்றுண்டுக்குச் சிறிது முன்னுல் பெருங்கல் காலம் இருந்தது என்று இதிலிருந்து சொல்லலாம். பையம்பள்ளி அகழ்வாய்வு ஏறக்குறைய கி. மு. 3ஆம் நூற்றுண்டிலிருந்து பெருங்கல் காலம் நிலவியதாகக் காட்டுகிறது.[35] கோயம்புத்தூர் மாவட்டத்துச் சூலூரில் ஒரு கல்பதுக்கையுள் கி. மு. 3ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த ஒரு நாணயம் கிடைத்தது. இந்த மாவட்டத்திலேயே இன்னேர் ஈமச்சின்னத்தில் ரோமானியப் பேரரசின் நாணயம் கிடைத்தது. நீலமலையில் ஒரு புதைமேட்டில் கி. பி. 4ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த ஒரு ரோமானிய நாணயம் கிடைத்தது. மட்கல வகையை வைத்துப் பார்க்கும்பொழுதும் நீலமலைச் சின்னங்கள் மற்றப் பெருங்கல் சின்னங்களுக்குப் பிற்பட்டனவாகத் தோன்றுகின்றன. அதனுல் நீலமலைத் தடயத்தை விட்டுவிட்டு, கி. மு. 3ஆம் நூற்றுண்டிலிருந்து கி. பி. முதல் அல்லது இரண்டாம் நூற்றுண்டு வரையில் பெருங்கல் காலம் நிலவியதாகக் கொள்ளப்படுகிறது.[36]

சிலர் இதன் துவக்கம் இன்னும் பல நூற்றுண்டுகளுக்கு முந்தியே இருந்தது என்று கருதுவர்.[37] இரண்டு

---

33 *Ancient India*, No. 4 (1948), pp. 201 & 202
34 *Ibid*, p. 300
35 *Indian Archaeology*, 1967-68, A Review, p. 27
36 Ramachandran, K. S., 'Chronology of the Indian Megaliths some considerations' in *Purattatva*, No. 3 (1960-70), pp. 107-109
37 Gururaja Rao, B. K., *Op. cit.*, p. 326; & Gupta, S. P., *Disposal of the Dead and Physical Types in Ancient India*, 1972, pp. 192 & 193

சான்றுகளை வைத்து அப்படிக் கருதுகிறார்கள். ஒன்று, பெருங்கல் சின்னங்களில் பேரளவில் காணப்படும் கறுப்பு–சிவப்பு மட்கலம் ஏறக்குறைய கி. மு. 2000-லிருந்தே வடஇந்தியாவில் கிடைப்பது.[38] (கருநாடக மாநிலத்தில் ஹல்லூர் என்ற இடத்தில் கி. மு. 1000-லிருந்தே இம்மட்கலம் கிடைக்கிறது.)[39] இரண்டு, இரும்பு வட இந்தியாவிலும் நடு இந்தியாவிலும் கி. மு. 1000-லிருந்தே கிடைப்பது.[40] கறுப்பு–சிவப்பு மட்கலத்தைப் பொறுத்தவரையில் ஒருவகையான சுடும் முறை அந்த நிறத்தைக் கொடுக்கிறது என்று பார்த்தோம். இம்முறையை யார் எந்தக்காலத்தில் பயன்படுத்தினாலும் கறுப்பு–சிவப்பு மட்கலங்களை உருவாக்கமுடியும். அதனால் பெருங்கல் சின்னங்களில் உள்ள கறுப்பு–சிவப்பு மட்கலவகையும் மற்ற இடங்களில் உள்ளனவும் ஒன்றே, அதாவது ஒரே காலத்தைச் சேர்ந்தவை என்று உறுதியாகச் சொல்ல முடியாது என்று சிலர் கருதுகிறார்கள். ஆயினும் இரண்டு இடங்களிலும் மட்கல உருவங்கள் ஒத்திருப்பதால் ஓரளவு இவை சமகாலத்தவை என்று எடுத்துக்கொள்ளலாம். கி. மு. 1000-லேயே இரும்பு தென்னிந்தியாவில் புழங்கியிருக்கலாம். பெருங்கல் சின்னங்களைப் பயன்படுத்தியவர்கள்தான் அந்த இரும்பை முதன் முதலாகப் பயன்படுத்தினார்கள் என்று எடுத்துக்கொண்டு ஏறக்குறைய கி. மு. 1000-லிருந்து பெருங்கல் காலம் நிலவியது என்று சொல்லலாம்.

வெளிநாடுகளிலும் பெருங்கல் சின்னங்கள் ஏராளமாக இருக்கின்றன என்று பார்த்தோம். இவை புதிய கற்காலம் அல்லது வெண்கலக் காலத்தைச் சேர்ந்தவையாக உள்ளன. கி. மு. 3000-லிருந்து கி. மு. 1500 வரை உள்ள காலஎல்லைக்குள் இவை உள்ளன.[41] தென்

[38] Banerjee, N. R., *Op. cit.* p. 228

[39] Nagaraja Rao, M. S., *A Report on Hallur Excavations, Proto-Historic cultures of the Thungabhadra Valley*, pp. 58 & 59

[40] Banerjee, N. R., *Op. cit.*, p. 238

[41] Gupta, S. P., 'Gulf of Oman: The Original Home of Indian Megaliths', *Purattatva*, No. 4 (1970-71), p. 4

னிந்தியாவிலுள்ள சின்னங்கள் இரும்புக்காலத்தைச் சேர்ந்தவை. அதனால் வெளிநாட்டுக் காலக்கணிப்பைத் தென்னிந்தியாவிற்கோ, தமிழ்நாட்டிற்கோ பொருத்த முடியாது.

தமிழ்நாட்டுப் பெருங்கல் சின்னங்கள் கி. பி. இரண்டாம் நூற்றாண்டு முடிய நிலவியவை என்று மேலே குறிப்பிடப்பட்டது. இதற்குச் சங்க இலக்கியங்கள் நல்ல சான்றுகளைத் தருகின்றன. பல புறநானூற்றுப் பாடல்கள் மேலே விவரிக்கப்பட்ட ஈமச் சின்னங்களையும் ஈமக்காட்டையும் படம்பிடித்துக் காட்டுவனபோல் உள்ளன. ஈமத்தாழி சிவப்பாக இருந்தது[42] பற்றியும், இறந்த மன்னர் பெரிய தாழிகளில் புதைக்கப்பட்டது[43] பற்றியும் புறநானூற்றுப் பாடல்களில் வரும் குறிப்புகளை எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். காவிரிப்பூம்பட்டினத்து ஈமக்காட்டை விவரிக்க வந்த மணிமேகலை பல்வேறுபட்ட ஈம முறைகளைத் தெரிவிக்கிறது. சிலர் பிணத்தைச் சுட்டார்கள். சிலர் திறந்த வெளியில் கிடத்தினார்கள். சிலர் குழிதோண்டிப் புதைத்தார்கள். சிலர் நிலத்துக்குக் கீழே தாழ்ந்த இடங்களில் (அதாவது கல்பதுக்கைகளில்) அடைத்தார்கள். சிலர் தாழியில் வைத்து மூடினார்கள்.[44]

பல புறநானூற்றுப் பாடல்களில் பிணங்களைச் சுடுவது குறிக்கப்படுகிறது.[45] இந்தக் குறிப்புகளிலிருந்து, சுடாமல் பெருங்கல் சின்னங்களில் புதைத்து வந்த வழக்கம் அருகி, சுடும் வழக்கம் பெருகிவந்த காலம் சங்ககாலம் எனலாம். அதாவது பெருங்கல் காலத்தின் இறுதிக்கட்டமே சங்ககாலத்திலிருந்தது,

---

[42] புறநானூறு, 238

[43] புறநானூறு, 228

[44] மணிமேகலை, 6 : 66 & 67

'சுடுவோர் இடுவோர் தொடுகுழிப் படுப்போர்
தாழ்வயின் அடைப்போர் தாழியிற் கவிப்போர்'

[45] புறநானூறு, 231, 240, 245, 246 & 363

அதனுடைய செழிப்பான காலம் சங்ககாலத்துக்கு முன்பே நிலவியது எனலாம்.

## வளர்ச்சியும் பெயர்ச்சியும்

பெருங்கல் காலத்தின் காலஎல்லை வரையறுப்பில் உள்ள சிக்கலைப் போன்றே அதன் வளர்ச்சி, பெயர்ச்சி ஆகியவற்றை அறிந்துகொள்வதிலும் சிக்கல் உள்ளது. பெருங்கல் சின்னங்களை ஒரு தனிப் பண்பாடு என்பதை விட ஒரு பண்பாட்டுக்கூறு என்று எடுத்துக்கொண்டால் இந்தச் சிக்கல் ஓரளவு மறைந்துவிடும். பலவேறுபட்ட பண்பாட்டு மக்கள் பெருங்கல் ஈமச்சின்னங்களை ஏதோ ஒரு காலத்தில் தங்களுடைய ஒரு பண்பாட்டுக் கூறுகக் கொண்டிருந்திருக்கிருர்கள். அதனுல் பெருங்கல் சின்னங்கள் இருக்கும் நாடுகளிலெல்லாம் ஒரே பண்பாடு இருந்தது என்று உறுதிப்படுத்த முடியாது. ஆயினும் சில வெளிப்படையான ஒற்றுமைத் தன்மைகள் சில நாடு களிலுள்ள பெருங்கல் சின்னங்கள் யாவற்றிலும் காணப்படுகின்றன என்பதை மறுக்க முடியாது. மேற்கு ஐரோப்பிய நாடுகள், பாலஸ்தீனப் பகுதி ஆகிய இடங்களில் உள்ள கல்லறைகளிலும் தென்னிந்தியா விலுள்ள கல்லறைகளிலும் இடுதுளை காணப்படு கிறது. கல்லறை அமைப்பிலும் மொத்தமாகச் சில சீரான தன்மைகள் காணப்படுகின்றன. மேலும் பாலஸ் தீனப் பகுதியில் உள்ள குடைவரைத் தாழ்வறைகள் கேரளப்பகுதியில் உள்ளனவற்றைப் போலவே உள்ளன. ஆகவே இந்தப் பகுதிகளில் பெருங்கல் சின்னங்களை உருவாக்கியவர்கள் எல்லாரையும் ஒரே பண்பாட்டைச் சேர்ந்தவர்களாக நாம் கொள்ளாவிட்டாலும் இவர்களுக் கிடையே கருத்துப் பரிமாற்றம் அல்லது தொடர்பு இருந்தது என்று உய்த்துணரலாம்.

மேற்கு நாடுகளில் உள்ள பெருங்கல் சின்னங் களுக்கும் தென்னிந்தியப் பெருங்கல் சின்னங்களுக்கும் உள்ள ஒரு சில குறிப்பான வேறுபாடுகளையும் கவனிக்க வேண்டும். மேற்கு நாடுகளில் உள்ளவை புதிய கற்கால,

வெண்கலக் காலங்களைச் சேர்ந்தவை. ஏறக்குறைய கி. மு. 3000-லிருந்து கி. மு. 1500 வரை அவை நீடித்தவை. மாறாக, தென்னிந்தியச் சின்னங்கள் கி. மு. 10ஆம் நூற்றாண்டுக்குப் பின்பு உருவானவை; இரும்புக் காலத்தைச் சேர்ந்தவை. அடுத்தது, ஈமச்சின்னங்களில் புதைக்கப்பட்ட இறந்தோரின் எண்ணிக்கையில் உள்ள வேறுபாடு. மேற்கு நாடுகளில் சின்னங்கள் அளவில் மிகப் பெரியவை. கல்லறைகளை உருவாக்கப் பயன்படுத்தப்பட்ட கற்கள் உண்மையிலேயே மிகப் பெரியவை. சில கற்கள் நூறு டன் எடையுள்ளனவாகவும் இருந்தன.[46] கற்கள் பருமனாக இருந்ததைப் போலவே கல்லறைகளில் புதைக்கப்பட்ட பிணங்களும் பலவாக இருந்தன. ஐம்பதுக்கு மேற்பட்ட மனிதர்களின் உடல்களைச் சேர்ந்த எலும்புகள் கொண்டனவாகக் கல்லறைகள் பல காணப்பட்டன. தெற்குப் பிரான்சில் ஒரு கல்லறையிலேயே 300 பிணங்களைச் சேர்ந்த எலும்புகளிருந்தன.[47] இங்கெல்லாம் பல ஆண்டுகள் ஒரு கல்லறை தொடர்ந்து பயன்பட்டதாகத் தெரிகிறது. ஒரு குடும்பம் அல்லது ஒரு கூட்டத்திற்கு ஒரு கல்லறை சொந்தமாக இருந்ததுபோல் தெரிகிறது. இதற்கு மாறாக, தென்னிந்தியாவில் ஒரு கல்லறையில் பெரும்பாலும் ஓர் ஆளின் எலும்புகள்தான் புதைக்கப்பட்டுள்ளன. சிலவற்றில் இரண்டு பேரின் எலும்புகள் காணப்பட்டாலும் அவை ஒரே சமயத்தில் புதைக்கப்பட்டனவாகவே உள்ளன.

மேற்குறிப்பிட்டவையும் இன்னும் சில வேறுபாடுகளும் காணப்பட்டாலும் அடிப்படையில் இச்சின்னங்கள் யாவும் ஈமச்சின்னங்களாக உள்ளன. எல்லாவற்றிலும் புதைக்கப்பட்ட எலும்புகள் எந்த உருவமுமற்றுக் கும்பல் கும்பலாக உள்ளன. எல்லாப் பகுதிகளிலும் இறந்தவர்களுக்கு நிறைய மரியாதை காட்டப்பட்ட

---

[46] Glyn Daniel, *The Megalith Builders of Western Europe* (1958), p. 14

[47] *Ibid*, p. 48

தாகத் தெரிகிறது. இந்த உண்மைகளைவைத்து மேற்கு நாடுகளிலிருந்து—குறிப்பாகப் பாலஸ்தீனப் பகுதியிலிருந்து பெருங்கல் ஈமப் பண்பாட்டுக்கூறு தென்னிந்தியாவுக்கு வந்தது என்று சிலர் கருதுகிறார்கள்.[48] இவர்கள் கருத்துக்குச் சிறிது ஊட்டமளிக்கும் வகையில் பத்து ஆண்டுகளுக்கு முன்பு எகிப்து நாட்டில் நடத்திய அகழ்வாய்வு ஓர் உண்மையை வெளிப்படுத்தியது. பல நாடுகளோடு சேர்ந்து பங்கெடுத்துக் கொண்ட இந்தியத் தொல்லியல் குழு கி. மு. 1500ஐச் சேர்ந்த 'சி–வகை' என்ற மக்களைச் சேர்ந்த இடுகாடு ஒன்றை நுயூபியப் பகுதியில் டுமஸ் என்ற இடத்தில் அகழ்ந்தது. இங்குள்ள ஈமச்சின்னங்கள் தென்னிந்தியச் சின்னங்களை, குறிப்பாகக் கல்குவைகளைப் பெரிதும் ஒத்திருந்தன. ஆனால் டுமஸ் சின்னங்களிலோ முழுப்பிணம் புதைக்கப்பட்டது. தென்னிந்தியாவிலோ சில எலும்புகள் மட்டுந்தான் புதைக்கப்பட்டன. இந்த வேறுபாடு காணப்பட்டாலும் ஒரு முக்கியமான ஒற்றுமைக்கூறு தென்படுகிறது. தென்னிந்தியப் பெருங்கல் சின்னங்களில் உள்ளவற்றைப் போன்றே டுமஸிலும் கறுப்பு–சிவப்பு மட்கலங்கள் காணப்பட்டன. இவ்வொற்றுமைக் கூற்றை ஒரு தற்செயல் நிகழ்ச்சி என்று கூறமுடியாது என்று திரு பி. பி. லால் கருதுகிறார். அதே சமயத்தில் இரண்டுக்கும் இடையேயுள்ள கால, இட இடைவெளிகளையும் கவனிக்க வேண்டும் என்றும், இருபகுதிகளுக்கும் இடையேயுள்ள தெற்கு அரேபியா, ஈரான் முதலான பகுதிகளை மேலும் ஆராய வேண்டும் என்றும் அவர் வற்புறுத்துகிறார்.[49]

இப்போது தெரியவந்துள்ள செய்திகளிலிருந்தே தெற்கு அரேபிய, ஈரான் சின்னங்களுக்கும் தென்னிந்தியச் சின்னங்களுக்கும் வெளிப்படையான ஒற்றுமைகள் உள்ளமை புலனாகிறது என்பது சிலர் கருத்து.[50] இதை

[48] Gururaja Rao, B. K., *Op. cit.*, pp. 223-225
[49] *Indian Archaeology*, 1961-62, A Review, pp. 67-70
[50] Gupta, S. P., Op., cit., pp. 4-13

வைத்துக்கொண்டு கடல் வழியாகப் பெருங்கல் மரபு தென்னிந்தியாவை அடைந்திருக்கக்கூடும் என்று ஒரு சாராரும் நிலவழியாக வடமேற்கு இந்தியாவினூடே இவை வந்திருக்கக்கூடும் என்று மற்றொரு சாராரும் சொல்கின்றனர். பாக்கிஸ்தானத்தில் சிந்து மாநிலத்தில் கராச்சியை ஒட்டி உள்ள பல பெருங்கல் சின்னங்கள் தென்னிந்தியச் சின்னங்களை ஒத்துள்ளன என்று வால்டர் பேர்ஸெர்விஸ் குறிப்பிடுகிறார்.[51] இந்தக் கராச்சிப் பகுதிச் சின்னங்கள் ஈரான் அல்லது அரேபியப் பகுதிச் சின்னங்களையும் தென்னிந்தியச் சின்னங்களையும் இணைக்கின்றன எனலாம்.

இந்தியாவைப் பொறுத்தவரையில் விந்திய மலைக்குத் தெற்கேதான் பெருங்கல் சின்னங்கள் அடர்த்தியாகக் காணப்படுகின்றன. அதற்கு வடக்கில் ஒருசில இடங்களில் மட்டுமே உள்ளன. தென்னிந்தியாவில் திராவிட மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த மொழிகள் வழங்கும் பகுதிகளோடு இப்பெருங்கல் சின்னங்கள் ஒன்றிப் போவதால் இச்சின்னங்களை உருவாக்கியவர்கள் திரா விடர்கள்; இவர்கள் மேற்கு ஆசிய நாடுகளிலிருந்து கடற்கரை ஓரமாக வந்து, பின்புச் சிறிது சிறிதாக உள் நாட்டுப் பகுதிக்குச் சென்று குடியேறினர் என்று சிலர் முடிவு கட்டுகின்றனர்.[52]

மேற்குறிப்பிட்ட கருத்துகளெல்லாம் இன்னும் ஆய்வு நிலையில்தான் உள்ளன. இப்பெருங்கல் பண்பாடு பற்றி முழுமையாகத் தெரிந்துகொள்ள இயலாமைக்குக் காரணம் இப்பண்பாடு பல்வேறு பண்பாடுகளின் கூறு களைத் தனதாக எடுத்துக்கொண்டுள்ளமையே யாகும். தாழிகளில் இட்டுப் புதைக்கும் வழக்கம் இதற்கு முன்னால் தென்னிந்தியாவிலிருந்த புதியகற்கால மக்களிடமும், நடு இந்தியாவிலும் ராஜஸ்தானப் பகுதியிலும் செம்புக் கால

---

51 Walter A. Fairservis, *The Roots of Ancient India*, pp. 373-377

52 Furer-Haimendorf, C. V., 'New Aspects of the Dravidian Problem', *Tamil Culture*, Vol. II, No. 2, pp. 127-135

மக்களிடமும் வழக்கில் இருந்தது.[53] கறுப்பு-சிவப்பு மட்கலம் ஏறக்குறைய கி. மு. 2000-லிருந்தே வடஇந்தியா விலும், நடுஇந்தியாவிலும் காணப்படுகிறது. இரும்பு கி. மு. 1000-லேயே வடஇந்தியாவில் வழக்குக்கு வந்து விட்டது. கறுப்பு-சிவப்பு மட்கலத்தை வடஇந்தியாவில் முதன்முதலில் பயன்படுத்தியவர்கள் யார் என்று இன்னும் சொல்ல முடியவில்லை. அவர்கள் ஆரியர்களாக இருக்க முடியாது; ஏனென்றால் ஆரியர்கள் கி. மு. 1500-க்குப் பிறகுதான் இந்தியாவுக்குள் நுழைந்தார்கள். இதை மன தில் வைத்துப் பி. சுப்பாராவ் 'ராஜஸ்தானப் பகுதியில் உள்ள கறுப்பு-சிவப்பு மட்கல வகைக்கு உரியோர் திராவிடர்கள்; அவர்களே பின்னால் (ஆரியத் தாக்கு தலினால்) தென்னிந்தியா நோக்கி வந்தார்கள்; இடையில் வெளித் தொடர்பின் காரணமாகப் பெருங்கல் ஈமப்பண் பாட்டுக் கூற்றைத் தங்களோடு கொண்டுவந்தார்கள்' என்று கருத்துத் தெரிவித்தார்.[54]

இதற்கிடையில் சிந்துவெளி நாகரிக மக்களுக்கும் தென்னிந்திய-பெருங்கல் சின்ன மக்களுக்கும் தொடர்பு உள்ளதாகப் பி. பி. லால் இந்த இரு மக்களின் மட்பாண்டங் களில் உள்ள கீறல் குறிகளை நன்கு ஆய்ந்து கூறுகிறார் (பார்க்க : பிற்சேர்க்கை. பக்கம் 239). இப்படி ஒரு தீர் வான முடிவு இல்லாமல் தமிழ்நாட்டுப் பெருங்கல் காலத்தைப் பற்றிய அறிவு உள்ளது. மேலும் நடத்தும் ஆய்வுகள் தெளிவைத் தரலாம்.

---

[53] Bridget and Raymond Allchin, *The Birth of Indian Civilization*, pp. 311 & 314

[54] Subba Rao, B., 'Megalithic Problem of South India and the Dravidian Languages', *The Archaeological Society of South India, Silver Jubilee Volume* (1962), pp. 146-148

## பிற்சேர்க்கை

### பெருங்கல் கால மட்கலக் கீறல் குறிகள்

பெருங்கல் கால மட்கலங்களில் வெளிப்புறம் சில குறியீடுகள் காணப்படுகின்றன.

1. இவை பெரும்பாலும் கலங்கள் சுடப்பட்ட பின்னர்க் கீறப்பட்டவை. ஒரு சில கீறல்கள் கலங்கள் சுடப்படுவதற்கு முன்னரும் கீறப் பட்டவை.
2. இவை ஈமக்கலங்களிலும் வீட்டுக் கலங்களிலும் காணப்படுகின்றன.
3. ஒரு குறிப்பிட்ட குறி ஒருவகைப்பட்ட ஈமச் சின்னத்தில்தான் காணப்படுகிறது என்று சொல்வதற்கில்லை. எல்லா வகையான ஈமச் சின்னங்களிலும் அனைத்துக் குறிகளும் காணப்படுகின்றன. ஒரே ஈமச் சின்னத்தில் பல வகையான குறியீடுகளும் காணப்படுகின்றன.
4. அவை பலவகைப்பட்ட மட்கலங்களிலும் காணப்படுகின்றன.
5. ஒரே மட்கலத்தில் ஒன்று, இரண்டு அல்லது மூன்று வேறுபட்ட குறியீடுகளும் காணப்படு கின்றன. ஒரே குறி இரண்டு அல்லது மூன்று முறை ஒரே மட்கலத்தில் பொறிக்கப்பட்டுக் காணப்படுவதும் உண்டு. சில மட்கலங்களில் மூன்று குறிகள் அருகருகே பொறிக்கப்பட் டிருப்பதைக் கண்டால் அவை ஏதோ எழுதி யுள்ளதைக் குறிப்பதாகப் படுகிறது. இருப் பினும் இம்மூன்று குறிகளும் இடம் மாறியும் வேறு கலங்களில் எழுதப்பட்டுள்ளன.

இக்குறிகள் எதைக் குறிக்கின்றன என்பதைக் குறித்துப் பல அறிஞர்கள் ஆராய்ந்துள்ளனர். பல அறிஞர்கள் குறிப்பிட்ட ஓர் அகழ்வாய்வில் கிடைத்த

குறியீடுகளைப்பற்றி எழுதியுள்ளனர். ஒரு சிலர் பல இடங்களிலும் கிடைத்த குறியீடுகளைத் தொகுத்து ஆராய்ந்துள்ளனர். அவற்றில் யாஜ்தானி அவர்களும் அண்மையில் மைய அரசுத் தொல்லியல் ஆய்வுத்துறையில் தலைமை இயக்குநராகப் பணிபுரிந்த பி. பி. லால் அவர்களும் செய்துள்ள ஆய்வுகள் சிறப்பாகக் குறிப்பிடப்பட வேண்டியவையாகும்.

யாஜ்தானி 1917ஆம் ஆண்டிலேயே எழுதியுள்ள ஒரு கட்டுரையில் அதுவரை கிடைத்த அனைத்துக் குறியீடுகளையும் எடுத்து ஆராய்ந்து அவற்றை 131 வகையினவாகப் பிரித்துக் காட்டியுள்ளார்.[55] பிற குறியீடுகள் அனைத்தும் இந்த 131 வகைகளுக்கு உட்படும் எனவும், இவற்றில் ஏதாவது ஒரு வகையின் மாறுபாடே பிற குறியீடுகள் எனவும் கொண்டுள்ளார். அவர் இக்குறியீடுகளில் பல, "எட்ருஸ்க"[56] எழுத்துகளை ஒத்துள்ளன எனக் காண்பித்துள்ளார். யாஜ்தானி அவர்கள் அக்கட்டுரை எழுதியபோது சிந்துவெளிப் பண்பாடு, அதற்குப்பின் நிலவிய செம்புக்கால பண்பாடு ஆகியவை பற்றி எந்தச் செய்தியும் வெளிவரவில்லை.

அண்மையில் பி. பி. லால் அவர்கள் இதுபோன்ற அனைத்துக் குறிகளையும் தொகுத்து ஆராய்ந்து ஒரு விரிவான கட்டுரை எழுதியுள்ளார்.[57]

லால் அவர்கள் பெருங்கல் கால மட்கலங்களில் காணப்படும் கீறல் குறிகளைச் சுமார் 53 வகைகளாகப் பிரித்துள்ளார். யாஜ்தானி அவர்கள் குறித்த 131 வகைகளும் இந்த 53 வகைகளுள் அடங்கும் என்பதையும் காட்டியுள்ளார். இக்குறியீடுகளுக்கும் சிந்துவெளி

[55] Yazdani, G., 'Megalithic Remains of the Deccan: A New Feature of Them', *Journal of Hyderabad Archaeological Society*, 1917, pp. 56-79.

[56] Etruscan

[57] Lal, B. B., 'From the Megalithic to the Harappa: Tracing Back the Graffiti on the Pottery', *Ancient India*, No. 16 (1960), pp. 4-24

நாகரிக எழுத்துகளுக்கும் உள்ள நெருங்கிய தொடர்பை இவர் விளக்குகிறார். இக்குறியீடுகளில் நூற்றுக்கு எண்பத்தொன்பது விழுக்காடு சிந்துவெளி எழுத்து களில் காணப்படுகின்றன என்று எடுத்துக்காட்டி யுள்ளார்.

இவ்வாராய்ச்சியின் பயனை அறியக் குறியீடுகளின் வகைகளை அறிந்துகொள்ளுதல் இன்றியமையாதது. லால் அவர்கள் குறிப்பிட்டுள்ளபடி அவ்வகைகள் கீழே வரிசையாகக் கொடுக்கப்பட்டுள்ளன. (வரை படம் 20).

குறி–1 : அம்புமுனைபோல் மேலே இணைந்து கீழே சாய்ந்து இழுக்கப்பட்ட இருகோடுகளை உடை யது. இக்குறி பிராமி எழுத்தில் 'க' வருக்க மூன்றும் எழுத்தின் வடிவை ஒத்துள்ளது.

குறி–2 : ஒரு சாய்வுக் கோடும், அதன் நடுவிலிருந்து சாய்வாக இழுக்கப்பட்ட மற்றுமொரு கோடு மாக உள்ளது. இது பண்டைய 'த' என்ற வடிவைப் போன்றது.

குறி–3 : சற்றேறக்குறைய திரிசூலத்தைப் போன்றது. இக்குறியில் இரண்டு முக்கிய வேறுபாடுகளும் காணப்படுகின்றன. மூவிதழ்களும் இணையும் பகுதியில் ஒரு குறுக்குக்கோடு இடப்பட்டது ஒருவகை. கம்பியின்மேல் மூன்று இதழ்கள் காணப்படுவதுபோல் கம்பின் கீழும் தலை கீழாக மூன்று இதழ்கள் காணப்படுவது மற் றொரு வகை. சற்றேறக்குறைய சத்தி என் னும் படையை இது ஒத்திருக்கிறது.

குறி–4 : இரண்டு அம்பு முனைகள் நீண்டு மேலே இணை வது போன்றது.

குறி–5 : அம்புக்குறி.

குறி–6 : உடுக்கைக்குறி. இதில் சில குறிப்பிடத்தக்க வேறுபாடுகளும் உள்ளன. உடுக்கை வடிவின் நடுவில் இழுக்கப்பட்ட குறுக்குக் கோடு ஒன்றை இதில் காண்கிறோம். மேலும் உடுக்கை வடிவின் இருபுறங்களிலும் குறுக்குக் கோடுகள் பல வரையப்பட்டுச் சீப்புப்போல் இது காணப்படுவதும் உண்டு.

குறி–7 : ஆங்கில 'வீ' போன்ற குறியின் இரு கோடுகளிலும் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட சிறு கோடுகள் இழுக்கப்பட்டுள்ளன. சில வகைகளில் நடுவில் ஒரு குறுக்குக் கோடும் உண்டு.

குறி–8 : நிலைவாயில் குறி. வாயிலின் இருநிலைகளையும் குறுக்கு விட்டத்தையும்போல் இணைகோடுகளால் வரையப்பட்ட வடிவம்.

குறி–9 : மான்குறி. மானின் உடல்போன்றும் கால்கள் போன்றும் இணைகோடுகளால் வரையப்பட்டுக் கொம்பைக் குறிக்கும் வளைகோடுகளுடன் காணப்படுகிறது.

குறி–10 : கூட்டல் குறி. குறுக்கும் நெடுக்குமாக ஒன்றை ஒன்று வெட்டும் கூட்டல் குறி போன்றது.

குறி–11 : பெருக்கல் குறி. இது பெருக்கல் குறியை ஒத்தது.

குறி–12 : இணைகரக் குறி. சதுரம், நீண்ட சதுரம் அல்லது இணைகரம் போன்ற வடிவுடையது.

குறி–13 : காவடிக்குறி. ஒரு நெடுங்கோடு. அதன்மேல் ஒரு குறுக்குக் கோடு. குறுக்குக் கோட்டின் இரு ஓரங்களிலும் கீழ்நோக்கி இரு சாய் கோடுகள். காவடியின் இரு தட்டுகளை ஒருவர் தூக்கிச் செல்வதைக் கோடுகளால் குறிப்பது போன்ற வடிவு.

குறி–14 : மீன் குறி. நேர்கோடுகளால் மீன் உருவைப் போல் வரையப்பட்டுள்ள குறி.

குறி–15 : ஏணிக்குறி. ஏணியைப்போல் இரு நெடுங் கோடுகளும் பல குறுக்குக் கோடுகளும் கொண்டது.

குறி–16 : விண்மீன் அல்லது நட்சத்திரக் குறி. நட்சத் திரம் போன்ற குறி.

குறி–17 : சூரியக்குறி. ஒரு வட்டமும் அதன் ஓரங்களி லிருந்து பல கோடுகளும் இழுக்கப்பட்டுச் சூரியனைப் போன்ற வடிவுடையது. சிலவற்றி னுள்ளே கூட்டல் குறி காணப்படுவதும் உண்டு.

குறி–18 : சுவஸ்திகக் குறி. நேர்கோடுகளாலோ இணை கோடுகளாலோ சுவஸ்திகம் போல் வரையப் பட்ட வடிவு.

குறி–19 : சீப்புக் குறி. ஒரு நெடுங்கோடும் அதன் ஒரு புறத்தே வரையப்பட்ட குறுக்குக் கோடுகளும் உள்ள வடிவு.

குறி–20 : இரு வளைவுகள். ஒன்றினுள் ஒன்ருகத் தோர ணம் போன்று அமைந்த இரு தொங்கு வளை யங்கள்.

குறி–21&22 : ஒன்றினுள் ஒன்ருக மூன்று அல்லது அதற்கு மேற்பட்ட தொங்கும் வளையங்கள்.

குறி–23 : நாமக்குறி. ஒரு தொங்கும் வளைவின் நடுவே ஒரு குத்துக்கோட்டைக் கொண்ட வடிவு.

குறி–24 : மூன்று கோடுகள் ஒரு முனையில் இணைந்து அதன் இரண்டு வெளிக்கரங்களிலும் நெளிந்து செல்லும் கோட்டை உடைய வடிவு.

குறி–25 : நெளிகோடு. நீட்டுவாக்கிலோ குறுக்கு வாக் கிலோ இருக்கும்.

குறி–26 : வட்டக்குறி.

குறி–27 : ஒரு குறுக்குக் கோட்டால் இணைக்கப்பட்ட இரு வட்டங்கள்.

குறி–28 : வட்டம் போன்ற வடிவினுள்ளே குறுக்குக் கோடு.

குறி–29 : வட்டத்தின் நடுவில் கூட்டல் குறி.

குறி–30 : கிரேக்க 'அ' எழுத்தை ஒத்த வடிவு.

குறி–31 : வில்லுக்குறி. ஆங்கிலத்தில் பெரிய அச்செழுத்து 'டி' போன்ற வடிவம்.

குறி–32 : வில்லம்புக்குறி. வில்லைப் பூட்டிய அம்பு போன்ற வடிவு.

குறி–33 : இருகோட்டுக் குறி. இணைகோடுகள்.

குறி–34 : முக்கோடுகள்.

குறி–35 : நான்கு கோடுகள்.

குறி–36 : ஐந்து கோடுகள்.

குறி–37, 38&39 : இரண்டு, மூன்று அல்லது மேற்பட்ட கோடுகளின் குறுக்கே ஒரு கோடு.

குறி–40 : கட்டக்குறி. இரண்டு அல்லது பல கோடுகளின் குறுக்கே பல கோடுகள் இழுப்பதால் பல கட்டங்கள் உள்ள வடிவு.

குறி–41 : தென்னை மட்டைக்குறி. இதில் நடுவில் ஒரு கோடும் இரு பக்கங்களிலும் சாய்கோடுகளும் வரையப்பட்டுள்ளன. தென்னை மட்டையைப் போல் இது காட்சியளிக்கிறது.

குறி–42 : செடிக்குறி. நடுவில் ஒரு கோடும் அதன் இருபுறமும் கிளைகள்போல் கோடுகளும் உள்ள வடிவம்.

குறி–43 : கூட்டல் குறியின் ஒவ்வொரு முனையிலும் ஒரு சிறு வட்டம் வரையப்பட்டிருக்கும். பழைய நாணயங்களிலும் இக்குறி காணப்படுகிறது. இதை உஜ்ஜயினிக் குறி என்று அழைப்பர்.

குறி–44 : இரு நெடுங்கோடுகளும் அவற்றின்மேல் ஓர் அம்பு முனையும்.

குறி–45 : ‘ய’ போன்ற வடிவு.

குறி–46 : ஓர் அம்பு முனையும் அதன் நடுவில் வலது கோட்டைத் தொடும் சாய்கோடும்.

குறி–47 : ஆங்கிலத்தில் பெரிய அச்செழுத்து ‘ஐ’ போன்ற வடிவு.

குறி–48 : கோலக்குறி. பெருக்கல் குறியின் இரு மருங்கும் இடைக்கோடுகள் உள்ள வடிவு.

குறி–49 : குஞ்சம் போன்ற குறி.

குறி–50 : இரண்டு சாய்வுக் கோடுகள். அவற்றின் முனைகளில் பல கிளைக்கோடுகள்.

குறி–51 : ‘ம’ குறி. பிராமி ‘ம’ போன்ற வடிவு. பெருக்கல் குறியின் அடி முனைகள் படுக்கைக் கோட்டால் இணைக்கப்பட்ட குறி.

குறி–52 : ஆங்கிலத்தில் பெரிய அச்செழுத்து ‘எம்’ போன்ற குறி.

குறி–53 : ஒரு தெளிவற்ற சிக்கலான குறி.

மேற்குறித்த பானைக்குறிகளை ஆராய்ந்த லால் பின்வருமாறு கருத்துரை வழங்குகிருர்.

சிந்துவெளிக் குறியீடுகளுக்கும் பெருங்கல் குறியீடு களுக்கும் நெருங்கிய ஒற்றுமை எதிர்பாராத ஒற்றுமையா அன்றி ஒரு பண்புக்கும் மற்ருெரு பண்புக்கும் ஏற்பட்ட தொடர்பால் வந்ததா என்ற கேள்வி ஆராய்ச்சியாளர் களிடம் தோன்றுவது இயல்பே. எதிர்பாராது ஏற்பட்டது எனக் கொண்டால் ஏறக்குறைய 90% உள்ள ஒற்று மையை மறக்கடித்ததாகும். மற்றச் சான்றுகளையும்

ஒப்புநோக்கும்போது சிந்துவெளிப் பண்பிற்கும் பெருங்கல் பண்பிற்கும் ஏதோ தொடர்பு இருந்திருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது.

லோத்தால், ரங்கப்பூர் என்ற இடங்களில் அண்மையில் நடந்த அகழ்வாராய்ச்சிகளிலிருந்து சிந்துவெளிப் பண்பு வடஇந்தியாவிலிருந்து தென்னாடு நோக்கிப் பரவியது என்பதற்குச் சான்றுகள் கிடைத்துவருகின்றன. நர்மதை வரையிலும் அப்பண்பு பரவியது என்பதற்கு இப்போது சான்றுகள் கிடைத்துள்ளன.

மத்திய இந்தியாவிலும் தக்காணத்தின் வடபகுதியிலும் நிலவிய செம்புக்காலப் பண்பாடு சிந்துவெளிப் பண்பாட்டிலிருந்து தோன்றியிருக்கக்கூடும் என்று கருதும் அளவிற்குச் சான்றுகள் வரத்தொடங்கியுள்ளன. இத்துடன் புதிய பண்பாட்டுக் கருத்துகளும் வந்து இணைந்திருக்கக்கூடும்.

செம்புக் காலப் பண்பிற்கும் பெருங்கல் பண்பிற்கும் உள்ள தொடர்பு என்ன? இவ்விரு பண்புகளுக்கும் சில முக்கிய வேறுபாடுகள் உண்டு. பெருங்கல் பண்பில் கறுப்பு–சிவப்பு மட்கலங்கள் காணக்கிடைக்கின்றன. எலும்புக் கூடுகள் முழு உருவில் இல்லை. இரும்புப் பொருள்கள் ஏராளமாகக் கிடைக்கின்றன. இவை செம்புக்காலப் பண்பில் இல்லை.

அண்மையில் நடைபெற்ற அகழ்வாராய்ச்சிகளிலிருந்து கறுப்பு–சிவப்பு மட்கலங்களை வனையும் தொழில் இந்தியாவில், இதுகாறும் கருதிவந்ததைக் காட்டிலும் மிகவும் தொன்மையானது என்று அறியலாம். கிலுந்து, நாவ்ததோலி என்னுமிடங்களில் கறுப்பு–சிவப்பு மட்கலங்கள் கிடைத்துள்ளன. இவற்றில் வெள்ளை வண்ணம் பூசப்பட்டும் உள்ளது. இவை கிறித்துவுக்கு 1,500 ஆண்டுகளுக்கு முற்பட்டவை. லோத்தால் என்ற இடத்திலும் கறுப்பு–சிவப்பு மட்கலங்கள் கிடைத்துள்ளன. இவை காலத்தால் இன்னும் முற்பட்டவை.

நாவ்ததோலியில் மிகவும் தொன்மையான இடங்களில் கறுப்பு-சிவப்பு மட்கலங்கள் கிடைத்தன. அவற்றில் வெள்ளை வண்ணம் பூசப்பட்டுள்ளது. ஆனால் அதே நாவ்தோலியில் காலத்தால் பிற்பட்ட இடங்களில் கறுப்பு-சிவப்பு மட்கலங்கள் கிடைத்தபோதிலும் அவற்றில் வெள்ளை வண்ணம் இல்லை.

தக்காணத்தில் பிரம்மகிரி, மஸ்கி என்ற இரண்டு இடங்களிலும் அகழ்வாய்வு செய்யப்பட்டது. இவற்றில் முழு எலும்புக்கூடுகள் உள்ள புதைகுழிகள் சில உள்ளன. இவற்றில் கல்வட்டம் ஏதுமில்லாத குழிகளும், கற்களைக்கொண்டு அமைக்கப்பட்ட சின்னங்களும் உண்டு. அதே போன்று துண்டு எலும்புகள் மட்டுமே உள்ள புதைபகுதிகளும் உள்ளன. இவற்றிலும் கற்களைக்கொண்டு அமைக்கப்பட்ட சின்னங்களும் கற்களே இல்லாத புதைபகுதிகளும் உள்ளன. இவற்றிலிருந்து செம்புக் காலப் பண்பும் பெருங்கல் காலப் பண்பும் இங்கு ஒருங்கே நிலவின என்று கொள்ளலாம். இவ்விரண்டு பண்புகளும் இங்கே தொடர்பு கொண்டன என்பது தெளிவு.

ஹஸ்திருபுரம், ஆலங்கிர்ப்பூர் ஆகிய இடங்களில் நடந்த அகழ்வாய்வில் வண்ணம் பூசிய சாம்பல் நிற மட்கலங்களுடன் இரும்பு கிடைத்துள்ளது. வண்ணம் பூசப்பட்ட சாம்பல்நிறப் பானைகளை ஆரியர்களே வழங்கியிருக்க வேண்டும் என்று கருதுபவர் உண்டு. ராஜஸ்தானத்தில் கங்காநகர் மாவட்டத்தில் சர்தார்கர் என்ற இடத்தில் வண்ணம் பூசப்பட்ட சாம்பல் நிற மட்கலங்கள் கிடைத்த அதே நிலையில் கறுப்பு-சிவப்பு மட்கலமும் கிடைத்துள்ளது.

வண்ணம் பூசப்பட்ட சாம்பல்நிற மட்கலங்களில் கீறல் குறிகள் காணப்படவில்லை. கறுப்பு-சிவப்பு மட்கலங்களில் இக்குறிகள் உள்ளன. ஆதலின் இவ்விரு கலங்களையும் வழங்கியவர்கள் ஒருவரோடொருவர் தொடர்பில்லாத தனித்தனிப் பண்பினர் என்று எண்ண

வேண்டியுள்ளது. காலப்போக்கில் இவர்கள் தொடர்பு கொண்டனர் என்பதற்குச் சோன்பூர், இராஜ்கட் ஆகிய இடங்களில் கிடைத்த பானை ஓடுகள் சான்று கூறு கின்றன.

## பானைக்குறிகள் எதைக்குறிக்கின்றன?

பல குயவர்கள் தங்களது பானைகளை ஒரே சூளையில் இடும்போது தங்கள் தங்கள் பானைகளைப் பிரித்து அறிந்துகொள்வதற்காகக் குறியீடுகள் இட்டுக் கொள்வது உண்டு. இதைக் 'குயவர் குறி' என்று கூறுவது மரபு. ஆனால் கறுப்பு–சிவப்புப் பானை ஓடு களில் காணப்படும் குறிகள் பெரும்பாலும் மட்கலங் களைச் சூளையில் சுட்டு எடுத்த பின்னர்க் கீறப்பட்ட குறிகளாகும். குயவர் குறியாயின் சூளையில் இடு வதற்கு முன்னர் இடப்பட்டிருத்தல் வேண்டும்.

மட்கலங்களை வாங்கிப் புழங்கியவர்கள் தங்களது உடைமை எனக் குறிக்கச் சிலவற்றில் குறி இடுவதுண்டு. இவற்றை உடைமைக்குறி என்று கூறலாம். ஆனால் கிடைத்துள்ள மட்கலங்களில் சில சுடுவதற்கு முன் இடப்பட்ட குறிகளாகவும் விளங்குகின்றன. மட்கலங் களைச் சுடுவதற்கு முன்னரே உரிமையாளர் உடைமைக் குறிகளை இட்டனர் என்று கொள்வதற்கில்லை. ஆதலின் இக்கீறல் குறிகளைக் குயவர் குறியாகவும் கொள்ளலாம். உடைமைக்குறி எனில் உடையவரின் பெயரையோ, குடியின் பெயரையோ இவை குறிக்கின்றனவா என்பது ஆராயத் தகுந்தது.

எது எப்படியிருப்பினும் தமிழ்நாட்டுப் பெருங்கல் கால மட்கலங்களில் உள்ள பல குறிகள் சிந்துவெளிக் குறிகளுடன் ஒத்துள்ளன என்பதும், பிராமி எழுத்து களில் சிலவற்றை ஒத்துள்ளன என்பதும் கருத்தில் கொள்ளல் தகும்.

# கருவிநூல் பட்டியல்—(Bibliography)

## இயல் 1


1. வில்ப்ரெய்ட் நோயலே — Dravidian Studies—A Review
   திராவிட கலாசார வரலாறு
   மொழி பெயர்ப்பு
   டி. எஸ். பட்டாபிராமன்

2. Boris Levin — *The Origin of the Earth and Planets*
   Foreign Languages Publishing House, Moscow
   1958

3. Charlesworth, J. K. — *The Quarternary Era*
   1957

4. Emiliani, C. — 'Paleotemperature Analysis of Core 280 and Pleistocene Correlations'
   *Jour. Geol.*
   1958, pp. 264-275

5. Flint, R. F. — *Glacial and Pleistocene Geology*
   Longmans
   1957

6. Frederick E. Zeuner — *The Pleistocene Period*
   Hutchinson Scientific & Technical, London
   1959

7. Kenneth P. Oakley & Helen M. Muir-Wood — *The Succession of life through Geological Time* The Trustees of the British Museum 1959

8. Krishnan, M. S. — *Geology of India and Burma* Higginbothams, P. Ltd. 1968

9. Kuenen — *Sea level and Crustal Warping* Geol. Soc. Amer. Special Paper : 62 1955

10. Kummel — *Earth History* McGraw Hill

11. Mikail Nesturkh — *The Origin of Man* Foreign languages Publishing house, Moscow 1959

12. Oakley, K. P. & Muir, H. M. — *The Succession of life through Geological time* Trustees of the British Museum 1958

13. Radhakrishna, B.P. — The Present status of Geological, Geophysical and Geochemical studies in the Dharwar region *Proc. Sym. on Upper Mantle Project* 1967, pp. 191–210

14. Roy Chapman Andrews — *In the days of the Dinosaurs* Random House, New York 1959

15. Saravanan, S. — **Geology and Structure of Tamilnad**
*The 21st International Geog. Cong. S. 27, Madras Symposium*
Dec., 1968

16. Wright, H. E. & Frey, D. G. — *The Quarternary of the United States*

## இயல் 2

1. தொல்காப்பியம்

2. சங்க இலக்கியம்

3. யாப்பருங்கல விருத்தி

4. இளங்குளம் குஞ்ஞன் பிள்ளை — பண்டைய கேரளம்
*தமிழ்ப்புத்தகாலயம், சென்னை-5*
1970

5. The Chief Conservator of Forests, Madras — *Forestry in Madras State*
1968

6. A. K. Dey — *Geology of India*
1939

7. *This is Tamil Nad*
Released on the occasion of the XXI International Geographical Congress, Madras Symposium.
1968

8. D. C. Sircar — *Cosmography and Geography in Early Indian Literature*
University of Calcutta
1966

## இயல் 3


| | |
|---|---|
| 1. அப்பாத்துரை, கா. | குமரிக்கண்டம் அல்லது கடல்கொண்ட தென்னாடு<br>திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை<br>1941 |
| 2. சுப்பிரமணிய ஐயர், ஏ. வி. | பண்டைத் தமிழ்நாடு<br>எஸ்.ஆர். சுப்பிரமணிய பிள்ளை திருநெல்வேலி<br>1970 |
| 3. Aiyappan, A. | *Report on the Socio-Economic Conditions of the Aboriginal Tribes of the Province of Madras*<br>Government Press, Madras<br>1948 |
| 4. Anantha Krishna Iyer, L. K. | *Lectures on Ethnography*<br>Calcutta<br>1925 |
| 5. Bagchi, P. C. (Tr.) | *Pre-Aryan and Pre-Dravidian in India*<br>University of Calcutta<br>1929 |
| 6. Balaratnam, K. (Ed.) | *Anthropology on the March*<br>The Book Centre, Madras<br>1963 |
| 7. Barnett, L. D. | Appendix II : Ethnographic and Linguistic Divisions of Modern India,<br>*Antiquities of India*<br>Punthi Pustak, Calcutta<br>1964 |

8. Bloch, Jules. *The Grammatical Structure of the Dravidian Languages*
Deccan College, Poona
1954

9. Bruce Foote, R. *Pre-Historic and Proto-Historic Antiquities of South India*
Government Press, Madras
1916

10. Burrow, T. *The Sanskrit Language*
Faber, London
1954

11. Caldwell, R. *A Comparative Grammar of the Dravidian Languages*
University of Madras
1956

12. Chatterjee, S.K. (1) *Dravidian*
Annamalai University
1964

13. Do. (2) Indo-Aryan and Hindi,
Lahore
1949

14. Do. (Ed.) (3) *Cultural Heritage of India*
Volume I
The Ramakrishna Mission,
Calcutta
1970

15. Dunn, L. C. (Ed.) *The Race Question in Modern Science*
UNESCO : Paris
1956

16. Ehrenfels, U. R. — *Kadars of Cochin*
Madras
1952

17. Emeneau, M. B. — *Dravidian Linguistics, Ethnology and Folklore*
Annamalai University
1967

18. Grierson, J. A. (Ed.) — *Linguistic Survey of India*
Volume IV
Munda and Dravidian Languages
Government Press, Calcutta
1906

19. Guha, B. S. — (1) *The Census of India,* 1931
Part-III:
Ethnographical Notes
Delhi
1935

20. Do. — (2) *The Racial Affinities of the People of India*
*Census Report,*
1931
Government of India Press,
Calcutta
1935

21. Do. — (3) *Racial Elements in Indian Population*
Oxford Pamphlets,
Bombay
1940

22. Haddon, A. C. — *The Wanderings of Peoples*
C. U. P.
1912

23. Hall, H. R. — *The Ancient History of the Near East*
Methuen, London
1952

24. Heras, Father, Rev. — *Studies in the Proto-Indo Mediterranean Culture*
Volume I.
Heras Institute of Indian History and Culture,
Bombay
1953

25. Holderness, T. W. — *Peoples and Problems of India*
London
1901

26. Hooton, E. A. — *Up from the Ape*
Oxford Book House, Delhi
1966

27. Hornell, J. — *The Origins and Ethnographical Significance of Indian Boat Designs*
Memoirs of Asiatic Society of Bengal,
Calcutta
1920

28. Hutton, J. H. — (1) *The Census of India*
Volume I., Pt. 3
Government Press,
Calcutta
1931

29. Hutton, J. H. — (2) *Man in India,* London 1937

30. Do. — (3) *Caste in India,* O.U.P., Bombay 1969

31. Kanakasabhai Pillai, V. — *The Tamils Eighteen Hundred Years Ago* Kazhagam, Madras 1956

32. Karmarkar, A. P. — *The Religious of India* Volume I Mira Publishing House, Lonavala 1950

33. Krishna Iyer, L. A. — (1) *Social History of Kerala* Volume I The Dravidian Book Centre, Madras 1968

34. Do. — (2) *Social History of Kerala* Volume II The Dravidian Book Centre, Madras 1970

35. Krishna Iyer, L. A. & Balaratnam, L. K. — *Anthropology in India* Bharatiya Vidhya Bhavan, Bombay 1961

36. Kroeber, A. L. — *Anthropology* Harcourt Brace, New York 1948

37. Lahovary, N. — *Dravidian Origins and the West*
Longmans, Madras
1962

38. Mahalingam, T. V. — *Nagas in Ancient History and Culture*
Journal of Indian History, Trivandrum
1965

39. Majumdar, D. N. — *Races and Cultures of India*
Kitabistan, Allahabad
N. D.

40. Majumdar, D. N. & Madan, T. N. — *An Introduction to Social Anthropology*
Asia Publishing House, Bombay
1960

41. Majumdar, R.C. (Ed.) — *The Vedic Age*
George Allen, London
1950

42. Nilakanta Sastri, K. A. — (1) *Foreign Notices of South India*
University of Madras
1972

43. Do. — (2) *Cultural Contacts between Aryans and Dravidians*
Manaktalas, Bombay

44. Pillay, K. K. — *A Social History of the Tamils*
University of Madras
1970

45. Ramachandra Dikshitar, V. R. — (1) *Pre-Historic South India* University of Madras 1951

46. Do. — (2) *Origin and Spread of the Tamils* Kazhagam, Madras 1971

47. Risley, H. H. & W. Crooke — *The People of India* *Census Report* Volume I 1901 Calcutta 1915

48. Robert Shafer — *Ethnography of Ancient India* Otto Harrassowitz Wiesbaden 1954

49. Sen, D. K. — *Ancient Races of India and Pakistan* *Ancient India* Bulletin of the Archaeological Survey of India. Nos. 20 & 21 1964-65

50. Smith, Elliot, G. — *The Diffusion of Culture* London 1938

51. Srinivasa Aiyangar, M. — *Tamil Studies* Madras 1914

52. Srinivasa Iyengar, P. T. — (1) *History of the Tamils*
C. Coomaraswamy Naidu
Madras
1929

53. Do — (2) *Stone age in India*
Government Press,
Madras
1926

54. Thurston, Edgar — (1) *Castes and Tribes of South India*
7 Volumes
Government Press, Madras
1909

55. Do. — (2) *Badagas and Irulas of the Nilgiris*
Government Press, Madras
1897

56. Do. — (3) *Ethnographic notes in Southern India*
Government Press, Madras
1906

57. Viswanatha, S. V. — *Racial Synthesis in Hindu Culture*
Kegan Paul, London
1928

## இயல் 4, 5

1. *Ancient India*
Bulletin of the Archaeological Survey of India
Nos. 3 (1947), 12 (1956)

2. *Indian Archaeology*
A Review 1960–61, 1962-63, 1963–64, 1964–65, 1967–68.

3. Bridget Allchin — *Stone-tipped Arrow*
Phoenix House, London
1966

4. Bridget and Raymond Allchin — *The Birth of Indian Civilization*
Penguin Books
1968

5. Raymond Allchin, F. — *Neolithic Cattle-Keepers of South India*
Cambridge
1963

6. Chester S. Chard — *Man in Pre-history*
MacGraw Hill Book Co., New York, etc.
1969

7. Grahame Clark, — *World Pre-history*
Cambridge
1969

8. Fairservis, W. A. — *The Roots of Ancient India*
George Allen & Unwin Ltd., London
1971

9. Robert Bruce Foote — *Indian Pre-historic and Proto-historic Antiquities*
Notes on their Ages and Distribution
Madras
1916

10. Leakey, L. S. B. — *Olduvai George*, 1951–61
Fauna and Background
Cambridge University
Press
1967

11. Raman, K. V. — Distribution Pattern of
Culture-trails in the
Pre and Proto-historic
Times in Madurai Region
*Aaraaichi*
Palayamkottai, Vol. I
1970, pp. 499–509

12. Sankalia, H. D. — *Pre-history and Proto-history of India and Pakistan*
University of Bombay
1962

13. Do. — Beginning of Civilization
in South India
*Second International Conference Seminar of Tamil Studies*
Madras 1968, Vol. I
pp. 27-38

14. Do. — *Science Today*
Bombay
Vol. 2, No. 10, April 1968
pp. 28–40

## இயல் 6

1. புறநானூறு (முர்ரே பதிப்பு)

2. மணிமேகலை
உ. வே. சா. பதிப்பு
1956

3. *Ancient India*
Bulletin of the Archaeological Survey of India
Nos. 2, 12 & 16

4. *The Archaeological Society of South India, Silver Jubilee Volume*
Madras
1962

5. *Archaeological Survey of India, Annual Report*
1902–03

6. *Indian Archaeology*
A Review
1967–68

7. *Journal of Hyderabad Archaeological Society*
1917

8. *Purattatva*
No. 3 (1969–70)
No. 4 (1970–71)

9. *Tamil Culture*
Vol. II

10. Allchin, Bridget and Raymond — *The Birth of Indian Civilization*
Penguin Books
1968

11. Banerjee, N. R. — *The Iron Age in India*
Delhi
1965

12. Daniel, Glyu — *The Megalith Builders of Western Europe*
Hutchinson
1958

13. Fairservis, W. A. — *The Roots of Ancient India*
George Allen & Unwin Ltd., London
1971

14. Gupta, S. P. — *Disposal of the Dead and Physical Types in Ancient India*
Delhi
1972

15. Gururaja Rao, B. K. — *The Iron Age in India*
University of Mysore
1972

16. Nagaraja Rao, M. S. — A Report on Hallur Excavations, *Proto-historic Cultures of the Thungabhadra Valley*
Dharwar
1971

17. Raman, K. V. — Distribution Pattern of Culture-trails in the Pre and Proto-historic Times in Madurai Region
*Aaraaichi*
Palayamkottai, Vol. I
1970, pp. 499–509

18. Rea., Alexander — *Catalogue of Pre-historic Antiquities from Adichanallur and Perumbair*
Madras







நிலப்படம் 1. கோண்டுவானு

மேலே உள்ள படம் : கார்பானிபெரசு ஊழியின் கடைப்பகுதி

இடையில் உள்ள படம் : இயோசீன் ஊழி

கீழே உள்ள படம் : பிலெஸ்டோசீன் ஊழியின் முதற்பகுதி. காண்க. பக்கம் 12

# இயோசீன் ஊழி



நிலப்படம் 2. குமரிக்கண்டம். காண்க. பக்கம் 25

நிலப்படங்கள் 4–10 இதனுடன் ஒப்புநோக்கத்தக்கவை



நிலப்படம் 4. பனி ஊழியில் வெளிப்பட்ட நிலப்பகுதி (இற்றைக்கு முன் 8 கோடி ஆண்டுகள்)

From "Ancient Temperatures" by Cesare Emiliani.



நிலப்படம் இரண்டுடன் இது ஒப்புநோக்கத்தக்கது




நிலப்படம் 5

இற்றைக்கு முன் $6\frac{1}{2}$ கோடி (இயல் 1-ல் 6 கோடி என்று குறிப்பிடப்பட்டுள்ளது) ஆண்டுகளுக்கு முற்பட்ட இடைப் பேரூழிக் காலத்தில் உலக நிலப்பகுதி இணைந்திருந்த நிலை

Courtesy to *Scientific American*, March 1969, Vol. No. 220, No. 3,
Article: Continental Drift and Evolution, p. 55.
Author: Bjorn Kurten.

நிலப்படம் இரண்டுடன் இது ஒப்புநோக்கத்தக்கது

1775—18

நிலப்படம் 6

இற்றைக்கு முன் 6½ கோடி (இயல் 1-ல் 6 கோடி என்று குறிப்பிடப்பட்டுள்ளது) ஆண்டுகளுக்குப்பின் கண்டப் பெயர்ச்சி நிகழ்ந்தபோது அமைந்திருந்த நிலப்பகுதி

I (Bjorn Kurten) have noted that an Oligocene (25 to 35 millions of years ago) primate of Africa may have been close to the line of human evolution. By Miocene (12 to 25 millions of years ago) times there were definite hominids in Africa, identified by various authorities as members of the genus Ramapitheous or the genus Kenyapithecus. Apparently these early hominids spread into Asia and Europe towards the end of the Miocene. The cycle of continental fragmentation and amalgamation thus seems to have placed an important part in the origin of man as well as of the other land mammals.

Courtesy to *Scientific American*, March 1969, Vol. No. 220, No. 3.

Article : "Continental Drift and Evolution" pp. 62 & 63 Author : Bjorn Kurten

நிலப்படம் இரண்டுடன் இது ஒப்புநோக்கத்தக்கது

நிலப்படம் 7

இமயமலை கடலுள் மூழ்கியிருந்தபோது நிலமாக இருந்து இமயமலை தோன்றியபோது அதன் ஒரு பகுதி கடலுள் மூழ்கிப்போனதைக் காட்டும் படம்

நன்றி : திரு. ஞா. தேவநேயப்பாவாணர் எழுதிய ஒப்பியன்மொழி நூல்,
முதன் மடலம், திரவிடம், முதற்பாகம் (தமிழ்) 1940

அதில், "By Kind permission of the Editor, July 29, 1934 (Illustrated weekly)"
என்னும் குறிப்பு உள்ளது

நிலப்படம் இரண்டுடன் இது ஒப்புநோக்கத்தக்கது

நிலப்படம் 8.
கோண்டுவானு நிலப்பகுதி
Book :
Pre-historic South India
(Sir William Meyer Lectures
1950–51)
Author :
V. R. Ramachandra
Dikshitar, M. A.
Published by
University of Madras, 1951
நிலப்படம் இரண்டுடன்
இது ஒப்புநோக்கத்தக்கது




நிலப்படம் 9. லெமூரியா (விரிந்திருந்த நிலை) நன்றி : பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரை, குமரிக்கண்டம் அல்லது கடல்கொண்ட தென்னாடு, கழக வெளியீடு, 2ஆம் பதிப்பு, 1972 & **W. Scott Elliot** - ***The Last Lemuria*****, Published by London Theosophical Publishing Society, 161, New Bond Street, W - 1904** நிலப்படம் இரண்டுடன் இது ஒப்புநோக்கத்தக்கது




நிலப்படம் 10. பிற்காலத்து லெமூரியா நன்றி: பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரை, குமரிக்கண்டம் அல்லது கடல்கொண்ட தென்னாடு, கழக வெளியீடு, 2ஆம் பதிப்பு, 1972 & W. Scott Elliot, *The Last Lemuria*, Published by London Theosophical Publishing Society, 161, New Bond Street, W-1904. நிலப்படம் இரண்டுடன் இது ஒப்புநோக்கத்தக்கது




வரைபடம் 1. பழைய கற்காலம்

கொர்த்தலை ஆற்றுப்படுகைகள் (இணைந்த குறுக்கு வெட்டுத் தோற்றம்). காண்க. பக்கம் 158




வரைபடம் 2
பழைய கற்காலம்

கைக்கோடரிகள்

காண்க. பக்கம் 163




வரைபடம் 3
பழைய கற்காலம்
கைக்கோடரிகள்
காண்க. பக்கம் 163




வரைபடம் 4. பழைய கற்காலம்
பிடியில் பொருத்திய கைக்கோடரி. காண்க. பக்கம் 163




வரைபடம் 5
பழைய கற்காலம்
கிழிப்பான்கள்
காண்க. பக்கம் 163




வரைபடம் 6
பழைய கற்காலம்
வெட்டிகள், சில்லுக்கருவிகள்
காண்க. பக்கம் 164




வரைபடம் 7

பழைய கற்காலம்

சுரண்டிகள்

காண்க. பக்கம் 171




வரைபடம் 8
பழைய கற்காலம்
சுரண்டிகள்
காண்க, பக்கம் 171




வரைபடம் 9
பழைய கற்காலம்

கடைக்கற்காலக் கருவிகள்
காண்க, பக்கம் 178




வரைபடம் 10

பழைய கற்காலம்

கடைக்கற்காலக் கருவிகள்

காண்க. பக்கம் 178




வரைபடம் 11. பழைய கற்காலம்
பிடியில் பொருத்திய கடைக்கற்காலக் கருவிகள்
காண்க. பக்கம் 179



வரைபடம் 12. புதிய கற்காலம்
கைக்கோடரி
காண்க. பக்கம் 189



வரைபடம் 14. புதிய கற்காலம்
தோண்டுதடியின் தலைக்கல். காண்க. பக்கம் 190



வரைபடம் 13. புதிய கற்காலம்
கல்வாய்ச்சி. காண்க. பக்கம் 190




வரைபடம் 15
புதிய கற்காலப் பொருள்கள் (பையம்பள்ளி)
காண்க. பக்கம் 191



வரைபடம் 16
புதிய கற்கால வீடுகள் (போலிகை). காண்க. பக்கம் 193



வரைபடம் 17
புதிய கற்கால மாட்டினம்
காண்க. பக்கம் 194



வரைபடம் 18
பெருங்கல் காலம்
இரும்புப் பொருள்கள்
காண்க, பக்கம் 220



வரைபடம் 19. பெருங்கல் காலம்
இரும்புப் பொருள்கள். காண்க. பக்கம் 220




வரைபடம் 20

பெருங்கல்கால மட்கலக் கீறல் குறிகள்

காண்க. பக்கம் 241

1775—21



ஒளிப்படம் 1. கற்கருவிகள்
இடை அல்லது கடைக்கற்காலம்
(தெ. கல்லுப்பட்டி, மதுரை மாவட்டம்) காண்க. பக்கம் 171




ஒளிப்படம் 2. கைக்கோடரி, புதிய கற்காலம்
(கோவில்பாளையம், கோவை மாவட்டம்) காண்க. பக்கம் 189



ஒளிப்படம் 3. கற்கருவிகள். புதிய கற்காலம்
(மதுரை, கோவை மாவட்டங்கள்) காண்க. பக்கம் 189




ஒளிப்படம் 4. கற்கருவிகள். புதிய கற்காலம
(பையம்பள்ளி, சித்தூர் மாவட்டம்) காண்க. பக்கம் 189



ஒளிப்படம் 5. கற்கருவிகள்

புதிய கற்காலம் (பையம்பள்ளி, சித்தூர் மாவட்டம்). காண்க. பக்கம் 189



ஒளிப்படம் 6. அகழாய்வுப்பகுதி ஊரிருக்கைச் சூழல்
புதிய கற்காலம் (பையம்பள்ளி, சித்தூர் மாவட்டம்). காண்க. பக்கம் 192




ஒளிப்படம் 7. வாழ்விடப் பாறையுடன் ஊரிருக்கைச் சூழல்
புதிய கற்காலம் (பையம்பள்ளி, சித்தூர் மாவட்டம்). காண்க. பக்கம் 192



ஒளிப்படம் 8. வீட்டு அடித்தளம். புதிய கற்காலம்
(பையம்பள்ளி, சித்தூர் மாவட்டம்). காண்க. பக்கம் 193





ஒளிப்படம் 9. கல்திட்டை. பெருங்கல் கால ஈமச்சின்னம்
(தாயினிப்பட்டி, புதுக்கோட்டை மாவட்டம்). காண்க. பக்கம் 201



ஒளிப்படம் 10
இடுதுளையோடுகூடிய கல்திட்டை
பெருங்கல் கால ஈமச்சின்னம்
(கரிக்கந்தாங்கல், வடார்க்காடு மாவட்டம்)
காண்க. பக்கம் 201




ஒளிப்படம் 11. இடுதுளேயோடுகூடிய கல்திட்டை
(நீலிகோயில் என்று வழங்கப்படுகிறது) பெருங்கல் கால ஈமச்சின்னம்
(திருவேலங்காடு, செங்கற்பட்டு மாவட்டம்). காண்க. பக்கம் 201



ஒளிப்படம் 12
ஈமத்தொட்டி
பெருங்கல் காலம்
(குன்னத்தூர், செங்கற்பட்டு மாவட்டம்)
காண்க. பக்கம் 203



1775—22



ஒளிப்படம் 13. ஈமத்தொட்டி. பெருங்கல் காலம்
(குன்னத்தூர், செங்கற்பட்டு மாவட்டம்). காண்க. பக்கம் 203





ஒளிப்படம் 14. ஈமத்தொட்டி உள்தோற்றம். பெருங்கல் காலம்
(குன்னத்தூர், செங்கற்பட்டு மாவட்டம்). காண்க. பக்கம் 203



ஒளிப்படம் 15. தொப்பிக்கல். பெருங்கல் கால ஈமச்சின்னம் (அரியன்னூர், கொச்சிப்பகுதி). காண்க. பக்கம் 205





ஒளிப்படம் 16. குடைக்கல். பெருங்கல் காலம் (சேரமாங்காடு, கொச்சிப்பகுதி). காண்க. பக்கம் 206




ஒளிப்படம் 17. குடைவரைத் தாழ்வரை. பெருங்கல் கால ஈமச்சின்னம் (களக்காடு, கொச்சிப்பகுதி). காண்க. பக்கம் 206



ஒளிப்படம் 18. குடைவரைத் தாழ்வரை
(போர்க்குளம், கொச்சிப்பகுதி)- காண்க. பக்கம் 206





ஒளிப்படம் 19. ஈமத்தாழி (உடைந்தது). உள்தோற்றம்
பெருங்கல் கால ஈமச்சின்னம்
(அமிர்தமங்கலம், செங்கற்பட்டு மாவட்டம்). காண்க. பக்கம் 207



ஒளிப்படம் 20
தாழியில் புதைக்கப்பட்டிருந்த ஈமப்பொருள்கள்
பெருங்கல் காலம்
(அமிர்தமங்கலம், செங்கற்பட்டு மாவட்டம்)
காண்க. பக்கம் 208




ஒளிப்படம் 21
மட்கல வகைகள்
பெருங்கல் காலம்
(கோவை மாவட்டம்). காண்க. பக்கம் 217



ஒளிப்படம் 22. மட்கல வகைகள். பெருங்கல் காலம்
(கோவை மாவட்டம்). காண்க. பக்கம் 217
Copy Right : Archaeological Survey of India



ஒளிப்படம் 23. மட்கல வகைகள். பெருங்கல் காலம்
(கோவை மாவட்டம்). காண்க. பக்கம் 217
Copy Right : Archaeological Survey of India



ஒளிப்படம் 24. மட்கல வகைகள். பெருங்கல் காலம்
(கோவை மாவட்டம்). காண்க. பக்கம் 217





ஒளிப்படம் 25. மட்கல வகைகள். பெருங்கல் காலம்
(கோவை மாவட்டம்). காண்க. பக்கம் 217



1775—23




ஒளிப்படம் 26

மட்கல வகைகள். பெருங்கல் காலம் (கோவை மாவட்டம்). காண்க. பக்கம் 217



ஒளிப்படம் 27

மட்கல வகைகள். பெருங்கல் காலம் (கோவை மாவட்டம்). காண்க. பக்கம் 217

**Copy Right: Archaeological Survey of India**




ஒளிப்படம் 28
மட்கல வகைகள். பெருங்கல் காலம் (கோவை மாவட்டம்). காண்க. பக்கம் 217




ஒளிப்படம் 29. மட்கல வகைகள். பெருங்கல் காலம் (கோவை மாவட்டம்). காண்க. பக்கம் 217





ஒளிப்படம் 30. மட்கல வகைகள். பெருங்கல் காலம் (கோவை மாவட்டம்). காண்க. பக்கம் 217



ஒளிப்படம் 31
மட்கல வகைகள்
பெருங்கல் காலம்
(கோவை மாவட்டம்)
காண்க. பக்கம் 217



ஒளிப்படம் 32
மட்கல வகைகள். பெருங்கல் காலம் (கோவை மாவட்டம்). காண்க. பக்கம் 217

**Copy Right: Archaeological Survey of India**



ஒளிப்படம் 33

மட்கல வகைகள். பெருங்கல் காலம் (கோவை மாவட்டம்). காண்க. பக்கம் 217



ஒளிப்படம் 34
மட்கல வகைகள். பெருங்கல் காலம் (கோவை மாவட்டம்). காண்க. பக்கம் 217




ஒளிப்படம் 35
சங்குச்சிப்பி மணிகள்
பெருங்கல் காலம்
(சானூர், செங்கற்பட்டு மாவட்டம்)
காண்க, பக்கம் 224



ஒளிப்படம் 36. மணி வகைகள். பெருங்கல் காலம்
(குன்னத்தூர், செங்கற்பட்டு மாவட்டம்). காண்க. பக்கம் 224





ஒளிப்படம் 37. சித்திர வேலைப்பாடுகொண்ட சங்கு. பெருங்கல் காலம்
(சானூர், செங்கற்பட்டு மாவட்டம்). காண்க. பக்கம் 224




ஒளிப்படம் 38
செதுக்கப்பட்ட சங்குக் காதணிகள்
பெருங்கல் காலம்
(சானூர், செங்கற்பட்டு மாவட்டம்.)
காண்க. பக்கம் 224



ஒளிப்படம் 39
கல்லாலான பொருள்கள்
பெருங்கல் காலம்
(சானூர், செங்கற்பட்டு மாவட்டம்.)
காண்க. பக்கம் 224

# அருஞ்சொல் ஆட்சி அகராதி

உயர்திணை :

ஆள் (1)
இனத்தவர் (2)

அஃறிணை :

இடம் :

ஆறு (3)
ஊர், நாடு, காடு (4)
மலை, கணவாய் (5)

காலம் :

காலப்பெயர் (6)
தோன்று காலம் (7)

பொருள் :

கல் வகை (8)
நாகரிகத் தொடர்புள்ளவை (9)
நூல் (10)
மொழி (11)

பிற : (12)

## 1. ஆள்

## 2. இனத்தவர்

## 3. ஆற்றுப் பெயர்



## 4. ஊர், கானம், நாடு ஆகியவற்றின் பெயர்கள்

## 5. மலைப் பெயர்களும் கணவாய்ப் பெயர்களும்



## 6. காலப் பெயர்

## 7. தோன்று காலம்

## 8. கல் வகை



## 9. நாகரிகத் தொடர்புள்ளவை



## 10. நூல்

## 11. மொழி



## 12. பிற

## நூலோடு நேரடித் தொடர்புடையோர் முகவரி

1. அப்பாத்துரையார், கா.,
   பன்மொழிப் புலவர், M.A. (English),
   M.A. (Tamil), L.T., Visharath (Hindi),
   முழுநேர உறுப்பினர்,
   சட்டத்துறை ஆட்சிமொழி ஆணையம்,
   அரசுத் தோட்டம்,
   சென்னை–600002.

2. அனுமந்தன், கி. ர.,
   M.A., M.S. (Wis. U.S.A.), Ph.D.,
   தலைமைப் பேராசிரியர்,
   வரலாற்றுத் துறை,
   மாநிலக் கல்லூரி,
   சென்னை–600005.

3. இராகவன், அ.,
   நுண்கலைச் செல்வர்,
   7 / 8, சொக்கலிங்கசாமி கோயில் தெரு,
   பாளையங்கோட்டை,
   திருநெல்வேலி மாவட்டம்.

4. இராமச்சந்திரன், சி. ஈ.,
   M.A., M. Litt.,
   துணைப் பேராசிரியர்,
   வரலாற்றுத் துறைத் தலைவர்,
   சென்னைப் பல்கலைக் கழகம்,
   சென்னை–600005.

5. சரவணன், ச.,
   M.Sc., Ph.D., F.M.S.,
   தலைமைப் பேராசிரியர்,
   நிலப்பொதியியல் துறை,
   மாநிலக் கல்லூரி,
   சென்னை–600005.

6. சுப்பராயலு, எ.,
M.A., M. Litt.,
பதிப்பாசிரியர்,
தமிழ்நாட்டு வரலாற்று வெளியீட்டகம்,
தமிழ் வளர்ச்சி இயக்ககம், குறளகம்,
சென்னை-600001.

7. செங்கைப்பொதுவன்,
புலவர், M.A., B.T.,
பதிப்பாசிரியர்,
தமிழ்நாட்டு வரலாற்று வெளியீட்டகம்,
தமிழ் வளர்ச்சி இயக்ககம், குறளகம்,
சென்னை-600001.

8. செல்லப்பன், சு.,
சிலம்பொலி, M.A., B.T.,
தனி அலுவலர் (ஆட்சி),
தமிழ் வளர்ச்சி இயக்ககம், குறளகம்,
சென்னை-600001.

9. தங்கவேலு, கோ.,
புலவர், M.A.,
பதிப்பாசிரியர்,
தமிழ்நாட்டு வரலாற்று வெளியீட்டகம்,
தமிழ் வளர்ச்சி இயக்ககம், குறளகம்,
சென்னை-600001.

10. திருநாவுக்கரசு, க. த.,
M.A. (Tamil), M.A. (History),
M. Litt., Dip. in. Lings.,
இணைப் பேராசிரியர்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
மையப் பல்தொழில் நுட்ப நிறுவன வளாகம்,
அடையாறு, சென்னை-600020.

11. நாகசாமி, இரா.,
M.A.,
இயக்குநர்,
தொல்பொருள் துறை, மந்தைவெளி,
சென்னை–600028.

12. பிள்ளை, கே. கே.,
M.A., D. Phil., D. Litt.,
மரபுவழிப் பண்பாட்டு நிலையம்,
சென்னைப் பல்கலைக் கழகம்,
சென்னை–600005.

13. மகாதேவன், கொண்டல் சு.,
B Sc., M.A.,
தமிழ் வளர்ச்சி இயக்குநர், குறளகம்,
சென்னை–600001.

14. மீனாட்சிசுந்தரனார், கா.,
M.A., Ph.D.,
முதல்வர்,
சிக்கண்ணை அரசினர் கலைக் கல்லூரி,
திருப்பூர், கோவை மாவட்டம்.

15. வரதராசனார், மு.,
M.A., B.O.L., Ph. D., D. Litt., (Ulster),
தலைவர்,
தமிழ்நாட்டு வரலாற்று வெளியீட்டகம்,
குறளகம், சென்னை–600001.

16. வேங்கடசாமி, மயிலை சீனி,
74, காரணீசுவரர் கோயில் தெரு,
மைலாப்பூர்,
சென்னை–600004.

